"வெண்மையான, சுத்தமான

# லக்ஸ் டாய்லட் சோப்பின்

நுரை மிகவும் மிருதுவானது, நறுமணம் கமழ்வது ..."

என்று கூறுகிறார்

## குமாரி கமலா




இந்தியாவில்
தயாரிந்தது



லக்ஸ் டாய்லட் சோப் இவ்வளவு வெண்மையாயிருப்பதின் காரணம் என்ன? அதை தயாரிக்க மிகவும் சுத்தமான எண்ணெய்களையே உபயோகிக்கப்படுகிறது என்பதுதான். குமாரி கமலா கூறுவதாவது: "எனது பூரண அழகு பராமரிப்பும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகிப்பதுதான். அதன் சுறுசுறுப்பான, மென்மையான நுரை ஆழப்புகுந்து சுத்தம்செய்து சருமத்தைப் பட்டுப்போல் மென்மையாகவும், தெளிவாகவும் வைத்திருக்கிறது. நீங்களும் அதை தினமும் உபயோகித்து உங்கள் வதனத்தையும் அழகாக வைத்துக்கொள்ளுங்கள். அதன் நறுமணத்தையும் நீங்கள் "கவும் விரும்புவீர்கள்!"

"... அதனால்தான் என் வதனத்தை தெளிவாகவும் மலர்ச்சியோடும் வைத்திருக்க லக்ஸ் டாய்லட் சோப்பையே நம்பியிருக்கிறேன்!"

**முக்கிய செய்தி!**

தலைமுதல் கால்வரை
கவர்ச்சி அளிக்க

**புதிய பெரிய சைஸிலும்**

இப்பொழுது கிடைக்கிறது!
இன்றே வாங்கி உபயோகியுங்கள்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகுதரும் சோப்**

I.TS. 428-50 TM

# கல்கி பொருளடக்கம்


மலர் 14 | 1954 அக்டோபர் 17 | ஜய ௵
இதழ் 12 | | ஐப்பசி 1




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# உங்கள் பற்களை சுத்தம் செய்ய இதோ ஒரு புதிய சிறப்பான முறை!

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை நிற 'கோலினஸ்' உங்கள் பற்களை வெண்மையாக்குவதுடன், பல் சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கவும் உதவுகிறது. உங்கள் சுவாசம் மணிக்கணக்கில் புதுமணம் கமழ விளங்குகிறது. இதன் ரகசியம் செழிப்பான 'கோலினஸ்' நுரையில்தான் அடங்கியுள்ளது. அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயில் பிரஷ் நுழையமுடியாத ஒவ்வொரு மூலைமுடுக்கிற்கும் எடுத்துச் செல்கிறது.



**எவ்வளவோ சிக்கனமானது**

'கோலினஸ்' நுரை மூலம் நீங்கள் அதிக பயனும் அடைகிறீர்கள். ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது. இப்பொழுதே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினஸ்' டூத்பேஸ்டை உபயோகிக்கத் தொடங்குங்கள்.

உங்கள் குழந்தைகளுக்கு **இலவசம்**

"நகைமுகனும் அவனுடைய பிராணி நண்பர்களும்" என்ற ரஸமான சித்திரக் கதைக்கு இப்பொழுதே எழுதுங்கள்:

நகைமுகன், இலாகா 50D
த. பெ. 541,
பம்பாய்.




'கோலினஸ்' புன்னகையில் ஆரோக்கியம் ததும்புகிறது

GK. 217 (5)




மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 12

# கடிதங்கள் கூறும் கதை!

பாகிஸ்தான் பிரதமர் ஜனாப் முகமது அலி அவசரம் அவசரமாக, விரைந்து பறந்து விழுந்தடித்துக் கொண்டு அமெரிக்காவுக்குச் சென்றுள்ளார்.

அமெரிக்க நண்பர்களைப் பார்ப்பதற்காக அவர் வெறும் கையுடன் செல்லவில்லை.

கட்டுக் கட்டாகக் காகித மூட்டைகளைக் கட்டிக் கொண்டு சென்றிருக்கிறார்.

தமக்கும் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் பல மாதங்களாக நடந்த கடிதப் போக்குவரத்து விவரங்களைச் சேகரித்துக் கொண்டு சென்றிருக்கிறார்.

சென்ற வருஷம் பாகிஸ்தான் அமெரிக்காவுடன் இராணுவ உதவி ஒப்பந்தம் செய்து கொண்டது அல்லவா?

அந்த ஒப்பந்தத்தின்படி அமெரிக்காவிலிருந்து கப்பலில் பாகிஸ்தானுக்குப் போர்த் தளவாடங்கள் ஏற்றுமதியாகத் தொடங்கி யிருக்கின்றன.

அவ்வாறு போர்த் தளவாடங்கள் ஏற்றிச் செல்லும் முதல் கப்பலை அமெரிக்காவிலிருந்து வழி அனுப்புவதற்காகவே ஜனாப் முகமது அலி அமெரிக்காவுக்குச் சென்றிருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

தாம் அமெரிக்காவுக்குப் போகும் சந்தர்ப்பம் பார்த்து பாகிஸ்தான் பிரதமர், தமக்கும் ஜவாஹர்லால்ஜிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்து விவரங்களைப் பத்திரிகைகளில் வெளியிட அனுமதி கோரினார்.

அதற்கு நேருஜி இணங்கவே, அவ்விருவரும் பரஸ்பரம் எழுதிய கடிதங்கள் சென்ற வாரம் சாங்கோபாங்கமாக வெளியாகி யிருக்கின்றன.

பாரத நாட்டுக்கு விரோதமாக அமெரிக்காவிலும் தாம் செல்லும் மற்ற நாடுகளிலும் பிரசாரம் செய்வதற்கு மேற்படி கடிதங்களை ஜனாப் முகமது அலி கருவியாக உபயோகிக்கலாம்.

சர்வ தேச அரசியலில் இந்தியாவின் நீதி நெறியையும் நேர்மையையும் நன்கு அறிந்த பிரமுகர்களும் பிரபல பத்திரிகைகளும் அமெரிக்காவில் இருப்பது போல், இந்தியாவைப் பற்றிச் சரிவர அறிந்து கொள்ளாமல், பித்தலாட்டச் செய்திகளுக்கும் துவேஷப் பிரசாரத்துக்கும் செவி மடுக்கும் ஒரு பெரிய கூட்டமும் இருக்கத்தான் செய்கிறது.

காஷ்மீர், பாகிஸ்தானைச் சேர்ந்த மாகாணம் என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள் அமெரிக்காவில் இருந்து வருகிறார்கள்.

"நேருஜி ஹிட்லரின் வழியைப் பின்பற்றிக் கோவாவைக் கபளீகரம் செய்யத் தீர்மானித்தார். அதற்கு இணங்க, இந்தியத் துருப்புகள் கோவாவைச் சூழ்ந்து கொண்டன. நல்ல வேளையாக உற்ற சமயத்தில் அமெரிக்காவும் பிரிட்டனும் தலையிட்டு அத்தகைய அக்கிரமம் நடைபெறாமல் தடுத்தன" என்று ஒரு பிரபல அமெரிக்கப் பத்திரிகையே சமீபத்தில் கூறியது எனில், துவேஷப் பிரசாரத்தினால் மனம் குழம்பிக் கிடக்கும் சாதாரண மக்களைப் பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை.

ஆனால் முகமது அலி-நேருஜி கடிதங்களை நேர்மைக் கண் கொண்டு பார்ப்போருக்கு உண்மை விளங்காமற் போகாது.

• • • •

இந்தியா-பாகிஸ்தான் தகராறுக்குக் காரணமான பிரச்னைகளில் முக்கியமாக மூன்றைக் குறிப்பிட வேண்டும்.

1. அகதிகள் சொத்து; 2. ஆற்றுத் தண்ணீர்; 3. காஷ்மீர் தகராறு.

இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்குச் சென்ற அகதிகளின் சொத்துக்களைக் காட்டிலும் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு வந்த அகதிகளின் சொத்துக்கள் பன்மடங்கு அதிகமானவை என்று கணக்கிடப் பட்டிருக்கின்றன.

# சமாதானத் தூதுவர் !




இந்தியப் பிரதமர் நேரு இந்த வாரம் சீனுவுக்குச் செல்கிருர்.

எனவே, பாகிஸ்தான் பிரதமர் அவ்விஷயத்தைக் குறித்துத் தாம் எழுதிய கடிதங்களில் மௌனம் சாதித்துள்ளார் !

ஆற்றுத் தண்ணீர்த் தகராறும் காஷ்மீர் பிரச்னையுமே இணுப் பூகமது அலி கடிதங்களில் முக்கிய இடம் பெற்றிருக்கின்றன.

இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்பட்ட போது, சிந்து நதிப் பிரதேச மண்டலத்தைச் சேர்ந்த ஆறு நதிகளில் சிந்து, ஜீலம், செனுப், ரவி இந்த நாலு நதிகள் பெரிதும் பாகிஸ்தானின் ஏகபோக பாத்தியமாயின. வியாஸ், ஸட்லெஜ் இந்த இரண்டு நதிகளின் தண்ணீர் மாத்திரமே இந்தியாவின் உபயோகத்துக்கு வந்தது.

சிந்துநதி மண்டலத்தைச் சேர்ந்த ஆறுகளில் போகும் பதினேழு கோடி ஏக்கர் அடி தண்ணீரில் ஆறரை கோடி ஏக்கர் அடி தண்ணீரைப் பாகிஸ்தான் உபயோகித்துக் கொள்கிறது.

இந்தியாவோ வெறும் தொண்ணூறு லட்சம் ஏக்கர் அடி தண்ணீரை, அதாவது பாகிஸ்தானைக் காட்டிலும் ஏழில் ஒரு பங்குக்குக் குறைவான தண்ணீரைத் தான் உபயோகித்துக் கொண்டு வருகிறது.

மீதி ஒன்பதரைக் கோடி ஏக்கர் அடி தண்ணீர் யாதொரு பயனுமின்றி, யாராலும் உபயோகிக்கப் படாமல் கடலில் போய்ச் சேருகிறது. எனவே, வியாஸ், ஸட்லெஜ் நதிகளின் தண்ணீரினுல் பூரண பலனை அடைவதற்காக இந்திய சர்க்கார் பக்ரா அணைக்கட்டை நிர்மாணிக்கத் தொடங்கினர்.

லட்சக்கணக்கான மக்களின் வாழ்வுக்கு இன்றியமையாத இந்த நல்ல காரியத்தையே இப்போது பாகிஸ்தான் ஆட்சேபித்து வருகிறது.

ராஜஸ்தான், பெப்சு, கிழக்கு பஞ்சாப் முதலிய மாகாணங்களில் உள்ள கோடிக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கும் மக்களுக்கும் மேற்படி தண்ணீரே உயிர்நாடி ஆகும்.

பாகிஸ்தானின் உண்மையான தேவைக்குச் சிந்து நதித் தண்ணீர் மாத்திரமே போதுமானது.

இந்தியாவைப் போல் பாகிஸ்தானும் அணைக்கட்டு நிர்மாணித்தல் போன்ற ஆக்க வேலைகளில் கவனம் செலுத்தி யிருக்குமாயின், மாபெரும் சிந்து நதித் தண்ணீரின் பூரண பலன் இதற்குள் பாகிஸ்தானுக்குக் கிடைத்திருக்கும்.

ஆனல் பாகிஸ்தான் சர்க்கார் அதற்கு வழி தேடாமல், இந்த ஆற்றுத் தண்ணீர்ப் பிரச்னையை இந்தியாவுக்கு விரோதமாக உள்நாட்டிலும் வெளி நாடுகளிலும் பிரசாரம் செய்வதற்கு முக்கிய கருவியாக உபயோகித்து வருகின்றனர்.

வியாஸ், ஸட்லெஜ் நதிகளின் தண்ணீரை இந்தியா அடியோடு தடுத்து விடவில்லை.

அப்படியிருந்தும் மேற்படி தண்ணீரை இந்தியா தடுத்து விட்டதாயும். அதனல் பாகிஸ்தானில் ஏராளமான மக்கள் உணவுக்குக் கஷ்டப்படும் படியான பரிதாப நிலைமை ஏற்பட்டிருப்பதாயும் பாகிஸ்தான் பொய்ப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிறது. இந்த அக்கிரமத்தை நேருஜி பாகிஸ்தான் பிரதமருக்குச் சுட்டிக் காட்டி யிருக்கிருர்.

இவ் விஷயமாக இந்தியா, பாகிஸ்தான் இஞ்ஜினீர்களுடன் இரண்டரை வருஷ காலம் விவாதித்து உலக பாங்கி செய்த முடிவையும் பாகிஸ்தான் ஒப்புக் கொள்ளவில்லை என்பதையும் நேருஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிருர்.

உலக பாங்கி செய்த முடிவு இந்தியாவுக்குச் சாதகமானது என்று கூற முடியாது. அப்படியிருந்தும் ஆற்றுத் தண்ணீர்ப் பிரச்னை விஷயமாகச் சமரசம் ஏற்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தியா அந்த முடிவை ஒப்புக் கொண்டது.

ஆனால் பாகிஸ்தான் சர்க்காரின் வக்கிரபுத்தி அந்தத் தீர்ப்பைக் கூட ஒத்துக் கொள்ள இடம் கொடுக்கவில்லை.

## கண்ணாடி போல் காட்டுகின்றன

குதிரை கீழே தள்ளியதுமின்றிக் குழியும் பறித்தது போல, பாகிஸ்தான் காஷ்மீர் மீது அக்கிரமமாகப் படையெடுத்ததுடன் அதில் ஒரு பகுதியை இன்றும் ஆக்கிரமித்துக் கொண்டு அட்டகாசம் செய்து வருகிறது.

ஐ. நா. சபை நியமித்த மத்தியஸ்தர்கள், காஷ்மீர் பிரச்னை இந்தியாவும் பாகிஸ்தானும் தங்களுக்குள் தீர்த்துக் கொள்ள வேண்டிய விஷயம் என்று கூறிக் கை விரித்து விட்டனர்.

அதற்கிணங்க பாகிஸ்தான் பிரதமர் ஜனாப் முகமது அலியும் நேருஜியும் காராச்சியிலும் புது டில்லியிலும் சந்தித்துப் பேசியதன் பலனாக, பொதுவாக இந்தியா-பாகிஸ்தான் தகராறுகளும் குறிப்பாகக் காஷ்மீர் பிரச்னையும் தீருவதற்கு வழி பிறந்தது என்ற நம்பிக்கையும் உண்டாயிற்று.

ஆனால் அத்தகைய சூழ்நிலையைப் பாகிஸ்தான் பிரதமர், திடீரென்று அமெரிக்காவுடன் இராணுவ உதவி ஒப்பந்தம் செய்து கொண்டதன் மூலம் முட்டிச்சுவராக்கி விட்டார்.

சமீபத்தில் 'ஸியாட்டோ' உடன்படிக்கையில் பாகிஸ்தான் கையெழுத்திட்டதன் விளைவாக இந்தியா—பாகிஸ்தான் உறவில் மேற் கொண்டு சிக்கல் ஏற்பட்டுள்ளது என்பதையும் நேருஜி தமது கடிதத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்.

போதாக்குறைக்கு, இந்தியாவுடன் போர் செய்து முடிவு காண வேண்டும் என்று பாகிஸ்தானில் நடந்து வரும் ஆவேசப் பிரசாரத்தையும் நேருஜி சுட்டிக் காட்டியுள்ளார்.

இத்தகைய சூழ்நிலையில் மேற்கொண்டு பாகிஸ்தானுடன் சமரசப் பேச்சு நடத்துவதால் என்ன பலன் ஏற்பட முடியும் என ஜவாஹர்லால்ஜி கேட்டிருப்பதற்குப் பாகிஸ்தான் பிரதமரால் சரியான பதில் கூற முடியவில்லை.

இவ்வாறாக, நேருஜி—முகமது அலி கடிதங்கள் இந்திய சர்க்காரின் நேர்மையை, சமரச மனப்பான்மையை, சமாதான ஆர்வத்தைக் கண்ணாடி போல் உலகத்துக்குக் காட்டுகின்றன.

பாகிஸ்தான் சர்க்காரின் பிடிவாதத்தை, விதண்டா வாதத்தை, கெட்ட எண்ணத்தை உலகம் அறிய அம்பலப் படுத்துகின்றன.

# மூன்றரை லட்சம் மக்களுக்கு விடுதலை!

பிரான்ஸ் தேசத்துப் பிரதம மந்திரி பிரான்ஸிஸுக் பிரான்ஸின் புகழ் மேலும் ஓங்கியிருக்கிறது. பிரஞ்சுப் பிரதமர் ஸ்ரீ மெண்டெஸ் பிரான்ஸ், ஏழு ஆண்டுகளாக நடந்த இந்தோசீனப் போர் முற்றுப் பெறுவதற்கு உதவியாக இரண்டொரு மாதங்களுக்கு முன் ஜினிவாவில் ஏற்பட்ட ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். இப்போது இந்தியாவில் பிரான்சுக்குச் சொந்தமாக உள்ள திட்டுப் பிரதேசங்கள் சம்பந்தமாகவும் இந்தியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளார். இந்தோசீனப் போரும் இந்தியத் திட்டுப் பிரதேசப் பிரச்னையும் எழுந்த பின் பிரான்சில் பிரதம மந்திரி பதவி வகித்த ராஜதந்திரிகள் ஸ்ரீ பிரான்ஸைக் காட்டிலும் வயதில் மூத்தவர்கள், அனுபவத்தில் மேம்பட்டவர்கள். அப்படியிருந்தும் இந்தோசீன, இந்தியத் திட்டுப் பிரச்னைகளைத் தீர்க்கும் நல்ல புத்தி அவர்களுக்கு உண்டாகவில்லை; அந்த வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

உலகத்தில் பிரான்சுக்குச் சொந்தமான காலனி பிரதேசங்கள் ஏராளமாக இருக்கின்றன. மேற்படி காலனிகள் உலக அமைதிக்கே குந்தகமாக இருந்து வருகின்றன. இந்தியாவில் உள்ள காலனிகளில் தங்களுக்கு இருக்கும் ஆதிக்கத்தைப் பிரஞ்சு சர்க்கார் கைவிடத் தீர்மானித்ததன் மூலம், உலகத்தில் உள்ள மற்றக் காலனிகளுக்கும் அதே உரிமை, அதாவது அந்நியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை அடையும் உரிமை உண்டு என்பதை ஒத்துக் கொள்வதாக ஏற்படுகிறது அல்லவா!

தென்னிந்தியாவில் மொத்தம் இருநூறு சதுர மைல் விஸ்தீரணமும் மூன்றரை லட்சத்துக்கு மேற்பட்ட ஜனத் தொகையும் உள்ள பிரஞ்சு இந்திய மக்கள் யாவரும் அந்நியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை அடையப் போகிறார்கள்.

இந்தியாவில் பிரிட்டிஷார் கடைசியாக வந்த அந்நியர்களாயிருப்பினும், அவர்கள் சிறந்த ராஜதந்திரிகளாதலால் காலப் போக்கை நன்கு உணர்ந்து முதலிலேயே இந்தியாவிலிருந்து வெளியேறி விட்டார்கள். அவர்களுக்கு முன் இந்தியாவுக்கு வந்த பிரஞ்சுக்காரர்களுக்கு இப்போது தான் ஞானோதயம் உண்டாயிற்று. எனவே, முதலில் இந்தியாவில் காலடி வைத்த போர்ச்சுகீசியர்கள் கடைசியிலாவது வெளியேறுவதைத் தவிர வேறு வழி எதுவுமில்லை என்பதைக் காலதாமதமின்றி உணர்ந்து கொள்வார்களாக!

# புரிந்த உதவி பலன் தந்தது

க்ஷயரோகத்தின் கொடுமைக்கு உள்ளாகி, சில மாதங்களுக்கு முன் பெருந்துறை ஸ்ரீ ராமலிங்கம் க்ஷயரோக வைத்திய சாலையில் சேர்க்கப்பட்ட ஸ்ரீ டி. கே. ராஜகோபாலனும் அவரது மனைவி ஸ்ரீமதி சாந்தாவும் பூரண குணம் அடைந்து புது தம்பதிகளாகச் சென்ற 30-9-54ல் வெளியே வந்துள்ளனர் என்பதை அறிய ''கல்கி'' பத்திரிகை நேயர்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.

''க்ஷயரோக வைத்தியசாலைகளில் கட்டணமின்றி இடம் கிடைக்கவில்லை. இந் நிலையில் நாங்கள் நிர்க்கதியாக இறக்க வேண்டியதுதானா!'' என்ற நிலையில் மேற்படி தம்பதிகள் இருந்தனர். ஸ்ரீ ராஜகோபாலன் அவ்வாறு ''கல்கி''யில் எழுதியிருந்த கடிதத்தைக் கண்ணுற்றுப் பல அன்பர்கள் பொருள் உதவி புரிய முன் வந்தனர்.

பல ஸ்தாபனங்களைப் பற்றியும் விசாரித்த பின்னர், ஸ்ரீ ராஜகோபாலன் தம்பதிகள் சென்ற மார்ச்சு மாதம் 29-ந் தேதி ஸ்ரீ ராமலிங்கம் க்ஷயரோக வைத்தியசாலையில் சேர்க்கப்பட்டார்கள். மேற்படி வைத்தியசாலை நிர்வாகிகள் இத் தம்பதிகளின் ஏழ்மையையும் நிர்க்கதியான நிலையையும் கருதி, ஓரளவு சலுகை காட்டித் தங்கள் வைத்திய சாலையில் சேர்த்துக் கொண்டு சிகிச்சை செய்தார்கள். ஒரு வருஷ காலம் அந்த வைத்திய

சாலையில் மேற்படி தம்பதிகள் இருப்பது அவசியமாயிருக்கலாம் என்று முதலில் கருதப்பட்டது. ஆனால் அன்பர்களின் ஆசியும் வைத்தியசாலை நிர்வாகிகளின் அன்பும் ஆதரவும் சேர்ந்து ராஜகோபாலன் தம்பதிகளுக்கு ஆறே மாத காலத்தில் சுமார் எழுநூறு ரூபாய் செலவில் பூரண குணம் ஏற்படும்படி செய்து விட்டன.

| | |
|---|---|
| அன்பர்கள் அனுப்பிய நன்கொடைகளின் மொத்தத் தொகை ... | ரூ. 483—14—0 |
| "கல்கி" காரியாலய "நிர்வாகிகள் அளித்த உதவித் தொகை ... | ரூ. 247— 2—0 |
| ஆக மொத்தம் ... ... | ரூ. 731— 0—0 |

இந்த ரூ. 731ல், ஸ்ரீ ராஜகோபாலன் சொந்தச் செலவுக்காக ரூ. 50 கொடுக்கப்பட்டது. அது போக மீதி ரூ. 681ம் பெருந்துறை வைத்திய சாலைக்கு அனுப்பி வைக்கப்பட்டது. மேற்படி வைத்தியசாலை நிர்வாகிகள் 29-3-54 லிருந்து 30-9-54வரை முடிய ஸ்ரீ ராஜகோபாலன் தம்பதிகளின் சிகிச்சைக்காக ஏற்பட்ட செலவு ரூ. 650—5—0 எடுத்துக் கொண்டார்கள். மீதி ரூ. 30—11—0 அத் தம்பதிகளிடம் கொடுக்கப்பட்டதாக வைத்தியசாலை மெடிகல் சூபரின்டென்டு கடித மூலம் நமக்கு அறிவித்துள்ளார்.

க்ஷயரோகத்திலிருந்து விடுதலை பெற்று வைத்தியசாலையிலிருந்து வெளிவந்த ஸ்ரீ டி. கே. ராஜகோபாலன் "கல்கி" காரியாலயத்துக்கு நேரில் வந்து நன்கொடையாளர்களுக்குத் தமது பரிபூரண நன்றியைச் செலுத்தி விட்டுச் சென்றார்.

நோயினால் பீடிக்கப்பட்டுத் திக்கற்ற நிலையில் இருந்த ஸ்ரீ ராஜகோபாலன் தம்பதிகளுக்குப் பொருள் உதவி புரிந்த அன்பர்களுக்கும், அவர்களுக்குச் சலுகை காட்டிக் குறைந்த செலவில் சிகிச்சை செய்த ஸ்ரீ ராமலிங்கம் க்ஷயரோக வைத்தியசாலை நிர்வாகிகளுக்கும், முக்கியமாக அந்த வைத்தியசாலைக் காரியதரிசி ஸ்ரீ ஆர். கே. வெங்கடசாமி அவர்களுக்கும் நமது மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

குறிப்பு: நன்கொடை அளித்த அன்பர்களின் பெயர் விவரங்கள் ஏற்கெனவே வெளியாகியுள்ளன. அதன் பிறகு கிடைத்த தொகைகளின் விவரம் பின்வருமாறு:—ஸ்ரீ எம். வெங்கடராமன், சிவகெங்கை, ரூ. 11; ஸ்ரீமதி என். மங்களம் அம்மாள், சிவகெங்கை, ரூ. 10; ஸ்ரீ ஏ. கே. கிருஷ்ணசாமி ராவ், மதுரை, ரூ. 10; ஸ்ரீ ஆர். சாந்தாராம், புனா, ரூ. 10; ஸ்ரீமதி என். சுந்தரி, ஜாம்ஷெட்பூர், ரூ. 5; ஸ்ரீ ஆர் கிருஷ்ணமூர்த்தி, நைரோபி, கென்யா, ரூ. 5; ஸ்ரீமதி ஏ. ராமலக்ஷ்மி அம்மாள், திருபுவனம் கோட்டை, ராமநாதபுரம், ரூ. 5; ஸ்ரீ வெ. மாணிக்கம் செட்டியார், பாகனேரி, ரூ. 2; ஸ்ரீ அ. குபேரானந்தர், திருப்பாசேத்தி, ரூ. 2.

## பழைய பிளேட்டு! - பழைய பாட்டு!




பாகிஸ்தான் பிரதமர் முகம்மது அலி, காஷ்மீர் விஷயமாக மீண்டும் முன்மாதிரியே அமெரிக்காவில் இந்தியாவைப் பற்றிய அவதூறுப் பிரசாரம் செய்து வருகிறார்!




## அத்தியாயம் 13

## “கடைசித் தடவை”

போலீஸ் இன்ஸ்பெக்டரும் ஜமீன்தாரின் மைத்துனர் சொக்கையாவும் ஏதேதோ தங்களுக்குள் தணிந்த குரலில் பேசிக் கொண்டார்கள்.

“எப்படியும் இங்கு வராமல் போக மாட்டான்.”

“இராத்திரி முழுவதும் காவல் போட்டு வைக்க வேண்டியதுதான்.”

“ஆனால் காவல் போட்டிருப்பது தெரியக் கூடாது!”

இப்படிச் சில பேச்சுக்கள் அரை குறையாகப் புரிந்தும் புரியாமலும் சந்திரமணியின் காதில் விழுந்தன.

அதே சமயத்தில் போலீஸ் சேவகர்கள் பங்களாவின் எல்லா அறைகளிலும் மூலை முடுக்குகளிலும் தேடி விட்டு வந்து “பங்களாவுக்குள் இல்லை” என்று தகவல் தெரிவித்தார்கள்.

“அது எதிர்பார்க்கக் கூடியதுதான். வந்தால், இராத்திரிதான் வருவான்!” என்றார் சொக்கையா.

“ஒருவேளை வந்து சொல்லிக் கொண்டு போய் விட்டானோ, என்னமோ?”

“அதற்கு அவகாசம் இல்லை. அவன் வந்து போயிருந்தால், இந்தப் பூலோக ரம்பை இப்படி ஒன்றுமே தெரியாதவள் போல் உட்கார்ந்து குழந்தைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருக்க மாட்டாள்!”

இந்தப் பேச்சு காதில் விழுந்தபோது சந்திரமணிக்குச் சொக்கையாவை எரித்து விடலாமா என்னும் அளவுக்குத் துவேஷம் உண்டாயிற்று.

பிற்காலத்தில், “அவனும் அவன் வைரக் கடுக்கனும்!” என்று என் தாயார் பல்லைக் கடித்துக் கொண்டு பலமுறை சொல்லியது என் மனத்தில் பதிந்திருக்கிறது. என் அன்னை வேறு யாரைப் பற்றியும் அவ்வளவு துவேஷத்துடனும் கோபத்துடனும் பேசி நான் கேட்டதில்லை.

ஆனால் அந்தச் சமயத்துக்குத் தன் கோப தாபத்தை யெல்லாம் அடக்கிக் கொள்ள வேண்டிய அவசியத்தைச் சந்திரமணி உணர்ந்தாள். அவளுடைய கணவர் பேரில் அவர்கள் சுமத்திய குற்றம் உண்மையா யிருக்குமென்று அவள் நம்பவே இல்லை. இது ஏதோ தன் மாமன்மார்களின் சூழ்ச்சி, தன்னையும் அவரையும் பிரித்து விடுவதற்காக இப்படி ஒரு அபாண்டத்தைச் சுமத்துகிறார்கள் என்று எண்ணினாள். உண்மையைத் தெரிந்து கொள்ளுவதற்கு அவளுடைய ஆர்வம் அதிகமாயிற்று.



சொக்கையாவின் முகத்தைப் பார்ப்பதற்கே அவள் விரும்பவில்லை. போலீஸ் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "ஐயா! வீணாக என் மனத்தை ஏன் கலங்கச் செய்கிறீர்கள்? என்னதான் நடந்தது என்று சொல்லுங்கள்! எதற்காக அவரைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"அடடா; மனசு கலங்கியா போய் விட்டது? தெளிய வைத்து விட்டால் போகிறது! அதற்கு நீயும் கொஞ்சம் உதவி செய்ய வேண்டும். கேட்டதற்குப் பதில் சொல்ல வேண்டும். காளி சொரூபம் எடுத்துக் கத்தக் கூடாது! இன்று காலையில் காசிலிங்கம் எத்தனை மணிக்கு வெளியில் போனான்? உன்னிடம் என்ன சொல்லி விட்டுப் போனான்?"

"காலை சுமார் எட்டு மணிக்குக் கிளம்பினார். 'ஜமீன்தாருடன் வேட்டைக்காக மலைக்குப் போகிறேன். இருட்டுவதற்குள் வந்து விடுகிறேன்' என்றார். 'வேட்டைக்கா போகிறீர்கள்? இன்றைக்கு வேண்டாமே!' என்றேன்."

"ஏன் வேண்டாமென்று சொன்னாய்?"

"அவர் வேட்டைக்குப் போவதே எனக்குப் பிடிக்கவில்லை. வாயில்லாப் பிராணிகளைச் சுட்டுக் கொல்வது பாவம் அல்லவா? ஜமீன்தார் முதலிய பெரிய மனிதர்களுடைய சிநேகம் வேண்டாம் என்பதும் என் எண்ணம்."

"பண்ணையாரின் சிநேகம் இருக்கும் போது, ஜமீன்தாரின் சிநேகம் என்னத்துக்கு?" என்றார் சொக்கையா.

சந்திரமணி சிறிது ஆத்திரத்தோடு, "ஆமாம்; பண்ணையாரின் கால் தூசி பெற மாட்டார்கள் மற்றவர்கள்! இன்றைக்கு அவரும் ஊரில் இல்லை. திருநந்திபுரத்துக்குப் போயிருக்கிறார். ஆகையால் 'நீங்கள் போக வேண்டாம்' என்று சொல்லிப் பார்த்தேன்......"

"அதற்குக் காசிலிங்கம் என்ன சொன்னான்?"

"அவருக்கும் வேட்டைக்குப் போவது பிடிக்கவில்லை என்று சொன்னார். ஜமீன்தாருடன் வேட்டைக்குப் போவது அநேகமாய் இன்றைக்குக் கடைசித் தடவையாக இருக்கும் என்றார்."

இவ்விதம் சொல்லி வாய் மூடும்போது, சந்திரமணியின் மனத்தில் 'ஐயோ! இது என்ன உளறுகிறோம்?' என்று தோன்றி விட்டது. வேட்டைக்குப் போவது இதுவே கடைசித் தடவை என்பதற்கு இவர்கள் வேறு விபரீதமான அர்த்தம் கற்பித்துக் கொள்ளலாம் அல்லவா?

அவள் சந்தேகத்தை உறுதிப்படுத்துவது போல் மாப்பிள்ளை ஜமீன்தார் சொக்கையா, "கேட்டீர்களா, இன்ஸ்பெக்டர்? இதை எழுதிக் கொள்ளுங்கள். வேறு என்ன சாட்சி வேண்டும்?" என்றார்.

இன்ஸ்பெக்டர் மீசையைத் தடவிக் கொண்டு சொக்கையாவைப் பார்த்து, "நீங்கள் கொஞ்சம் குறுக்கிடாமல் சும்மா இருந்தால் நல்லது" என்றார்.

சந்திரமணிக்கு நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. அவள் கண்களில் ஜலம் ததும்பியது. தன்னுடைய யோசனையற்ற பேச்சினால் தன் கணவரின் உயிருக்கே உலை வைத்து விட்டோம் என்று எண்ணிப் பதைபதைத்தாள்.

அந்தப் பதைபதைப்பு எதிரில் நின்றவர்கள் மீது கோபமாக மாறியது.

இன்ஸ்பெக்டர் சந்திரமணியைப் பார்த்துச் சாந்தமாக "சரி, அப்புறம்? ஜமீன்தாருடன் வேட்டைக்குப் போவது இதுதான் கடைசித் தடவையாக இருக்கும் என்றான். அதற்கு நீ என்ன சொன்னாய்?" என்று கேட்டார்.

சந்திரமணி எரிச்சலுடன், "என்னை ஒன்றும் கேட்க வேண்டாம். கேட்டாலும் நான் பதில் சொல்ல முடியாது. ஒன்றும் தெரியாத பெண்பிள்ளைகளிடம் வந்து வாயைப் பிடுங்கி வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறீர்களே? உங்களுக்கு வெட்கமாக இல்லையா? போங்கள், ஐயா! புருஷர்கள் வீட்டுக்கு வந்த பிறகு வாருங்கள்!" என்றாள்.

"ஆமாம், ஆமாம்! நாங்கள் போவதாகத்தான் உத்தேசம்! உங்கள் வீட்டில் விருந்து சாப்பிடுவதற்கு வரவில்லை!" என்றார் இன்ஸ்பெக்டர்.

பிறகு அவரும் சொக்கையாவும் ஏதோ தங்களுக்குள் இரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். இன்ஸ்பெக்டர் போலீஸ் சேவகர்கள் எல்லாரையும் அருகில் அழைத்தார். அவர்களிடம் மெதுவாக ஏதோ சொன்னார். சேவகர்கள் வெவ்வேறு திசையை நோக்கிப் போகத் தொடங்கினார்கள்.

அச்சமயத்தில் 'ஜலக்' 'ஜலக்' என்ற சத்தத்துடன் இரட்டை மாட்டு வண்டி வரும் சத்தம் கேட்டது.

வண்டி பங்களாவை நெருங்கி வந்தது. இன்ஸ்பெக்டர் போலீஸ் சேவகர்களைப் பார்த்து "நில்லுங்கள்!" என்று உத்தரவிட்டார்.

வண்டி பங்களா வாசலில் வந்து நின்றது. பண்ணையார் மந்திரமூர்த்தி வண்டியிலிருந்து இறங்கினார்.

சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, "நமஸ்காரம். ஏது எல்லாரும் கூட்டமாக வந்திருக்கிறீர்கள்? ஏதாவது விசேஷம் உண்டா?" என்று கேட்டார்.

"விசேஷம் ஒன்றுமில்லை!" என்றார் இன்ஸ்பெக்டர்.

"விசேஷம் ஒன்றுமில்லாமலா வந்திருப்பீர்கள்? அதுவும் மாப்பிள்ளை மகாராஜாவும் நீங்களும் சேர்ந்து வருவது என்றால், அது சாதாரண காரியமா யிருக்குமா? நெருப்பும் காற்றும் சேர்ந்தது போல அல்லவா சேர்ந்து வந்திருக்கிறீர்கள்?" என்றார் பண்ணையார்.

மந்திரமூர்த்தியைக் கண்டதும் சிறிது தைரியம் கொண்ட சந்திரமணி பங்களாவின் வாசற்படிக்கு வந்து, "அப்பா! இவர்கள் ஏதோ பயங்கரமான கேள்வியெல்லாம் கேட்கிறார்கள்!" என்று விம்மிக் கொண்டே சொன்னாள்.

"பெண் பிள்ளைகளிடம் போய்க் கேள்வி கேட்பானேன்? அவர்களை வீணில் பயமுறுத்துவானேன்? கேட்க வேண்டியதை என்னிடம் கேளுங்கள்; சொல்லுகிறேன்!" என்றார் மந்திரமூர்த்தி.

இன்ஸ்பெக்டர் சீக்கிரம் அங்கிருந்து போக வேண்டிய அவசியத்தை உணர்ந்தார். காசிலிங்கம் பங்களாவுக்கு வரும்போது அங்கே போலீஸ்காரர்கள் கும்பலாக நின்றால் காரியம் கெட்டுப் போய்விடும். ஆகையால் பண்ணையாரிடம் பேச்சை வளர்த்துவதில் பயனில்லை என்று நினைத்தார்.

"அப்படி யொன்றும் பிரமாத காரியம் இல்லை. காசிலிங்கம் எங்கே என்று கேட்டேன். அதற்குத்தான் இந்தப் பெண் இவ்வளவு தடபுடல் செய்கிறாள்!"

"காசிலிங்கம் எங்கே என்று கேட்பதற்கு இவ்வளவு பேர் கும்பலாகச் சேர்ந்து வரவேண்டுமா?"

"அவசியம் ஏற்பட்டதால்தான் வந்தோம். காசிலிங்கத்தைப் பற்றி உமக்கு ஏதாவது தெரியுமா?"

"ஏதாவது என்ன? அவரைப் பற்றி எவ்வளவோ தெரியும். உமக்கு என்ன தெரிய வேண்டும்?"

"இப்போது காசிலிங்கம் எங்கே என்று தெரியுமா?"

"ஓ! பேஷாய்த் தெரியும். இந்த நிமிஷம் காசிலிங்கம் எங்கே இருக்கிறான் என்று தெரியும்."

"பின்னே, சொல்லுங்கள்!"

"நீங்கள் எதற்காகக் கேட்கிறீர்கள் என்று சொன்னால், நானும் அவன் இப்பொழுது எங்கே இருக்கிறான் என்பதை விவரமாகச் சொல்கிறேன்."

"உம்முடன் விளையாடுவதற்கு எனக்கு நேரமில்லை. காசிலிங்கம் எங்கே என்று உடனே சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லா விட்டால், உம்மைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போக வேண்டி யிருக்கும்."

"அப்படியா? ஏதாவது என் பேரில் வாரண்ட் இருக்கிறதா? இருந்தால் அதை முதலில் காட்டுங்கள்!"

"ஓகோ! வாரண்டு காட்டினால்தான் வருவீரா? கையிலே விலங்கு பூட்டி அழைத்துக் கொண்டு போனால்?"

"இன்ஸ்பெக்டர்! இந்த ஊருக்கு நீர் புதிது! என்னைப் பற்றி அதிகம் தெரியாது போலிருக்கிறது. கோர்ட் விவகாரங்களில் மூன்று லட்சம் ரூபாய் ஒழித்தவன் நான். மரியாதையாக நடந்து கொண்டு உமது உத்தியோகத்தைக் காப்பாற்றிக் கொள்ளும்!" என்று பண்ணையார் கம்பீரமாகக் கூறினார்.

அவர்கள் ஏதேதோ சம்பந்தமில்லாத அற்ப விஷயங்களைப் பற்றிப் பேசிக் காலம் கழித்துக் கொண்டிருப்பதாகச் சந்திரமணிக்குத் தோன்றியது.

"அப்பா! இவர்கள் நம் ஊர் ஜமீன்தாரைப் பற்றி ஏதோ பயங்கரமான செய்தி சொல்லுகிறார்கள். ஜமீன்தாரை யாரோ சுட்டுக் கொன்று விட்டார்களாம்! அது உண்மையா என்று கேளுங்கள், அப்பா!" என்றாள்.

பண்ணையாருக்கு ஏற்பட்ட திகிலையும் பயங்கரத்தையும் அவர் முகம் காட்டியது. அதுவரைக்கும் அவர், போலீஸார் வந்து விசாரிப்பது வேறு விஷயம் பற்றி என்று எண்ணிக் கொண்டிருந்தார்.

மாப்பிள்ளை ஜமீன்தார் சொக்கையாவைப் பார்த்து, "இது உண்மையா? நம்ப முடியவில்லையே?" என்றார்.

"நம்ப முடியாத காரியந்தான் நடந்து விட்டது!" என்றார் சொக்கையா. பிறகு போலீஸ் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "இவரிடம் எல்லா விவரங்களையும் சொல்லி விடுவது நல்லது!" என்றார்.

இரண்டு பேருமாகச் சேர்ந்து ஒருவாறு விஷயத்தைச் சொல்லி முடித்தார்கள்.

• • •

அன்று காலையில் சுமார் ஒன்பது மணிக்கு ஜமீன்தாரும் காசிலிங்கமும் வழக்கம்போல் தலைக்கு ஒரு துப்பாக்கியை எடுத்துக் கொண்டு மலைக்குக் கிளம்பினார்கள். அவர்களுடன் வேறு



யாரும் அன்று போகவில்லை. ஜமீன்தார் மத்தியானச் சாப்பாடு மலைக்கு அனுப்பும்படி உத்தரவு இட்டு விட்டுச் சென்றார். அப்படியே சாப்பாடு கொண்டு போனவன் மலை மேல் ஒரு மணிக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே சுனைக்குப் பக்கத்தில் காட்டு இலாக்கா சேவகன் தங்கும் குடிசை ஒன்று இருந்தது. அங்கே சாப்பாடு கொண்டு போய் வைத்துக் கொண்டு காட்டிலாகா சேவகனுடன் அந்த வேலைக்காரன் பேசிக் கொண்டிருந்தான். வெகு நேரமாகியும் ஜமீன்தாராவது காசிலிங்கமாவது வந்து சேரவில்லை. இரண்டு மணி சுமாருக்குத் துப்பாக்கி வேட்டுத் தீர்க்கும் சத்தம் 'டுமீல்' 'டுமீல்' என்று இரண்டு தடவை கேட்டது. சமீபத்திலேதான் எங்கேயோ இருக்கிறார்கள், காட்டு முயலைச் சுட்டிருக்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டு இரண்டு பேரும் குடிசைக்கு வெளியில் வந்து அவர்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டு நின்றார்கள். அரை மணி நேரம் ஆகியும் யாரும் வராமற் போகவே, ஜமீன்தாருடைய ஆளுக்குக்




கவலையாகப் போய் விட்டது. தான் நேரங் கழித்துச் சாப்பாடு கொண்டு வந்ததாக ஜமீன்தார் கோபித்துக் கொள்ளப் போகிறாரே என்று எண்ணித் துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்ட திசையை நோக்கித் தேடிக் கொண்டு போனான். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவன் "ஐயையோ! அண்ணே! ஓடிவாங்க!" என்று கத்தினான். காட்டிலாகா சேவகனும் போய்ச் சேர்ந்தான். ஜமீன்தார் மீது துப்பாக்கி குண்டு பாய்ந்து அவர் தரையிலே விழுந்து கிடந்தார். விலாவிலே ஒரு குண்டும் தோளிலே ஒரு குண்டும் பாய்ந்திருந்தது. இரண்டு பேருமாக ஜமீன்தாரைத் தூக்கிக் கொண்டு போய்க் குடிசையில் போட்டார்கள். ஜமீன்தாரின் ஆளை அங்கேயே விட்டு விட்டுக் காட்டிலாகா சேவகன் அவருடைய அரண்மனைக்கு ஓடி வந்து செய்தியைச்

சொன்னன். அருவியில் குளித்து விட்டு அப்பொழுதுதான் திரும்பி வந்திருந்த மாப்பிள்ளை ஜமீன்தார் ஈரத் துணியுடன் விழுந்தடித்து ஓடினர். மற்றவர்களும் போனர்கள. போலீஸ் ஸ்டேஷனுக்குத் தெரிந்து போலிஸ் இன்ஸ்பெக்டரும் சேவகர்களுடன் போனர். ஜமீன்தார் விழுந்து கிடந்த இடத்துக்குச் சுற்று முற்றும் தேடிப் பார்த்ததில் சிறிது தூரத்தில் ஒரு மரத்தினடியில் காசிலிங்கம் கொண்டுபோன துப்பாக்கி கிடந்தது. அதைப் போலிஸார் எடுத்துக் கொண்டார்கள். ஜமீன்தாரைத் தூக்கிக் கொண்டு வந்து சாயங்காலம் ஐந்தரை மணிக்கு அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்கள். அரண்மனையில் ராணிமார்களும் குழந்தைகளும் ஆள் படைகளும் சிப்பந்திகளும் அழுது புலம்பிக் கொண்டிருக்கிறர்கள்.

போலீஸார் தங்களுடைய கடமையைச் செய்வதற்காகக் காசிலிங்கத்தைத் தேடிக் கொண்டு வந்தார்கள். போலிஸுக்கு உதவி செய்வதற்காகச் சொக்கையாவும் வந்தார். கட்டவன் காசிலிங்கமா யிருக்க வேண்டும் என்று சந்தேகம் ஏற்படுவது இயல்புதானே? அவன் இன்னும் வீடு திரும்பவில்லை என்பது சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்துகிறது அல்லவா?

* * *

விவரங்களை யெல்லாம் மிக்க கவனமாகவும் கவலையுடனும் பண்ணையார் மந்திரமூர்த்தி கேட்டுக்கொண்டு வந்தார். குழந்தை அழுவதைக் கூடப் பொருட்படுத்தாமல் சந்திரமணியும் கேட்டுக் கொண்டிருந்தாள். நடுவில் இரண்டு முறை மந்திரமூர்த்தி "நீ ஒன்றும் கவலைப்படத் தேவையில்லை, அம்மா! குழந்தையைப் போய்ப் பார்!" என்று சொல்லிப் பார்த்தார். சந்திரமணி அந்த இடத்தை விட்டுப் போகவில்லை.

எல்லாம் கேட்ட பின்னர் மந்திரமூர்த்தி, "ரொம்பக் கஷ்டமான காரியம். ஜமீன்தார் மிக்க நல்ல மனிதர். அவருடன் வழக்குகளை யெல்லாம் ராஜி செய்துகொண்டு சிநேகமாய்ப் போய்விட ஆசை கொண்டிருந்தேன். அந்த ஆசை நிராசையாகப் போய்விட்டது!" என்றார்.

"கொலை செய்த குற்றவாளியைக் கண்டு பிடிப்பதற்கு ஒத்தாசை செய்வது உங்களுடைய கடமை அல்லவா?" என்றார் இன்ஸ்பெக்டர்.

"அதற்குச் சந்தேகமில்லை. ஆனல் குற்றவாளியை வேறு இடத்தில் தேட வேண்டும். காசிலிங்கம் இன்று இரவு இங்கு வரவும் மாட்டார்; ஜமீன்தாரைச் சுட்டவன் காசிலிங்கமாகவும் இருக்க முடியாது" என்றார் மந்திரமூர்த்தி.

"அது எப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?"

"இன்ஸ்பெக்டர், ஸார்! இன்று மத்தியானம் இரண்டரை மணிக்குக் காசிலிங்கம் திருநந்திபுரத்தில் துராக்கிரஹமாக வீடு புகுந்து அடிதடி கலாட்டா செய்ததாகக் கைது செய்யப் பட்டார்; ஸப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் மூன்றரை மணிக்கு ஆஜர் செய்யப் பட்டார்; இன்றிரவு திருநந்திபுரம் ஸப்-ஜெயிலில் காசிலிங்கத்துக்கு ஜாகை!" என்று சொன்னர் மந்திரமூர்த்தி.

## அத்தியாயம் 14

# கலாட்டா வழக்கு

நான் இந்தக் கதையை ஒழுங்காக, முன்பின் தொடர்களை நன்கு அமைத்து எழுதவில்லை யென்பதை உணர்கிறேன். பின்னல் நடந்ததை முன்னலும், முன்னல் நடந்ததைப் பின்னலும் சொல்லுகிறேன். ஆனலும் நான் யாருக்காக முக்கியமாய் இதை எழுதுகிறேனே, அவர் சரியாகப் புரிந்து கொள்வார். என் பெற்றேர்களின் காலத்துச் சம்பவங்களிலிருந்து எனக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் எழுத வேண்டும் என்று அவர் சொன்னர் அந்த நிகழ்ச்சிகளுக்கும் நான் இப்போது அடைந்திருக்கும் பரிதாப நிலைமைக்கும் காரண காரியத் தொடர்பு இருக்கக் கூடும் என்று அவர் கருதுகிறர். அதனலேயே என்னை வளர்த்த உத்தம புருஷர் மந்திர மூர்த்தியின் மூலம் நான் கேட்டிருந்ததை யெல்லாம் ஞாபகப்படுத்திக் கொண்டு எழுதுகிறேன். என் பெற்றேர்களின் கதை முடியும் கட்டமும் நெருங்கி விட்டது.

* * *

காசிலிங்கம் திருநந்திபுரம் சப் ஜெயிலில் இருக்கிறர், இரண்டரை மணிக்கே அவர் அங்கே போய்ச் சேர்ந்து விட்டார் என்பதற்குப் போலிஸ் சாட்சியமே இருக்கிறது என்று தெரிந்ததும் போலீஸ்

இன்ஸ்பெக்டரும் சொக்கையாவும் பெரும் ஏமாற்றம் அடைந்து போலீஸ் சேவகர்களையும் அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள்.

பிறகு மந்திரமூர்த்தி வாசற்படியிலேயே விம்மிக் கொண்டு நின்ற சந்திரமணியை அழைத்துக் கொண்டு வீட்டுக்குள்ளே போனார். சந்திரமணி அழுது கொண்டிருந்த குழந்தையை மடியில் எடுத்துப் போட்டுக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

"இந்தக் குழந்தை பிறந்த வேளை, இப்படி யெல்லாம் ஆக வேண்டுமா?" என்று விம்மிக் கொண்டே சொன்னாள்.

"சந்திரமணி! கடவுளுடைய சித்தத்தை அற்ப அறிவு படைத்த நம்மால் எளிதில் கண்டு பிடிக்க முடிவதில்லை. இன்று இங்கு வந்து சேரும் வரையில் நானும் காசிலிங்கம் இப்படிச் செய்து விட்டானே, உன்னிடம் அவனைப் பற்றிய செய்தியை எப்படிச் சொல்லப் போகிறோம் என்று கவலைப்பட்டுக் கொண்டு வந்தேன். நாம் நன்மையென்று நினைப்பது சில சமயம் தீமையாக முடிகிறது; நாம் தீமையென்று நினைப்பதிலிருந்து நன்மை விளைகிறது. இன்றைக்கு மட்டும் காசிலிங்கம் கலாட்டா செய்ததாக அங்கே கைதியாகி யிராவிட்டால், அவன்மேல் இந்தப் பாவிகள் கொலைக் குற்றம் சுமத்தியிருப்பார்கள். சொக்கையாவும் புதிய போலீஸ் இன்ஸ்பெக்டரும் ரொம்ப சிநேகம் என்று சொன்னார்கள். அது உண்மைதான் என்று இன்றைக்குத் தெரிந்தது. காசிலிங்கத்தைப் பற்றிய செய்தி சொன்னதும் அவர்கள் முகம் போன போக்கைப் பார்க்க வேண்டுமே? எதையோ பறிகொடுத்தவர்களைப் போல் ஆகி விட்டார்கள். போலீஸ் இன்ஸ்பெக்டர் ஏமாற்றம் அடைவதாவது நியாயம். சுலபமாகக் குற்றவாளியைக் கண்டு பிடித்துக் கொடுத்த பெருமை இல்லாமற் போய் விட்டதே என்று வருத்தப்படுவது இயற்கை. இந்தச் சொக்கையாவுக்கு என்ன வந்தது? ஜமீன்தார் செத்துப் போனது பற்றிக் கூட அவ்வளவு வருத்தப் பட்டிருக்க மாட்டான்போலிருக்கிறது!......"

"அப்பா! என்னவெல்லாமோ பேசிக் கொண்டிருக்கிறீர்களே? கடைசியாக இவரைப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டார்கள் அல்லவா? எப்படி நீங்கள் அவரை விட்டு விட்டு வந்தீர்கள்?" என்று விம்மிக் கொண்டே கேட்டாள்.

"உன்னிடம் வந்து தகவல் சொல்லி விட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன். வந்தது நல்லதாய்ப் போயிற்று. இல்லா விட்டால் இங்கே இவர்கள் உன்னை ரொம்பத் தொல்லைப்படுத்தியிருப்பார்கள். பலபல வென்று பொழுது விடிந்ததும் புறப்பட்டுப் போகிறேன். ஜாமீனில் விடுதலை செய்ய மனுப்போடும்படி வக்கீலுக்கு ஏற்கனவே சொல்லி விட்டு வந்தேன். நாளை சூரியன் மறைவதற்குள் காசிலிங்கத்தை அழைத்துக் கொண்டு வந்து சேருகிறேன்!" என்றார் பண்ணையார் மந்திரமூர்த்தி.

"அப்பா! நானும் உங்களோடு வருகிறேன்! அழைத்துப் போங்கள்!" என்றாள் சந்திரமணி.

"அது மட்டும் கூடாது. காசிலிங்கத்துக்கு உன்னைக் கண்டால் கோபம் அதிகமாகி விடும். கோர்ட்டிலேயே ஏதாவது ரகளை செய்தாலும் செய்து விடுவான். என்னிடம் முக்கியமாகச் சொல்லி அனுப்பியிருக்கிறான். அவள் வருகிறேன் என்று பிடிவாதம் பிடிப்பாள், அழைத்து வரவேண்டாம் என்று. இன்னும் என்ன சொன்னான், தெரியுமா? 'இந்தப் பயல்கள் என்னைச் சிறையில் அடைத்து விட்டுச் சந்திரமணியைத் தனியாக மடக்கிக் கொண்டு காட்டின இடத்தில் கையெழுத்துப் போடச் செய்து விடலாம் என்று எண்ணி யிருந்தார்கள். அது இனிமேல் நடக்காது. சந்திரமணியைப் பார்த்துக் கொள்ள நீங்கள் இருக்கிறீர்கள். எனக்குக் கொஞ்சமும் இனிமேல் பயமில்லை. சந்திரமணியை மட்டும் தைரியமாக இருக்கச் சொல்லுங்கள். இவர்களை ஒரு கை பார்த்து விடுகிறேன். கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டி விடுகிறேன்!' என்றெல்லாம் உற்சாகமாகப் பேச ஆரம்பித்து விட்டான். ஸப் ஜெயிலுக்குள் இருந்தபடியே இவ்வளவும்......"

"அப்பா! அதற்காகத்தான் நான் முக்கியமாக வருவதாகச் சொல்கிறேன். இன்னும் ஏதாவது ஏடாகூடமாய்ச் செய்து தொல்லையை விலைக்கு வாங்கிக் கொள்ளப் போகிறார் என்று பயமாயிருக்கிறது. நான் உங்களுடன் வந்தால்......"

"நாளைக்கு ஜாமீனில் விடுதலை செய்து இருட்டுவதற்குள் இங்கே அழைத்து வந்து விடுகிறேன். நீ செய்ய வேண்டிய போதனைகளை யெல்லாம் இங்கேயே செய்து கொள்ளலாம்!"

"என்னிடம் மலைக்கு வேட்டையாடப் போவதாகச் சொல்லி விட்டுப் போனவர்,

திருநந்திபுரத்துக்கு எப்படிப் போனார்? அங்கே என்ன நடந்தது? உங்களுக்கு எப்படித் தெரிந்தது? எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லுங்கள்!" என்று சந்திரமணி கேட்டான்.

* * *

காசிலிங்கம் அன்று காலை ஜமீன்தாருடன் வேட்டைக்குப் புறப்பட்டார் அல்லவா? போகும் வழியில் ஜமீன்தார் அவரிடம் தாம் கேள்விப்பட்ட ஒரு செய்தியைச் சொன்னார். திருநந்திபுரம் ஈசுவர மூர்த்தியின் வீட்டுக்குச் சந்திரமணியின் மாமன்மார்கள் மறுபடியும் வந்திருக்கிறார்கள். சந்திர மணிக்குக் குழந்தை வேறு பிறந்து விட்டபடியால் அவளைத் திருப்பி அழைத்துப் போவதில் அவர்களுக்கு இப்போது விருப்பமில்லை. காசிலிங்கத்துடன் ஏமாந்து ஓடி வந்து விட்டதாகவும், தாயாரின் சொத்துக்குப் பாத்தியதை கொண்டாடுவதில்லை என்றும் எழுதி வாங்கிக் கொண்டு போக வந்திருக்கிறார்கள். அதற்காக ஏதோ சூழ்ச்சித் திட்டம் தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஜமீன்தார் கூறினார். காசிலிங்கத்துக்கு ஆத்திரம் வந்து விட்டது. 'இப்படியே திருநந்தி புரத்துக்குப் போய் ஒரு பாடம் கற்பித்து வருகிறேன்' என்று கிளம்பினார். ஜமீன்தார் அவரைத் தடுக்கவில்லை. இன்னும் கொஞ்சம் தூபம் போட்டு விட்டார். "ஆமாம்; நீ போவதுதான் நல்லது. 'எதிர்த்துத் தாக்குவதே சரியான பாதுகாப்பு முறை' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். அவர்கள் சூழ்ச்சி செய்து திட்டம் போடும் வரையில் நாம் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. அப்படியே, அந்த ஈசுவர மூர்த்தி பக்கத்தில் இருந்தால், அவன் மீசையைப் பிடித்துக் குலுக்கிக் கன்னத்தில் இரண்டு அறை கொடுத்து விட்டு வா! வெளியில் சொல்லிக் கொள்ளவே வெட்கப் படுவான்! இதை மட்டும் நீ செய்து வந்தாயானால், பிறகு என்ன வந்தாலும் நான் பார்த்துக் கொள்கிறேன்! எத்தனை பணம் செலவானாலும் சரிதான்!" என்றார். இப்படித் தூண்டி விட்டு அனுப்பியவர் பாவம், அன்று சாயங்காலம் வரை தாம் உயிரோடிருக்கப் போவதில்லை என்பதை அறிந்திருக்கவில்லை.

குங்குமத்துறையிலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் ரயில் நிலையம் இருந்தது. அங்கே போய் ரயில் மார்க்கமாகவும் திருநந்திபுரம் போகலாம்; பஸ் ஏறியும் போகலாம். பஸ் புறப்படத் தயாராக இருந்தபடியால் காசிலிங்கம் பஸ்ஸில் ஏறிக் கொண்டார்.

மத்தியானம் பன்னிரண்டரை மணிக்குத் திருநந்திபுரம் போய்ச் சேர்ந்தார். அங்கே பீமவிலாஸ் ஹோட்டலில் வடை, பாயஸம், தயிருடன் ஸ்பெஷல் சாப்பாடு போடச் சொல்லிச் சாப்பிட்டார். பிறகு உற்சாகமாக ஈசுவரமூர்த்தியின் மாளிகைக்குச் சென்றார்.

வாசலில் நின்ற வில்லை போட்ட சேவகனிடம், 'காசிலிங்கம் வந்திருப்பதாக' உள்ளே போய்ச் சொல்லும்படி கூறினார்.

சேவகன் திரும்பி வந்து "எந்தக் காசிலிங்கம் என்று எஜமான் கேட்டு வரச் சொன்னார்!" என்றான்.

"டிரில் மாஸ்டர் காசிலிங்கம் வந்திருப்பதாகச் சொல்; இல்லாவிட்டால், சர்க்கஸ்காரக் காசிலிங்கம் என்று சொல்!" என்றார் காசிலிங்கம்.

சேவகன் உள்ளேபோய்த் திரும்பி வந்து "என்ன காரியம் என்று கேட்டு வரச் சொன்னார்!" என்றான்.

"காரியத்தை உன் எஜமானிடம் நேரில்தான் சொல்ல முடியும்."

"காரியத்தைச் சொல்லாவிட்டால் இப்போது பார்க்கச் சௌகரியப் படாது என்று சொன்னார்! உன்னைப் போன்ற சோம்பேறிப் பசங்களுடன் பேசுவது தானா எஜமானுக்கு வேலை என்று கேட்கிறார்!" என்றான் சேவகன்.

தன்னைப் பார்க்கத் தயங்குகிறார்கள் என்று தெரிந்ததும் காசிலிங்கத்துக்கு உற்சாகம் அதிகமாகி விட்டது.

"ஓகோ! அப்படியா? திருட்டுப் பசங்கள் சோம்பேறிப் பசங்களுடன் பேசாவிட்டால், வேறே யார் பேசுவாக!" என்று சொல்லிக் கொண்டே, காசிலிங்கம் சேவகனைப் புறங்கையினால் ஒரு தள்ளுத் தள்ளி விட்டு, திடு திடுவென்று உள்ளே நுழைந்தார்.

கூடத்தில் மூன்று பேர் சீட்டுக்கட்டைக் கலைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் இரண்டு பேர் சந்திரமணியின் மாமன்மார்கள் என்பதைக் காசிலிங்கம் பார்த்துத் தெரிந்து கொண்டார்.

ஈசுவரமூர்த்தி சோபாவில் உட்கார்ந்து அன்று வந்த கடிதங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் பக்கத்தில் அவருடைய கையாள் சோமையா நின்று கொண்டிருந்தான். சோமையாவுக்குப் பெரிய வஸ்தாது என்று பெயர். அடி

தடிகளில் கைதேர்ந்தவன். ஈசுவரமூர்த்தியின் மெய்காவலன்.

சீட்டுக் கட்டுடன் தரையில் இரத்தின ஜமக்காளத்தில் உட்கார்ந்திருந்தவர்களைப் பார்த்துக் காசிலிங்கம், "ஒரு கை குறைவு போலிருக்கிறதே! நான் வேண்டுமானால் உட்காரட்டுமா?" என்று கேட்டார்.

எல்லாரும் அவரைப் பார்த்து விழித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நிமிஷம் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது.

வாசற் சேவகன் மெதுவாக வந்து உள்ளே என்ன நடக்கிறது என்று எட்டிப் பார்த்தான். அவனைப் பார்த்ததும் ஈசுவர மூர்த்திக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

"இந்த சர்க்கஸ்காரப் பயலை யாரடா உள்ளே விட்டது?" என்று கத்தினார்.

உள்ளே தலையை நீட்டிப் பார்த்த சேவகன், "நான் விடவில்லை, எஜமான்! கொஞ்சம் அசந்திருந்தபோது, உள்ளே வந்து விட்டான்!" என்றான்.

"திறந்த வீட்டிலே நாய் நுழையறது போலே நுழைந்து விட்டானாக்கும்!" என்றார் ஈசுவரமூர்த்தி.

**கா**சிலிங்கத்தின் பொறுமை பறந்து போய் விட்டது.

"ஓய்! இந்த நாய் எப்பேர்ப்பட்ட நாய் தெரியுமா? வேட்டை நாய்! திருட்டுப் பயல்களுடைய வயிற்றைக் கிழித்துக் குடலைப் பிடுங்கி மாலையாகப் போட்டுக் கொள்ளும் வேட்டை நாய்!......"

இவ்வாறு சொல்லிக் கொண்டு காசிலிங்கம் ஈசுவர மூர்த்தி உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி நகர்ந்தார்.

"சோமையா! இவனைக் கழுத்தைப் பிடித்துக் கல்தா கொடுத்து வெளியிலே கொண்டு போய்த் தள்ளிவிட்டு வா!" என்றார் ஈசுவர மூர்த்தி.

சோமையா காசிலிங்கத்தை அணுகி வந்தான். அதற்குள் காசிலிங்கம் அவனை எட்டிப் பிடித்துக் குண்டுக் கட்டாகத் தலைக்கு மேல் தூக்கித் தொப்பென்று கீழே போட்டார்.

சீட்டாட உட்கார்ந்திருந்த மூவரும் "யாரடா இவன்! உதைடா! அடிடா!" என்று சத்தமிட்டுக் கொண்டு எழுந்து காசிலிங்கத்தின்மீது பாய வந்தார்கள்.

அவர்களில் இரண்டு பேரை இரண்டு கையினாலும் காசிலிங்கம் கெட்டித் தள்ளிவிட்டு மறுபடியும் எல்லாரும் சேர்ந்து தன்னைத் தாக்குவதற்கு முன்னால் தற்காப்புக்காக ஒரு நாற்காலியைத் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டார்.

"என்கிட்ட எவன் வந்தாலும், அவன் மண்டை படார்!" என்று கர்ஜித்தார்.

இவ்வளவுக்கும் அசையாமல் உட்கார்ந்திருந்த ஈசுவர மூர்த்தி, தரையில் உருண்டு எழுந்து நின்ற சோமையாவிடம் ஏதோ ஜாடையாகச் சொன்னார்.

சோமையா ஒரு பெரிய குண்டாந்தடியை எடுத்து வந்து காசிலிங்கத்தின் பின்னாலிருந்து அவர் மண்டையில் ஓங்கி ஒரு போடு போட்டான்.

பின்னாலிருந்து அடித்தவன் யார் என்று காசிலிங்கம் திரும்பிப் பார்த்த போது, மற்ற மூவரும் அவன் பேரில் ஏக காலத்தில் பாய்ந்து பிடித்துக் கொண்டார்கள்.

வாசல்சேவகன் கயிறு ஒன்று கொண்டு வந்தான். காசிலிங்கத்தின் இரண்டு கைகளையும் மிகவும் சிரமப் பட்டுச் சேர்த்துக் கட்டினார்கள்.

சற்று நேரத்துக்கெல்லாம் போலீஸ்காரர்கள் வந்தார்கள். "எங்களுடன் மரியாதையாக வருகிறாயா? கையில் விலங்கு மாட்டிக் கொண்டு போக வேண்டுமா?" என்றார்கள்.

காசிலிங்கத்துக்கு அதற்குள் அறிவு தெளிந்து விட்டது. பொறுமை இழந்து இப்படி ஆபத்தில் சிக்கிக் கொண்டதற்காக மிகவும் வருந்தினார். போலீஸ்காரர்களுடன் அமைதியாகச் சென்றார்.

* * *

**இ**வையெல்லாம் நிகழ்ந்து கொண்டிருந்த போது, மந்திரமூர்த்தி திருநந்திபுரம் ஸப் கோர்ட்டில் நடந்த ஒரு வழக்கைக் கவனித்துக் கொண்டிருந்தார். ஜில்லா போர்டு தலைவர் வீட்டில் நடந்த கலாட்டாவைப் பற்றிய செய்தி அங்கேயும் வந்து எட்டியது. ஈசுவர மூர்த்தி தமது அகங்காரத்தினாலும் அடாவடிச் செயல்களினாலும் பலருடைய வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டிருந்தார். ஆகையால் அவர் வீட்டில் நடந்த கலாட்டாவைப் பார்த்து எல்லாரும் உற்சாகமாகப் பேசிக் கொண்டார்கள். எக்காரணத்தினாலோ பண்ணையார் மந்திரமூர்த்திக்குமட்டும் 'சொரேல்' என்றது. கலாட்டா செய்தவனுடைய பெயரை விசாரித்துப் பார்த்தார். யாரும் சரியாகச் சொல்லவில்லை.

மேலும் விசாரித்துக் கொண்டு, ஸப்-மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்குப் போனார். அங்கே அவர் போய்ச் சேர்ந்தபோது காசிலிங்கத்தை விசாரணை முடியும் வரையில் ஸப்-ஜெயிலில் ரிமாண்டில் வைத்திருக்கும்படி ஸப்-மாஜிஸ்ட்ரேட் உத்தரவு பிறப்பித்தாகி விட்டது.

ஜாமீனில் விடுதலை செய்யும்படி மனுப் போடுவதற்கு அன்று நேரம் ஆகி விட்டது. வக்கீலிடம் சொல்லி மறு நாள் மனுப் போடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

ஸப்-ஜெயிலுக்குச் சென்று காசிலிங்கத்தைப் பார்த்தார். "கவலை வேண்டாம், காசிலிங்கம்! நாளைக்கு ஜாமீனில் விடுதலையாகி ஊருக்குப் போய்விடலாம். நடந்ததை நடந்தபடி என்னிடமும் வக்கீலிடமும் சொல்லி விடு! கேஸ் அப்படியொன்றும் பிரமாதமில்லை. அவர்கள் பொய் புனைசுருட்டு சேர்த்துக் கேஸ் ஜோடிக்கப் பார்ப்பார்கள்! அதற்கு மட்டும் இடங் கொடுத்து விடக் கூடாது!" என்று சொல்லி வைத்தார்.

காசிலிங்கம் அப்படியொன்றும் சோர்வு அடைந்திருக்கவில்லை. நடந்ததையெல்லாம் சொல்லிய பிறகு, "அந்த வேலூர்த் திருடர்கள் இரண்டு பேருக்கும் செம்மையாக உதை கொடுத்தேன். அது ஒன்றே போதும். அந்த ஈசுவர மூர்த்தியின் மீசையைப் பிடித்துக் குலுக்க முடியவில்லையே யென்று தான் கொஞ்சம் வருத்தம். அடுத்த தடவை அதையும் செய்து விடுகிறேன் என்று ஜமீன்தாரிடம் சொல்லுங்கள். சந்திரமணியிடம் கொஞ்சமும் அதைரியப்பட வேண்டாம் என்று சொல்லுங்கள்! அவளுடைய சொத்தை எப்படியும் திருப்பி வாங்காமல் விடுவதில்லை!" என்றார்.

* * *

மந்திரமூர்த்தி இங்கே வந்து பார்த்தால், ஜமீன்தார் இந்த உலகத்திலிருந்தே போய் விட்டார் என்று தெரிந்தது.

"சந்திரமணி! காசிலிங்கத்தைப் பற்றி உன்னிடம் எப்படிச் சொல்லிச் சமாளிப்பது என்று கவலைப்பட்டுக் கொண்டு வந்தேன். நீ இங்கே அதைவிடப் பெரிய பயங்கரமான கவலைக்கு உள்ளாகியிருந்தாய், கடவுளின் செயலை யாரால் அறிய முடியும்? இங்கே ஒரு பெரிய அபாயத்திலிருந்து காப்பாற்றுவதற்காகத் தான் அங்கே ஒரு சிறிய தொல்லை காசிலிங்கத்துக்கு நேர்ந்ததாக வைத்துக் கொள்ள வேண்டும்" என்றார்.

இது சந்திரமணிக்குச் சிறிதும் திருப்தி அளிக்கவில்லை.

"அப்பா! தலையில் விழுந்தது விழுந்து விட்டது! அது இடியாயிருந்தால் என்ன? மரமாயிருந்தாலென்ன? நான் அவரை இனி உயிரோடு பார்ப்பேனா?" என்று அழ ஆரம்பித்து விட்டாள்.

"இது என்ன பேச்சு? அழகாயிருக்கிறது! இடி விழுந்தால் ஆள் உருவமே காண முடியாது. மரக்கிளை விழுந்தால் சிறு காயத்தோடு போனாலும் போகும். ஒன்றும் குடி முழுகிப் போகவில்லை. நான்தான் ஜாமீன் கொடுத்து நாளைக்கு இங்கு அழைத்துக் கொண்டு வந்து சேர்ப்பதாகச் சொல்கிறேனே?" என்றார்.

"நானும் உங்களோடு வருகிறேனே, அப்பா?" என்றாள் சந்திரமணி.

"அதுமட்டும் கூடாது. உன்னை அழைத்து வரவேண்டாம் என்று காசிலிங்கம் என் தலைமேல் ஆணை வைத்துச் சொல்லியிருக்கிறார். அதுமட்டும் அல்ல. அருவிக்கரை பங்களாவில் உன்னைத் தனியாக விட்டு விட்டு வரவேண்டாம் என்று சொல்லியிருக்கிறார். இங்கேயோ கொலையும், கிலையுமாக இருக்கிறது. இன்றிரவே நாம் ஜாகையை மாற்றிவிட வேண்டியதுதான். நான் இருக்கும் வீட்டுக்கே போய் விடலாம். என்ன சொல்கிறாய்?" என்றார் மந்திரமூர்த்தி.

சந்திரமணி ரொம்ப நேரம் தயங்கி விட்டுக் கடைசியில் மந்திரமூர்த்தியின் யோசனைக்குச் சம்மதித்தாள். (தொடரும்)




# வைத்தியசாலைத் திறப்பு விழா

இந்தியாவின் சுயராஜ்யம் "கிராம சுயராஜ்ய"மாகத் திகழ வேண்டுமென்று காந்திஜி கனவு கண்டார். "கிராமங்களுக்குச் செல்லுங்கள்; கிராம மக்களுக்குப் பணி செய்யுங்கள்" என்று வற்புறுத்தி வந்தார்.

காந்திஜியின் லட்சியம் தமிழ் நாட்டில் இப்பொழுது சிறிய அளவில் நிறைவேறத் தொடங்கியிருக்கிறது. ஆங்காங்கு கிராமங்களில் நவீன வசதிகள் படைத்த வைத்திய சாலைகளைத் திறந்து வருகிறார்கள். இரண்டு ஆண்டுகளுக்கு முன் சிறுவந்தாடு கிராமத்தில் 'ஓமந்தூரார் ஆஸ்பத்திரி' திறந்து வைக்கப் பட்டது. இந்த ஆண்டில் செப்டம்பர் 30உ விழுப்புரத்துக்குத் தென்கிழக்கே சுமார் முப்பது மைல் தூரத்துக்கு அப்பால் உள்ள புராணசிங்கு பாளையத்தில் வைத்தியசாலைத் திறப்பு விழா சிறப்பாக நடந்தது. பிறகு வைத்திய சாலைக்கும், வைத்தியசாலையையொட்டி ஒரு நகருக்கும் அஸ்திவார விழா கோலாகலமாக நடைபெற்றது.

புராணசிங்கு பாளையத்தில் உள்ள மக்கள் தங்கள் நலனுக்காக வைத்திய சாலைக் கமிட்டி ஒன்றை நிறுவினார்கள். அக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ எஸ். கோதண்டபாணிப் பிள்ளையும், காரியதரிசி ஸ்ரீ பங்காரு ரெட்டியாரும் மிகவும் பாடுபட்டு நிதிதிரட்டி வைத்தியசாலை ஒன்றை நடத்துவதற்கு ஏற்பாடு செய்து, பெரிய திருவிழாவாகவே நடத்தி விட்டார்கள்.

இந்த விழாவை நமது சுகாதார மந்திரி கனம் ஏ. பி. ஷெட்டி அவர்கள் துவக்கி வைத்து வைத்தியசாலைக்கு அஸ்திவாரக் கல் நாட்டினார். வைத்திய சாலைக்கு வேண்டிய டாக்டர்கள் சிப்பந்திகள் முதலியோர் வசிப்பதற்காக அமைக்கப்படவிருக்கும் எஸ். சுந்தரராஜநகருக்கு 'கல்கி' ஆசிரியர் அஸ்திவாரக்கல் நாட்டினார். தென் ஆற்காடு ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ கே. எஸ். வெங்கடகிருஷ்ண ரெட்டியார் விழாவுக்குத் தலைமை தாங்கினார். ஜில்லா வைத்திய அதிகாரி ஸ்ரீ யு. மாருதிராவ் ஆஸ்பத்திரியைத் திறந்து வைத்தார். கடலூர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி கொடியேற்றி விழா நடத்தினார். விழுப்புரம் ஸ்ரீ சிதம்பரம் ஐயர் சொற்பொழிவு நிகழ்த்தினார். சிறுவந்தாடு ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் வரவேற்புரை வழங்கினார். ஸ்ரீ டி. ராமுடு ரெட்டியார் நன்றி யுரை கூறினார்.

இவ் விழாவுக்குத் தென்னாற்காடு ஜில்லாவைச் சேர்ந்த பல பிரமுகர்களும், அதிகாரிகளும், கிராம மக்களும் பிராஞ்சிந்திய விடுதலை இயக்கத் தலைவர்கள் ஸ்ரீ முத்துக் குமரப்ப ரெட்டியார், ஸ்ரீ முத்துப் பிள்ளை, ஸ்ரீ முத்து வெங்கடபதி ரெட்டியார் முதலியோர்களும் சுதந்திரம் பெற்ற பிராஞ்சிந்திய கிராமத்தின் அதிகாரிகளான ஸ்ரீ எச். எஸ். பால், ஸ்ரீ சிவா ஆகியவர்களும் மின்சார இலாகா இன்ஜினியர் ஸ்ரீ ஏ. ஆர். கே. மூர்த்தி அவர்களும் விஜயம் செய்து சிறப்பித்திருந்தனர்.

1. விழாப் பந்தலும் மேடையும். 2. ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் வரவேற்புரை நிகழ்த்துகிறார். 3. தலைமை வகித்த ஸ்ரீ வெங்கடகிருஷ்ண ரெட்டியார் தலைமையுரை நிகழ்த்துகிறார். 4, 10. சபையில் கூடியிருந்த பிரமுகர்கள். 5. ஆஸ்பத்திரியைத் திறந்து வைக்கத் தலைவர்கள் செல்கின்றனர். 6. டாக்டர் யு. மாருதிராவ் ஆஸ்பத்திரியைத் திறந்து வைக்கிறார். 7. ஸ்ரீ எஸ். கோதண்டபாணிப் பிள்ளை. 8. "கல்கி" ஆசிரியர் அஸ்திவாரக் கல் நாட்டுகிறார். 9. கனம் ஏ. பி. ஷெட்டி அஸ்திவாரக் கல் இடுகிறார்.

வானொலி மண்டலம்-3.

# ரேடியோப் பேச்சு!

சோமு

நமது பாரத நாட்டுக்குச் சுதந்திரம் வந்த பிறகு நம் நாட்டு ஒலி பரப்பு நிலையங்களின் முக்கியம் பன்மடங்கு அதிகரித்திருக்கிறது. 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' என்ற நிலை வந்த பிறகு, நாட்டில் நடக்கும் அன்றாட நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ளவும், அவற்றைப் பற்றித் தெளிவான கருத்துக்களை உருவாக்கிக் கொள்ளவும், ஒலிபரப்பு சாதனம் துணையாக இருந்து வருகிறது. இவ்விஷயத்தில் ஆங்கிலத்திலும் நமது இந்திய மொழிகளிலும் ஒலி பரப்பாகிற செய்தி அறிக்கைகள் எவ்வளவோ பயன் தருகின்றன. இந்த அறிக்கைகளைத் தவிர, நாட்டு மக்களின் அறிவியலை வளர்ப்பதில் ரேடியோ பேச்சுக்கள் முக்கிய சேவை செய்ய முடியும்.

மேனாட்டுக் கல்வி முறையின் பயனாக நம் நாட்டில் ஒரு இக்கட்டான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. 'கல்வி' என்றாலே செவி மூலமாக இல்லாமல் எழுத்து மூலமாகவே இட்டுகிற காரியம் என்று ஆகி விட்டது. கல்வி புஸ்தகத்தோடு ஒட்டி விட்டது! ஆங்கில மொழியோ பெரும்பாலும் நமக்கு அச்சு மூலமாகவே வருகிற பாஷை. அந்த அச்சு பாஷையிலேயே கருத்துக்களை வாங்குகிறோம். வழங்குகிறோம். எனவே, விஞ்ஞானம் முதலிய அறிவியல் விஷயங்களில் நாம் சிந்திப்பதும் அச்சடித்த கணக்குத்தான்! இது காரணமாக நேருக்கு நேரான பேச்சு முறை என்பது மாறி, நமது இந்திய மொழிகளுக்கும் "எழுத்து-வாடை" அடித்து விட்டது! எனவே, ரேடியோப் பேச்சுக்களிலும் இந்த வாடை வீசுவது இயல்பே அல்லவா?

'பேசுவது போலவே எழுத வேண்டும்' என்பது காலஞ்சென்ற சுப்பிரமண்ய பாரதியார், ரசிகமணி டி. கே. சி. போன்ற அறிஞர்களின் கருத்து. இதைப் பற்றி வேறு துறைகளில் சர்ச்சை நடக்கலாம். ஆனால் ரேடியோவைப் பொறுத்தமட்டில் இதுவே சரி. ஏனென்றால் பேச்சாளர் தாம் பேசப் போகிற மாதிரியே தமது பேச்சை எழுதிப் படிக்க வேண்டியிருக்கிறது. அவர் எழுதுவது போல் பேசாமல், பேசுவது போல் எழுத வேண்டும்! காரணம் பேசுவது போலவே அவர் எழுதி வந்ததைப் படிக்க வேண்டியிருக்கிறது!

ஆம். ரேடியோப் பேச்செல்லாம் எழுதிப் படிக்கிற காரியந்தான். நேருக்கு நேராக இருந்து ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்லுவது போன்ற ஒரு நேசம் அதில் இருக்க வேண்டும். இது கடினமான காரியந்தான். நேரிலே மனிதர்கள் இருக்கும் போதே அப்படிப் பேச வராது என்றால், உயிரற்ற அந்த ஒலிக் கருவியை எதிரே வைத்துக் கொண்டு, எதிரிலே இல்லாத மனிதர்களை இருப்பதாகப் பாவித்துக் கொண்டு, அவர்களோடு நெருங்கிப் பேச வேண்டும் என்றால் எத்தனை கஷ்டம்? அதிலும் எழுத்து மூலமாகவே நாம் பயின்று விட்ட விஷயங்களை, எழுத்து மூலமாகவே நாம் கற்று விட்ட சொல் அடுக்குகள் இல்லாமல், சாதாரணமாய் எல்லாருக்கும் புரிகிற மொழியில், மக்களுடன் நேருக்கு நேர் நின்று பேசுவது போல் பேச வேண்டும் என்றால் ...?

நேருக்கு நேரான பேச்சு முறை தவிர, கையாளுகிற நடையின் சொற்களும் முக்கியம். கடினமான வார்த்தை ஒன்று குறுக்கே வந்து விட்டால் கேட்போருக்கு அகராதியைப் புரட்டிப் பார்த்து அர்த்தம் செய்து கொள்ள நேரம் கிடையாது.



குரலை ஒலிப் பதிவு செய்யும் கருவி.



*1938-ம் ஆண்டு சென்னை மாகாணப் பிரதம மந்திரியாக ராஜாஜி அவர்கள் இருந்தபொழுது சென்னையில் ரேடியோ நிலையத்தை ஆரம்பித்து வைத்தார்கள். இடமிருந்து வலம்: 1. விக்டர் பரஞ்சோதி 2. லயனல் பீல்டன் 3. ராஜாஜி 4. ஸர் ஆன்ட்ருக்ளோ*

கிரடான வாக்கியங்கள் வந்தால், மீண்டும் ஒரு முறை படித்துப் பார்க்கலாம் என்ற வசதி காற்றிலே இல்லை! அரிய கருத்துக்களும் கூட எளிய முறையிலே தான் வரவேண்டும். ஆழமும் அகலமும் கருத்திலே இருந்து, சொல்லிலே சுருக்கமும் நெருக்கமும் இருந்தால் கேட்கிறவர் அதிலேயே நின்று யோசனை பண்ணுவதற்குள் அடுத்த வாக்கியம் ஓடி விடுமே! இலக்கியச் சொற்பொழிவுகளிலோ சொல்லவே வேண்டாம். கிரடான செய்யுளை எடுத்துச் சொல்லுவதற்கு, கிரடான வார்த்தையே கையாண்டால் ரேடியோ மூலமாகக் கேட்பவருக்கு ஒன்றுமே புரியாதல்லவா?

இன்னொரு முக்கிய விஷயம்: பேசுபவரின் குரலும் உச்சரிப்பும் நயமும் தெளிவும் கூடியிருக்க வேண்டும். ஒரு ‘உறவு’ அவற்றிலே தொனிக்க வேண்டும்.

இத்தனைக்கும் மேலாகப் பேச்சின் நேரம். எந்தப் பேச்சையும் ஒரு அளவுக்கு மேல் கேட்க மனம் ஒப்புவதில்லை. இதனாலேயே பெரும்பாலும் பேச்சுக்களின் நேரம் பத்து அல்லது பதினைந்து நிமிஷமாக வரையறை செய்யப் பட்டிருக்கிறது.

அளவுக்கு மீறின வேகத்தில் வார்த்தைகளைக் கொட்டியோ, அல்லது ஒரே வழவலாக இழுத்து நீட்டியோ பேசாமல், கணீர் என்ற குரலில் வரும் அளவான பேச்சுக்கள் பெரிதும் பாராட்டப் படுகின்றன.

கடந்த பதினாறு வருஷங்களில் தமிழ் நாட்டு அறிஞர்கள் பலர் எத்தனையோ சொற்பொழிவுகள் நிகழ்த்தி யிருக்கிறார்கள். இந்தப் பேச்சுக்களிற் பல நேயர்களின் மதிப்பைப் பெற்றதோடு, சர்வ கலாசாலையினரால் பாடப் புத்தகங்களிலே சேர்க்கப்பட்டும் இருக்கின்றன. இன்னும் பல புத்தக வடிவிலேயே வெளி வந்திருக்கின்றன. இவை யெல்லாம் ரேடியோவில் தமிழின் [வளர்ச்சிக்குச் சான்றுகள்.

பேசுகிற மொழியினிடத்தில் நிகரற்ற பற்றும், பேசும் விஷயத்தில் உண்மையான பிடிப்பும் இருந்து விட்டால், உறவு மனப்பான்மை தானாக வரும். பேசும் மக்களிடத்தில் மெய்யான அபிமானம் இருந்து விட்டால், உறவு மனப்பான்மை தானாகவே ஒலிக்கும். தனக்குத் தானே ஒரு தெளிவும் நிச்சயமும் இருந்து விட்டால் பேச்சின் தரம் சிறப்பாக இருக்கும். இத்தனையோடு குரலின் வாய்ப்பும் உச்சரிப்பின் தெளிவும் அமைந்து விட்டாலோ ரேடியோப் பேச்சு என்ற கலையிலே பூரண வெற்றிதான்! ஆனால் இத்தனையும் ஒருங்கே ஒருவருக்கு அமையுமா? சாத்தியமா?

ஒரு விஷயத்தைப் பேசுவதற்குரிய அருகதை இருப்பவரிடம் மற்ற அம்சங்கள் இல்லாமல் இருக்கலாம். நல்ல குரலாக இருக்கும்; விஷயம் இராது. இரண்டும் இருக்கும், பாஷையின் நயம் இராது. என்ன செய்வது?

பேச்சுக்களை அமைக்கும் இலாகா, பேச்சுக்களையும் அவற்றிற்கு உரிய அறிஞர்களையும் கோவைப் படுத்தும்போது, எந்தெந்த அம்சத்துக்கு எவ்வளவு முக்கியம் எந்த விஷயத்தில் கொடுக்க வேண்டும் என்று சிந்திக்கிறது. பேச்சின் பொருள், அதன் எல்லை வரம்புகள், பேச்சாளரின் சிறப்பு, அவர்களின் எல்லை வரம்புகள் என்று பலவற்றையும் யோசித்துச் சிட்டைப் படுத்த வேண்டும். இத்தனையும் தேர்ந்த பிறகு, காலத்தையும் இடத்தையும் சூழ்நிலைகளையும் உணர்ந்து, இவற்றை ஒலிபரப்ப வேண்டியதிருக்கிறது. பொதுவாக, குறித்த வட்டாரத்தில் உள்ள அறிஞர்களையும், அவர்களுக்கு உரிய பொருள்களையும் ஆராய்ந்து கண்டு, பேச்சுக் கலையின் பல அம்சங்களையும் உணர்ந்து. இவை யெல்லாவற்றிற்கும் ஏற்ப நிகழ்ச்சிகளை அமைப்பதிலேயே இந்த இலாகாவின் வெற்றி இருக்கிறது!



# சுபத்ராவின் கண்மணி

ராமப்பிரியா

அன்று சுபத்திரா தேவி அனாதை நிலையத்தின் ஆண்டு விழா.

"சுபத்திரா நிலையம்" கண் கொள்ளாக் காட்சியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. மின்சார விளக்குகள் ஜகஜ்ஜோதியாய் இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. ஆண்டு விழா எல்லாம் இனிது முடிந்த பிறகு கூட விளக்குகள் எல்லாம் எரிந்து கொண்டிருந்தன. அதற்குப் பின்னரும் வெகு நேரம் கூட்டம் இருந்து கொண்டே இருந்தது. நிலையத்தின் நிர்வாகஸ்தர் வாசு எல்லாவற்றையும் ஒரு முறை மேற்பார்வையிட்டுக் கொண்டே மாடிக்கு வந்து வராந்தாவின் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு எதிர் வீட்டைப் பார்த்தார்.

எதிர் வீட்டில் ஜன்னல் கம்பியைப் பிடித்தவாறு சீதா நின்று கொண்டிருந்தாள். வாசுவின் கண்களோடு சீதாவின் கண்கள் கலந்தன. சீதா வாசுவைப் பார்த்துச் சிரித்தாள். வாசு உடனே இன்னொருவரிடம் மேற்கொண்டு ஆக வேண்டியவற்றைக் கட்டளையிட்டு விட்டுப் பிறகு எதிர் வீட்டுக்கு விரைந்தார்.

வாசு வருவதைப் பார்த்த சீதாவும் ஜன்னலை விட்டு அகன்று வாசுவை நோக்கி வந்தாள்.

அவள் கண்களில் நீர் துளித்தது.

"மூன்று வருஷத்துக்கு முன் இப்படியெல்லாம் நடக்குமென்று நாம் கனவு கூடக் காணவில்லை. உண்மையில் சீதா, நான் புகழ்ச்சியாகக் கூறவில்லை. சுபத்திராவைவிட நீயே தியாகி என்று நான் சொல்லுவேன். அவளை விடப் பெருந்தன்மையில் நீ மிஞ்சி விட்டாய்!" என்றார் வாசு.

வாசுவுக்கும் பழைய நினைவுகள் சினிமாப் படம் போல் மனத்திரையில் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றின. இருவரும் எதிர் வீட்டையே பார்த்துக் கொண்டு யோசனையில் ஆழ்ந்தனர்.

** ** **

ஐந்து வருஷங்களுக்கு முன் ஒரு நாள், எதிர் வீட்டு வாசலில் ஒரு லாரி நின்று கொண்டிருந்தது. லாரியிலிருந்து சோபாக்களையும் கட்டில்களையும் இரும்பு பீரோக்களையும் நாலைந்து ஆட்கள் வெகு லாவகமாக உள்ளே தூக்கிச் சென்று கொண்டிருந்தனர்.

அந்த வீட்டு எஜமானர் இவை யொன்றையும் கவனியாதவராய் முகத்தில் கறுப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டு பங்களாவின் முன்புறம் உள்ள புல் தரையில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தார். அவர் மனைவி கீழே புல் தரையில் சாய்வு நாற்காலிக்குச் சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

அவள் போட்டுக் கொண்டிருந்த வைரத் தோடுகள் காலைச் சூரியனின் கதிர்கள் பட்டுப் பல வித வர்ண ஜாலங்களை அள்ளி வீசின.

சீதா இருக்கும் வீடும் வெளியிலிருந்து பார்ப்பதற்கு ஒரு அழகிய பங்களா தான். ஆனால் அந்தப் பங்களா மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு அதில் ஒரு பிரிவில், அதாவது மூன்று அறைகளுள்ள ஒரு பகுதியில் தான் சீதாவின் சிறிய குடும்பம் இருந்தது.

வாசு ஆபீசுக்குச் சென்ற பிறகு குழந்தைக்கு ஆகாரம் கொடுத்து விட்டுத் தானும் சாப்பிட்டு எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு மீண்டும் ஜன்னலருகில் வந்து நின்று கொண்டாள், சீதா எதிர் வீட்டைப் பார்ப்பதற்காக.

குழந்தையை ஜன்னல் கம்பியைப் பிடித்துக் கொண்டு நிற்க வைத்து அவன் விழாமலிருக்க வேண்டிக் குழந்தையின் பின்னால் தானும் நின்று கொண்டே பார்த்தான்.

இப்போது எதிர் வீட்டம்மாள் மாடி வராந்தாவில் ஒரு புஸ்தகத்தைக் கையில் பிரித்தபடி வைத்துக் கொண்டு உலாவியபடியே படித்துக் கொண்டிருந்தாள். ஸ்நானம் செய்த கேசம் முழங்கால்வரை அலைஅலையாகப் புரண்டு கொண்டிருந்தது. நாலு விரல் அகலம் சரிகை போட்ட மாந்துளிர்ப் புடவை அவள் உடலோடு ஒட்டித் துவண்டு கொண்டிருந்தது. முகத்தில் அணிந்து கொண்டிருந்த தங்க பிரேம் போட்ட கண்ணாடி அவள் அழகை அதிகமாக்கிக் கொண்டிருந்தது.

எதிர் வீட்டையே ரொம்பவும் மும்முரமாகக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த சீதா ஒரு நிமிஷம் ரவியைக் கவனிக்கவில்லை. ரவி தன்னுடைய பிஞ்சுக் கையை ஜன்னல் கதவிடுக்கில் வைத்துக் கதவை அழுத்திச் சாத்தி விட்டான். கதவைத் திறப்பதற்கும் தெரியவில்லை; கையையும் எடுக்கவில்லை. குழந்தை வலியைப் பொறுக்க

முடியாதபடியால் தொண்டை கிழிந்து போகும்படி திடீரென்று வீறிட்டுப் பலமாகக் கத்த ஆரம்பித்து விட்டான்.

குழந்தை அழுதவுடன்தான் சீதா கனவிலிருந்து விழித்துக் கொண்ட மாதிரி திடுக்கிட்டு ரவியின் கையை ஜன்னலிடுக்கிலிருந்து எடுத்து விட்டாள். அதன் பிறகும் ரவி அழுகையை நிறுத்தாமல் நடந்ததை நினைத்து ஏங்கி அழுது கொண்டிருந்தான்.

குழந்தையின் அழுகைச் சத்தம் எதிர் வீட்டு அம்மாளுக்கும் கேட்டிருக்க வேண்டும். வராந்தாவில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருந்தவள் சட்டென்று சீதாவின் வீட்டையே, அந்த ஜன்னலையே வெறிக்கப் பார்த்து நின்று விட்டாள்.

எதிர் வீட்டு அம்மாள் தன்னையும் குழந்தையையும் உற்றுப் பார்ப்பதைக் கவனித்த சீதா வெட்கம் அடைந்தவளாய், குழந்தையைச் சமாதானம் செய்யச் சரேலென்று உள்ளே கொண்டு போய் விட்டாள். ரவியும் சிறிது நேரத்துக்கெல்லாம் சமாதானமடைந்து தூங்கிப் போய் விட்டான்.

சீதாவும் சற்று இளைப்பாறலாமென்று படுத்துக் கொண்டாள். யாரோ கதவை இடிக்கும் சத்தம் கேட்டுக் கதவைத் திறந்தாள். ஒரு ஆள் நின்று கொண்டிருந்தான்.

"யாரப்பா நீ!" என்று கேட்டாள் சீதா.

அவன் உடனே ரொம்பவும் வினயமாக, "நான் எதிர் வீட்டு வேலைக்காரனுங்க. இந்த வீட்டில் குழந்தை இருப்பதை அம்மா பார்த்தார்களாம். நீங்கள் சம்மதிச்சா குழந்தையைக் கொஞ்ச நேரம் கொண்டுவரச் சொன்னாங்க!" என்றான்.

சீதாவுக்கு ரொம்ப ஆச்சரியமாக இருந்தது. முன் பின் தெரியாதவர்கள், அதுவும் பெரிய செல்வவந்தர் வீட்டு அம்மாள் திடீரென்று குழந்தையைக் கேட்டனுப்புவாளா என்று சந்தேகம் கூடத் தோன்றியது.

சீதாவுக்குச் சற்று நேரம் ஒன்றுமே புரியவில்லை. "எதற்காக அம்மா குழந்தையை அழைத்துவரச் சொன்னார்கள்!" என்று அவனைக் கேட்டாள்.

"அம்மாவுக்குக் குழந்தைங்கன்னா உசிருங்க, சுவாமி இவங்களுக்கு லட்சம் லட்சமா பணத்தைக் கொடுத்திருந்தும் ஒரு குழந்தையைக் கொடுக்கவில்லை. யார் வீட்டில் அழகான குழந்தை இருந்தாலும் தன்னுடைய கௌரவத்தைக்கூடப் பாராமல் தானே போய்க் குழந்தையை எடுத்துக் கொஞ்சிட்டு வருவாங்க. உங்க குழந்தையைப் பார்த்ததிலிருந்து இதே ஞாபகமாக இருக்காங்க. நீங்க என்ன சொல்றீங்களோன்னு உள்ளூறச் சந்தேகம். இருந்தாலும் ஒரு ஆசைக்குக் கேட்டுட்டு வான்னு சொன்னாங்க!" என்றான் அவன்.

ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்த சீதா, "ஐயோ, பாவம்! அந்த அம்மாவுக்குக் குழந்தைகள் இல்லையா! குழந்தை நன்றாக தூங்குகிறான். மூன்று மணிக்குத்தான் எழுந்திருப்பான். எழுந்தவுடன் கொடுத்தனுப்புகிறேன் என்று அம்மாளிடம் சொல்லு!" என்று சொன்னாள்.

'சரி'யென்று அவன் போய் விட்டான்.

மூன்று மணிக்கெல்லாம் அலாரம் வைத்த மாதிரி கணக்காக மறுபடியும் எதிர்வீட்டு வேலைக்காரன் வந்துவிட்டான். ரவி அப்பொழுதுதான் தூங்கி எழுந்து சிணுங்கிக் கொண்டிருந்தான்.



சீதா குழந்தைக்கு ஆகாரம் கொடுத்து விட்டு நல்ல சட்டை போட்டாள். அவளுக்கு உள்ளூற எதிர் வீட்டுப் பெரிய மனிதர்களின் சிநேகத்தை விரும்பினாலும் அதற்காகத் திடுதிப்பென்று ரவியை அங்கு கொடுத்தனுப்ப மனசுக்கு அவ்வளவு திருப்தியில்லை. சாயந்திரம் வாசு வந்து இதைக் கேட்டால் என்னவாவது சொல்வானோ வென்று பயமாக இருந்தது. கடைசியாகத் தயங்கியவாறே ரவியை அனுப்பி வைத்தாள்.

** ** **

வழக்கம்போல் ஐந்தரை மணிக்கு வீட்டுக்கு வந்தான் வாசு. வரும்பொழுதே "ரவி!" என்று ஆசையோடு அழைத்துக் கொண்டு வந்தான்.

"ரவி எதிர் வீட்டுக்குப் போயிருக்கிறான்!" என்றாள் சீதா.

"குழந்தை எதிர் வீட்டுக்கு எதற்காகப் போகிறான்! விளையாடுகிறாயா!" என்று கோபத்துடனேயே கேட்டான் வாசு.

அதற்குள் எதிர் வீட்டு வேலைக்காரன் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்தான். ரவி வாசுவிடம் தாவித் தொத்திக் கொண்டான்.

"ஐயா உள்ளே நுழையறச்சேயே குழந்தை மாடியிலேயே அம்மாகிட்டேயிருந்து பார்த்திடுச்சு. அப்பா, அப்பா என்று சொன்னவுடன் அம்மா குழந்தையைக் கொண்டு கொடுத்து விட்டு வரச் சொன்னாங்க!" என்று கூறி, வேலைக்காரன் குழந்தையைவாசுவிடம் கொடுத்து விட்டுச் சென்றான்.

"அப்படியானால் 'என் கம்பெனி விஷயமாக எதிர்வீட்டுக்காரரைத் தாராளமாகப்

பார்க்கலாமென்று சொல்லு. எங்கள் கம்பெனியின் பிரதிநிதி யென்று என்னை அறிமுகப் படுத்திக் கொண்டு போனால் சரியாக மதிக்கிறாரோ என்னவோ! "சீதாவின் கணவன்" என்று சொல்லிக் கொண்டு போகட்டுமா!" என்று பரிகாசமாகக் கேட்டான் வாசு.



சீதாவுக்கு இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பெருமை தாங்க வில்லை. "அது ஒன்றும் வேண்டாம். ரவி கண்மணியின் அப்பா என்று உங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளுங்கள், போதும். என் தங்கத்தினாலேதானே அவர்கள் சிநேகம் கிடைத்தது!" என்று ரவியைக் கொஞ்சினாள்.

"இந்தா! குழந்தையை எடுத்துக் கொள். எதிர் வீட்டுக்குப் போய் அவரைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு ரவியைச் சீதாவிடம் கொடுத்து விட்டு எதிர் வீட்டுக்குச் சென்றான் வாசு.

சற்று நேரத்துக்கெல்லாம் வாசு எதிர் வீட்டிலிருந்து திரும்புவதைக் கண்டதும் சீதா ஜன்னலை விட்டு அகன்று உள்ளே வந்தாள். "உஸ், அப்பாடா!" என்று சொல்லிக் கொண்டே வாசு நாற்காலியில் உட்கார்ந்தான்.

"என்ன, அதற்குள் திரும்பி விட்டீர்கள்! அவர் எப்படி யிருக்கிறார்! சுபத்திராவைப் போல் சகஜமாகப் பேசினாரா! மின்சார விசிறிக்கு ஆர்டர் கொடுத்தாரா!" என்று மூச்சு விடாமல் கேட்டாள் சீதா.

"போதுமே, நீ பெருமை அடித்துக் கொள்வது! பணக்காரர் என்ற அகம்பாவத்தில் அவர் ஒன்றும் குறைந்தவராய்க் காணப்பட வில்லை. ஒன்றுமே சரியாகப் பேசவில்லை. தற்பெருமை ரொம்ப இருக்கிறது. பேசிக் கொண்டே தம்முடைய பிரசித்தி பெற்ற கறுப்புக் கண்ணாடியைக் கழற்றினார். அப்பப்பா! அவர் கண்களைப் பார்க்கச் சகிக்கவில்லை. ஒரே இரத்தம் மாதிரி சிவந்து கிடந்தன. பயந்து போய் விட்டேன். 'கண் வலியா' என்று அவரைக் கேட்டேன். பின் பக்கம் வேலை நடக்கும் போது சிமெண்ட் கண்களில் விழுந்து விட்டதால் அப்படி யிருக்கிறது என்று சொல்லி விட்டுச் சரேலென்று மீண்டும் கறுப்புக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டார். கடைசியில் மின்சார விசிறி வேண்டுமா என்று கேட்டேன். யோசித்துச் சொல்வதாகச் சொல்லி விட்டார். ஒரு வேளை அவருக்கு ஜெர்மனியிலிருந்தே நேராக மின்சார விசிறி வந்தாலும் வரும்!" என்று வாசு எதிர் வீட்டுக்குப் போய் வந்த விவரத்தைச் சொல்லி முடித்தான்.

சீதாவுக்கு முகம் சுருங்கி விட்டது.

மறு நாள் வாசு ஆபீசுக்குப் போன பிறகு சீதா சாப்பிட்டு விட்டு வேலைகளை யெல்லாம் முடித்துக் கொண்டு சற்றுப் படுத்தாள். வாசற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. சீதா கதவைத் திறந்தாள். ஆனால் வெளியில் எதிர் வீட்டு வேலைக்காரன் நின்று கொண்டிருந்தான்.

"என்னப்பா, அம்மா குழந்தையை எடுத்துக் கொண்டு வரச் சொன்னார்களா!" என்று அவனை முந்திக்கொண்டு கேட்டாள் சீதா.

ஆனால் சீதா சற்றும் எதிர் பாராத வண்ணம், "இல்லீங்க, அம்மாவே இங்கு வரட்டுமா என்று கேட்டுவரச் சொன்னாங்க!" என்று கைகளைப் பிசைந்தபடி சொன்னான் அவன்.

திக்பிரமையடைந்த சீதா தன்னை விரைவிலேயே சமாளித்துக் கொண்டு, "தாராளமாக வரச் சொல்லு" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டு, சுபத்திரா வருவதற்குள் வீட்டைத் துப்புரவு ஆக்குவதில் முனைந்தாள். அத்தனை பெரிய செல்வவந்தர் வீட்டு மனுஷி தன்னுடைய ஒண்டுக் குடித்தனத்தைத் தேடிக் கொண்டு வருகிறாள் என்பதை நினைக்கும்போதே சீதாவுக்கு மகிழ்ச்சி தாங்க வில்லை. ரவி கண்மணியால்தானே தன்னை மதித்து வருகிறாளென்று எண்ணிக் குழந்தைக்கு நல்ல சட்டையாகப் போட்டுத் தலையை வாரிவிட்டாள்.

சுபத்திரா தனக்கே உரியதான கம்பீரமான நடையுடன் உள்ளே வந்தாள். "வாருங்கள், வாருங்கள்!" என்று முகமன் கூறி அவளை வரவேற்றாள் சீதா.

பின்னாடியே ஒரு கூடையுடன் அவர்கள் வீட்டு வேலைக்காரன் நின்று கொண்டிருந்தான். "இப்படி கொண்டுவந்து வை!" என்று அவனுக்கு உத்தரவிட்டாள் சுபத்திரா.

கூடையை உள்ளே கொண்டு வந்து வைத்து விட்டு வேலைக்காரன் வெளியே சென்றுவிட்டான்.

"இந்தாருங்கள், கூடையை எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றாள் சுபத்திரா, சீதாவிடம்.

"என்ன அது! இதெல்லாம் இப்பொழுது எதற்கு!" என்று திகைப்புடன் கேட்டாள் சீதா.

"ஒன்றுமில்லை, நேற்றே நான் குழந்தைக்குக் கொடுக்கும்படியான பழங்கள் ஒன்றுமில்லாததால் வெறுங் கையுடன் ரவியை அனுப்பி விட்டேன். இன்று காலையிலிருந்து ரவியை என்னால் பார்க்காமல் இருக்க முடியவில்லை. சதா குழந்தையைக் கேட்டனுப்பவும் என்னவோ போல் இருந்தது. அதனால்தான் நானே ரவியைப் பார்க்க வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே ரவியைத் தூக்கி வைத்துக் கொண்டு முத்தமிட்டாள் சுபத்திரா.

"அதனால் என்ன! நீங்கள் எப்போது கேட்டனுப்பினாலும் கொடுத்தனுப்புகிறேன். இவ்வளவு ஆசையோடு கேட்கும்போது மறுப்பேனா! இங்கு நீங்கள் வந்தது, எனக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறது. ஆனால், காற்றே இல்லாமல் இருக்கும் இந்த இடத்துக்கு உங்களைக் கூப்பிடவே எனக்குச் சங்கோசமாயிருந்தது!" என்றாள் சீதா வெட்கத்துடன்.

"வீடு சிறியதாயிருந்தால் என்ன! அன்பான கணவனும், அருமைக் குழந்தையும் இருந்து விட்டால் ஆலமரத்தடியில் கூட சந்தோஷமாக வாழ்க்கை நடத்தலாமே!" என்றாள் சுபத்திரா.

ரவி சுபத்திராவின் கைகளைப் பிடித்துக்கொண்டு அவள் மூக்கைப் பிடித்தும் தலைமயிரைப் பிடித்திழுத்தும் விஷமம் செய்து கொண்டிருந்தான். சுபத்திராவும் குழந்தையின் விளையாட்டில் ஈடுபட்டு மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

"நேற்று இவர் உங்கள் கணவரைப் பார்ப்பதற்கு உங்கள் வீட்டுக்கு வந்திருந்தார்!" என்றாள் மெதுவாகச் சீதா.

"ஆமாம், அவர் வந்ததைப் பார்த்தேன். என்ன விஷயமாக வந்தார்!" என்றாள் சுபத்திரா.

"மின்சார விசிறிகள் விற்பனை செய்யும் கம்பெனியில் இவர் பிரதிநிதியாக இருக்கிறார். உங்களுடைய புது பங்களாவுக்கு விசிறிகள் ஏதேனும் தேவையாக இருக்குமோ வென்று விசாரிக்க வந்தாராம். உங்கள் கணவர் யோசித்துச் சொல்வதாகச் சொன்னாராம். உங்களிடம் இவைகளை அவர் சொல்லவில்லையா!" என்றாள் சீதா.

சுபத்திரா மென்று விழுங்கியவாறு, "நான் அவரைக் கேட்க மறந்து விட்டேன், சீதா! பெயர் சொல்லிக் கூப்பிட ஆரம்பித்து விட்டேன். இனி நாம் சகோதரிகள் மாதிரி. இந்த விஷயங்களுக்கெல்லாம் உங்கள் கணவரை அலையச் செய்து சிரமப்படுத்த வேண்டாம். எந்த மாதிரி விசிறி, என்ன விலை என்றெல்லாம் நீங்களே விவரம் கேட்டு விலைப் பட்டியலையும் கொடுத்தனுப்புங்கள். வேண்டியவைகளுக்கு உங்களிடமே நான் ஆர்டரும் பணமும் கொடுத்து அனுப்பி விடுகிறேன்!" என்றாள்.

** ** **

வாசு சாயந்திரம் வந்ததும் சீதா சுபத்திரா சொன்ன எல்லாவற்றையும் சொன்னாள். பழக் கூடையையும் கொண்டு வந்து காண்பித்தாள். அதில் ஒரு டஜன் உயர்ந்த ரக ஆப்பிள், இருபத்தைந்து பெரிய ஆரஞ்சுப் பழங்கள், ஒரு டஜன் மல்கோவா மாம்பழம் எல்லாம் இருந்தன.

அதிசயத்துடன் எல்லாவற்றையும் பார்த்தான் வாசு. "சீதா, இந்தப் பழங்களையெல்லாம் எதற்காக நீ வாங்கிக் கொண்டாய்!" என்றான்.

"அந்த அம்மாள் அவ்வளவு பிரியத்துடன் கொண்டுவந்து கொடுக்கும்பொழுது நான் எப்படி மறுப்பது! அவளுக்குக் குழந்தையில்லாத குறை ரொம்ப இருக்கிறது. ரவிக்காகத்தான் இவ்வளவு உபசாரமும் செய்கிறார்களே ஒழிய நம்மிருவருக்காக ஒன்றும் இல்லை" என்றாள் சீதா.

சுபத்ரா, சீதாவின் சிநேகம் பலமாக வேரூன்ற ஆரம்பித்தது. ஆறு மின்சார விசிறிகளுக்குச் சீதா மூலமாகவே சுபத்திரா ஆர்டர் கொடுத்து, ஆயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கையும் கொடுத்து விட்டாள். ஒரு தடவை கூட அலையாமல் களையாக ஆயிரம் ரூபாய்க்கு வியாபாரம் ஆனது வாசுவுக்கு நம்ப முடியாததாக இருந்தது.

** ** **

நான்கு மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் மாலை வாசு ஆபீஸிலிருந்து வந்தவுடன் சீதா, "இன்றைக்கு ஒரு அதிசயம் கேட்டீர்களா!" என்று பேச்சை ஆரம்பித்தாள்.

"இந்தா சீதா, இன்றைக்கு ஒரு அதிசயம் என்று மட்டும் பேச்சை ஆரம்பிக்காதே! எதிர் வீட்டுக்காரர்கள் வந்த பிறகு அதுவும் நீயும் அந்த அம்மாளும் இழைய ஆரம்பித்த பிறகு என்றைக்குத்தான் அதிசயமும் ஆச்சரியமும் இல்லாமலிருந்தது! இன்றைக்கு என்ன நடந்தது என்று மட்டும் சொல்லு!" என்று கேலியும் பரிகாசமும் நிறைந்த குரலில் சொன்னான் வாசு.

"இன்றைக்கும் எதிர் வீட்டுக்குப் போனேன். சுபத்திரா, சிரித்த முகத்துடன், 'சீதா! ரவிக்கு இன்னும் பதினைந்து நாளில் பிறந்த நாள் என்று சொன்னீர்களே. என் கவலைகளை மறக்கச் செய்து என்னை மகிழ்வித்துக் கொண்டிருக்கும் கண்மணி ரவிக்கு என்னுடைய சிறிய பரிசு இது. உங்களுக்குப் பிடிக்கிறதா!' என்று சொல்லி விட்டுக் கையில் வைத்திருந்த வெல்வெட் பெட்டியைத் திறந்து காண்பித்தாள்.

"இரண்டு பவுன் பெறுமானமுள்ள சிறிய மாம்பிஞ்சு மாலை அந்தப் பெட்டியில் பளபளத்துக் கொண்டிருந்தது.

"'என்னை நீங்கள் உங்கள் அன்பினால் ரொம்பவும் திணற அடிக்கிறீர்கள். இதெல்லாம் எதற்கு!

## சர்க்கார் சலுகைகள்

**சென்ற ஆண்டில், செம்படவர், குயவர், நாவிதர், வண்ணார் இவ்வகுப்புகளைச் சேர்ந்த குழந்தைகளுக்கு மூன்றும் படிவம், அல்லது எட்டாம் வகுப்பு வரையில் பாடசாலைகளில் சம்பளம் கிடையாது எனச் சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டனர்.**

**ஆனால், நாளது வரையில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு மேற்குறித்த சலுகைகளைப் பற்றி யாதொரு அறிக்கையும் அனுப்பாமலிருப்பது மிக்க வருந்தத் தக்கதாகும்.**

**மேலும், சென்ற ஆண்டு பாடசாலையில் சம்பளம் இல்லாமல் படித்து வந்த எனது பையன் தன் படிப்பை இவ்வருஷம் பாதியில் நிறுத்திக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. இதன் காரணம் பள்ளி அதிகாரிகள் "எங்களுக்கு இதுவரை சலுகைகள் பற்றி அறிக்கைகள் ஏதுமில்லை. ஆகவே, நீங்கள் சம்பளம் கட்ட வேண்டும்" என்று கூறுவதேயாகும்.**

**பிற்பட்ட சமூகத்ினருக்குச் சலுகைகள் அளிக்கத் தயங்காத நம் சென்னை சர்க்கார் இதை உடன் கவனித்து ஆவன செய்வார்களென நம்புகிறேன்.**

மன்னார்குடி
10—9—54

கு. முத்துசாமி பண்டிதர்

# மணமகள் தேவை

மணமகன் B. A. வரையில் படித்து பிரஞ்சு கவர்ன்மெண்டில் கடல் கடந்த பிரதேசத்தில் உத்தியோகம். மாத வருமானம் ரூ. 1000-த்துக்கு மேற்பட்டது. மிகச் சிறந்த குணமும், அனுபவமும் உடைய செல்வந்தர். மணமகள் ஆங்கிலமும் தமிழும் படித்தவளாகவும், அறிவும், ஆற்றலும், அழகும், குணமும் உடையவளாகவும், குடும்ப பாங்கில் தேர்ச்சியுள்ளவளாகவும், கௌரவமான தமிழ் குடும்பத்தில் உதித்தவளாகவும், எம்மதத்தாளாயினும் தெய்வ பக்தியுடையவளாகவும் இருத்தல் வேண்டும். வயது 25க்கு மேல் 30க்குள் குழந்தையில்லாத விதவையா யிருப்பினும் பதிவுத் திருமண சட்டப்படி மணம் செய்து கொள்ளப்படும். சீர்திருத்த நோக்கம் உள்ளவர்கள் மட்டும் எழுதவும்.

விவரங்களுக்கு

மேரி அம்மாள், 23, லல்லி தொல்லாந்தால் வீதி, புதுச்சேரி



## பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு லிட்.

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

௩, சிங்கராச்சாரி தெரு, . . . . . திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414 ✲ மதராஸ் — 5

தந்தி: 'EVERMANS' . . . . . . . . . . போன்: 85834

சீட்டில் சேருவதற்கான கடைசி தேதி 22-10-54 முதல் ஏலத் தேதி 23-10-54

மாதாந்திர சீட்டுகள் (4-வது சனிக்கிழமை ஏலங்கள்)

25 மாதங்கள் — 25 மெம்பர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம்: மானேஜிங் டைரக்டர்

## எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

டெல்லியில் வசிக்கும் தென்னிந்திய நேயர்களின் சௌகரியத்திற்காக B-6, பிளாக் நெ. 3, டெல்லி ஆஜ்மீரி கேட் ஸ்கீம், புதுடெல்லி என்னும் விலாசத்தில் எங்கள் கிளை ஆபீஸ் ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. டெல்லி நேயர்கள் எல்லா விவரங்களும் இந்த விலாசத்தில் கேட்டுக் கொள்ளவும்.

சேரன் சோழன் பாண்டியன்










ஜீவ்வாஜீ பத்திகள்



வற்றாத இன்பவாடை மிக்கவை.

K.T.R. வாசனைத் திரவியசாலை, விஜயபுரம் ✧ தஞ்சை மாவட்டம்.

மற்றும் இப்போது! ஒரு மலிவான




# ஆக்பா ஐஸோலெட் III

## அதனுள் பொருத்தப்பட்ட ரேஞ்சுபைண்டருடன் கூடிய




இந்தப் புதிய ஐஸோலெட் iii ஐஸோலெட் காமிராக்கள் உலகப் பிரசித்தமாவதற்குக் காரணமாயிருந்த எல்லா அலாதியான அம்சங்களுடனும் கூடியது.

ஆக்பா அப்போட்டர் F4.5/85 mm., கோட் செய்யப்பட்டு முழு கலர் திருத்தம் செய்யப்பட்ட லென்சுகள். கடுகளவும் பிசகாத அதனுள் பொருத்தப்பட்ட ரேஞ்சுபைண்டருடன் தயாரித்த பிராண்டோ 4 ஸ்பீடு ஷட்டர் B, 1/25th லிருந்து 1/200th வரை, பாடி ரிலீஸ், டபுள் எக்ஸ்போஷர் தடுப்பு. டெப்த் பீல்டு ஸ்கேல் மற்றும் ஸெல்ப்டைமருடன் பிளாஷ்க்காக ஸிங்கரனைஸ் செய்தது.

**ரூ. 240/-**

**E.R. உயரிய தோல் பை ரூ. 30/-**
**E.R. புள்ளியிட்ட தோல் பை ரூ.22/-**
**உள்ளூர் வரி தனி.**



*சிறந்த படங்கள் எடுக்க*
**ஆக்பா ஐஸோபான்**
*பிலிமையே உபயோகியுங்கள்*

*இந்த முக்கிய அம்சங்களை ஆக்பாவின் பரம்பரை ஸ்டாண்டர்ட் டிஸைன், வேலைத் திறம் மற்றும் நுட்பங்களோடு சேர்த்துப் பார்த்தால் தவருமலிருக்க எல்லா போட்டோ கிராப்பர்களும் ஏன் ஐஸோலெட் IIIயை தேர்ந்தெடுக்கின்றார்கள் என்பது உங்களுக்கு விளங்கும்.*

**இலவச பட்டியலுக்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் CS**

**ஆக்பா இந்தியா லிமிடெட், 198, ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய் -1**

*கிளைகள்:* **புது டில்லி - கல்கத்தா - சென்னை**

---

ACI. 5

உங்கள் விலை மதிப்பற்ற அன்பும் ஆசீர்வாதமும் ரவிக்குப் போதாதா!' என்று சொன்னேன்.

"சுபத்திரா பதறியவளாய் என் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, 'சீதா! உங்களை என் உடன் பிறந்த சகோதரி போல் கருதுகிறேன். நீங்கள் எனக்குப் பதிலுக்குச் செய்யவேண்டுமென்பதற்காகவாவது அல்லது என்னுடைய செருக்கை உங்களுக்கு அறிவிப்பதற்காகவாவது நான் ரவிக்குச் செய்யவில்லை. எனக்கு இருக்கும் தீராத சஞ்சலத்தில் ஆறுதல் அளிக்கும் ரவிக்கு என் அன்புக் காணிக்கையைச் செலுத்தி மகிழ்கிறேன்' என்று மனமுருகக் கெஞ்சினாள். அவள் கண்களிலிருந்து நீர் முத்து முத்தாக ஓடியது.

"சுபத்திரா என் கைகளைப் பிடித்துக் கொண்டு, 'சீதா, இதுவரை என் தாயாரிடம் கூடச் சொல்ல வெட்கப்பட்டு ஒளித்த சமாசாரங்களை இதோ உங்களிடம் சொல்லுகிறேன். எனக்குக் கலியாணமான புதிதில் என்னைப் போல் சந்தோஷத்தை அனுபவித்தவர்கள் வெகு சொற்பமாகவே இருந்திருப்பார்கள். கோடீசுவரரான கணவனுக்கு மாலையிட்ட பெருமிதம் என்னை ரொம்பவும் கர்வமாகவே இருக்கச் செய்தது. மணமாகி நாலைந்து வருஷம் வரை எங்களுக்கு மக்கட்பேறு உண்டாகவில்லை. எனினும் நாங்கள் அந்த வருஷங்களை சிம்ஷமாகத்தான் கழித்தோம். கோடைக்காக ஸ்விட்ஜர்லாந்து போக ஆசைப்பட்டார். அவர் ஒன்றில் ஆசைப்பட்டால் அதை நிறைவேற்றியே தீருவார். வெளிநாட்டுப் பிரயாணத்தின் ஆசையினால் என்னுடைய பிரிவைக் கூட பார்க்காமல், நான் வேண்டாமென்று சொல்லியும் கேட்காமல் சீமைக்குப் புறப்பட்டு விட்டார். நான்கு மாத காலம் அங்கு இருந்து விட்டுத் திரும்பி வந்து விட்டார். அவருடைய நடத்தையில் ரொம்ப மாறுதல்கள் இருந்தன. விசேஷமாக ஒரு மருந்தை ஆரோக்கியத்துக்காகச் சீமையில் கொடுத்தார்களென்று சதா சாப்பிட்டுக் கொண்டிருந்தார். நான் அவருடைய வார்த்தையை வேதவாக்காகவே நம்பினேன். கொஞ்ச நாள் கழிந்த பின்தான் அவர் மருந்தென்று பொய் சொல்லிச் சாப்பிடுவது மதுபானங்கள் என்று எனக்குத் தெரிய வந்தது. நான் அவரை இந்தப் பழக்கத்தை விட்டுவிடச் சொல்லிக் கெஞ்சினேன். மன்றாடினேன். அழுதேன். ஒன்றுக்கும் அவர் அசைந்து கொடுக்கவே இல்லை. வரவர அதிகமாகிப் போய்விட்டது. குடலில் புண்ணும் வந்துவிட்டது. பந்துக்கள் பரிகசிக்க அங்கு சொந்த ஊரில் இருக்க வேண்டாமென்று ஒரு கணக்குப் பிள்ளையைச் சொத்துக்களை மேற் பார்வை பார்க்கச் சொல்லிவிட்டு அவரை இங்கு அழைத்து வந்து விட்டேன். இப்போது ரவி ஒருவன்தான் எனக்கு மனச் சந்துஷ்டியைக் கொடுக்கிறான். அவன் இல்லாவிட்டால் இத்தனைக்கும் எனக்குப் பயித்தியமே பிடித்திருக்கும்!' என்று சொல்லி அழுது விட்டாள்.

"எனக்கும் கஷ்டமாகப் போய் விட்டது. அவளைப் பலவாறாகத் தேற்றி விட்டு வந்து சேர்ந்தேன். என்ன துரதிருஷ்டசாலி பாவம்!" என்று சீதா தன்னுடைய நீண்ட பேச்சை முடித்தாள்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த வாசுவும் பெருமூச்சு விட்டான். "அதுதான் அவர் கறுப்புக் கண்ணாடியைக் கழற்றவே யில்லை போலிருக்கிறது!" என்று வாசுவும் அவளோடு சேர்ந்து அனுதாபப் பட்டான்.

ஒரு நாள் ஆம்புலன்ஸோடு வந்த நர்ஸ்கள் டாக்டரின் உதவியுடன் சுபத்திராவின் கணவரை ஆம்புலன்ஸில் கொண்டு போய் வைத்தனர்.

## ஏன் இந்தப் பாரபட்சம்?

செப்டம்பர் 26-ந் தேதி 'கல்கி' இதழில் பாங்கி சிப்பந்திகளின் தகராறு குறித்து வந்துள்ள தலையங்கத்தைப் படித்துப் பார்த்தேன். நியாய புத்தியுள்ள யாரும் தாங்கள் கூறியிருப்பதை மறுக்க முடியாது. ஆனால் அதைப் படிக்கும் பொழுது ஒரு வகையில் சந்தோஷமும், மற்றொரு வகையில் மிகுந்த ஆத்திரமும் ஏற்பட்டது.

நான் சென்னை அரசாங்கத்தைச் சேர்ந்த கெஜட் பதிவில்லாத அரசாங்க ஊழியர் ஒருவரின் மனைவி. கெஜட் பதிவில்லாத ஊழியர்கள் கடந்த ஏழு வருடங்களாகத் தங்கள் நியாயமான குறைந்த பட்சக் கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டுமென்று வற்புறுத்தி வருவதைத் தாங்கள் அறியாமலிருக்க முடியாது. அந்தக் கோரிக்கைகளின் நியாயத்தைக் குறித்து இதுவரைக்கும் யாருக்கும் எந்தவிதமான சந்தேகமும் ஏற்படவில்லை. அதிருப்தி அடைந்த சர்க்கார் ஊழியர்களைக் கொண்டு, ஒரு க்ஷேம நல சர்க்காரை நிர்மாணிக்க முடியாது என்பதைத் தாங்களும் ஒத்துக் கொள்வீர்கள். மேலும் பாங்கி சிப்பந்திகளின் பிரச்னையைவிடப் பொது மக்களின் அன்றாட வாழ்வில் மிக அதிகமாகச் சம்பந்தப்படும் சர்க்கார் ஊழியரின் பிரச்னை அதிக முக்கியமானது என்பதைத் தாங்கள் மறுக்க முடியாது. அவ்வாறிருக்கும் பொழுது, பாங்கிச் சிப்பந்திகளின் பிரச்னைக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்கும் தாங்கள், கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்கள், அப்பாவிகளாக, வாயில்லாப் பூச்சிகளாக, கிழக்கிந்தியக் கம்பெனியார் காலத்தில் ஏற்படுத்தப்பட்டு, நமது அரசாங்கத்தால் மேலும் கடுமையாக்கப்பட்டிருக்கும் ஒழுங்கு முறைச் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டு நடந்து வருவதால்தான், அவர்களின் கோரிக்கைகளை அரசாங்கத்தாரைப் போலவே அலட்சியம் செய்து வருகின்றீர்கள் என்று நினைக்க நேருகிறது. இந்த அப்பாவி ஊழியர்களை ஆண்டவன்தான் கவனிக்க வேண்டும்.

திருமயம்
2—10—54

காந்திமதி சுப்பிரமணியம்

[என். ஜி. ஓ.க்களின் நிலை பற்றி முன்னர் பல தடவை இந்த இதழில் எழுதியிருக்கிறது. எழுதுவதனால் மட்டும் என்ன பயன்? வாயுள்ள பிள்ளை பிழைக்கும்! பாங்கி குமாஸ்தாக்களும் சரி, என். ஜி. ஓ.க்களும் சரி, பொது மக்களுடன் நல்ல முறையில் பழகி அவர்களுடைய பூரண அநுதாபத்தைப் பெற முயல வேண்டும். -ஆசிரியர்]

சுபத்திரா இந்தக் கோலத்தைக் காணச் சகிக்காமல் கண்களை இறுக மூடிக் கொண்டு சீதாவின் மேல் சாய்ந்து விட்டாள்.

சீதா சுபத்திராவைப் பலவாறாகத் தேற்றினாள். "சுபத்திரா, இப்படி அதைரியப் படலாமா! அவருக்கு ஒன்றும் நேராது. நீங்கள் கவலைப்படாமல் கூடப் போங்கள்" என்றாள்.

ஒரு வருட காலம் சென்றது. சுபத்திராவின் சமாசாரம் ஒன்றுமே தெரியவில்லை. எதிர் வீடும் பூட்டியே கிடந்தது. யாரோ கணக்குப் பிள்ளையென்று சொல்லிக் கொண்டு ஒருவர் அங்கிருந்த சாமான்களையெல்லாம் லாரியில் போட்டுக் கொண்டு வீட்டைப் பூட்டிக் கொண்டு போய் விட்டார். சீதா மட்டும் ஜன்னலருகே நின்று

கொண்டு எதிர் வீட்டைப் பார்த்துக் கண்ணீர் விடுவான். சுபத்திராவை ரவிகூட ஒருவாறாக மறந்து விட்டான். குழந்தைதானே!

ஒரு நாள் ஞாயிற்றுக் கிழமை வாசு வீட்டிலிருந்தான். நல்ல உடையணிந்தவர்களாக மூன்று பேர்கள் ஒரு காரில் சீதாவின் வீட்டுக்கு வந்தார்கள். "ஸ்ரீமதி சீதாவின் வீடு இதுதானே!" என்று ஒருவர் கேட்டார்.

வாசு அவர்களை வரவேற்றுப் பேசிக் கொண்டிருந்தான். ஒரு மணிநேரம் வரை வந்தவர்கள் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போனார்கள்.

சுபத்திரா இறந்து விட்டதாக அவர்கள் கூறியதைக் கேட்ட சீதா துடிதுடித்துப் போய்க் கண்ணீர் விட்டாள்.

எதிர் வீட்டையும் பதினாயிரம் ரூபாய்கள் ரொக்கத்தையும் 'சுபத்திரா ரவி பேருக்கு உயில் எழுதி வைத்திருக்கிறாள்' என்பதைக் கேட்ட சீதாவுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது.

சீதா கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள். "இந்தப் பணத்தில் ஒரு காலணாக் கூட நாம் உபயோகிக்கக் கூடாது என்பது தான் என்னுடைய இஷ்டம். ரவிக்கு என்று ஆசையாக சுபத்திரா கொடுத்தது உண்மை தான். சுபத்திரா வீட்டை விட்டு வெளியே போகாததால் அவள் நம் ரவி ஒருவனைத்தான் கண்டாள். அதிலே மன நிம்மதி அடைந்தாள். ரவியைப் போல் எத்தனையோ இளங் குழந்தைகள் ஒரு சௌகரியமும் இல்லாமல் அனாதையாக இருக்கிறார்கள். அவர்களுக்கு எதிர் வீட்டில் ஒரு பள்ளிக்கூடம் அமைக்க வேண்டும். அதில் ஒரு புதிய கல்வித் திட்டத்தைப் புகுத்தித் தொழிலும் கல்வியும் ஒருங்கே கற்றுத் தர வேண்டும். ரொக்கப் பணத்தைப் பள்ளிக்கூடம் அமைக்க எடுத்துக் கொள்ள வேண்டும். நாம் பழைய மாதிரி இதே வீட்டில் அமைதியுடன் இருக்கவே ஆசைப்படுகிறேன். சுபத்திராவின் பணத்தினால் ஆடம்பர வாழ்க்கையை ஆரம்பித்து அவள் மாதிரி மன நிம்மதியைக் குலைத்துக் கொள்ள நான் விரும்பவில்லை!" என்று ஆணித்தரமாக, அழுத்தந் திருத்தமாகச் சொன்னாள்.

"இத்தனை செல்வத்தையும் உன்னுடைய சொந்தத்துக்கு உபயோகப்படுத்தக் கூடாது என்று நினைக்கும் நீயே மனிதத் தன்மை உள்ளவள். உன்னுடைய இஷ்டப்படியே எல்லாம் செய்கிறேன். நீ பத்தரை மாற்றுத் தங்கம். என்னை இந்தத் தங்கத்துக்கேற்ற ரத்தினமாக்கப் பகவான் அருள் புரிய வேண்டும்" என்று மனமுருகச் சொன்னான் வாசு.

கூடிய சீக்கிரத்திலேயே எதிர் வீடு "சுபத்திரா அனாதை நிலைய"மாக மாறியது. புதிய கல்வி ஸ்தாபனமென்றதால் சர்க்காரிலும் வேண்டிய உதவி செய்ய முன் வந்தார்கள். இருநூறுக்கு மேற்பட்ட குழந்தைகள், தாய் தகப்பன் இல்லாத அனாதைகள் அங்கு உற்சாகமாகக் கல்வியும் பயின்று அங்கே ஹாஸ்டலிலேயே சந்தோஷமாக இருந்தார்கள். ஏட்டுக் கல்வியை மட்டும் பயில்வதோடு இல்லாமல் அந்தந்தக் குழந்தைகளின் இஷ்டப்படி தொழிலும் கற்றுக் கொடுக்கப் பட்டன. ஒரு வருடத்தில் சுபத்திரா அனாதை நிலையம் மகோன்னத வெற்றியடைந்து விட்டது. இப்போது ரவிக்கு ஆறு வயதாகி விட்டதால் அவனும் அந்தப் பள்ளியிலேயே பயின்று மற்ற குழந்தைகளோடு சகோதர பாவத்தோடு பழகினான்.

வாசு பழைய வேலையை விட்டுவிட்டுச் சுபத்திரா அனாதை நிலையத்தின் மானேஜர் ஆகி எந்தெந்த விஷயத்தில் இன்னும் அபிவிருத்தி செய்யலாம் என்று சிந்தித்த வண்ணமே இருக்கிறான்.

சீதாவோ அல்லும் பகலும் சுபத்திராவின் நினைவை மறக்காமல் அவளுடைய பெரிய படத்தை நிலையத்தின் ஹாலில் மாட்டி அந்தப் படத்துக்கு முன்னால் தான் குழந்தைகள் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்று திட்டமிட்டாள். மாடியிலும் சுபத்திராவின் படத்தை மாட்டியிருக்கிறாள். சீதா ஜன்னலினின்றும் பார்த்தால் சுபத்திராவுக்குப் பதிலாக அவள் படமாவது சீதாவின் கண்ணில் படவேண்டும்.

** ** **

இன்று தான் அனாதை நிலையத்தின் ஆண்டு விழா நடந்தது. அமோகமாக நடந்த இந்த வைபவத்தின் போது தான் சீதாவுக்கும் வாசுவுக்கும் பழைய ஞாபகங்கள் தோன்றின.

"சீதா! வாஸ்தவமாகவே இப்போது சுபத்திராவின் ஆத்மாவுக்கு மிகுந்த திருப்தி ஏற்பட்டிருக்கும். அவளுடைய பணம் நல்ல வழியில் அவள் விரும்பும் குழந்தைகளுக்குச் செலவிடப்படுகிறதே என்பது அவளையே திருப்தியடையச் செய்யும் காரியம் தானே!" என்றான் வாசு.

"சுபத்திராதான் தெய்வமாக இருந்து இங்கு வரும் அனாதைக் குழந்தைகளுக்கு ஆசியளிக்க வேண்டும்!" என்றாள். சுபத்திராவின் படத்தை நோக்கிச் சீதாவின் கரங்கள் தாமாகக் குவிந்தன.

# வேலை நேரமோ விளையாடும் நேரமோ எந்த நேரமானாலும்



கடினமான வேலை காரணமாக உங்கள் உடலிலுள்ள சக்தியெல்லாம் செலவழிந்து, சுறுசுறுப்பான விளையாட்டுகளில் கலந்துகொள்ள இயலாமல் சோர்வடைந்து விடுகிறீர்களா? வேலை செய்வதற்கும் விளையாடுவதற்கும், வாழ்க்கையை புதுமையுடன் கழிப்பதற்கும், தினசரி 'ஒவல்டின்' அருந்துவதன் மூலம் ஏராளமான சக்தியை நீங்கள் பெறலாம். ஏனெனில், 'ஒவல்டின்' பரிபூரண போஷாக்குச் சத்து நிறைந்த உணவு பொக்கிஷம். இன்றே அருந்திப் பாருங்கள்.



விநியோகஸ்தர்கள்:
ரெஹாம்ஸ் ட்ரேடிங் கோ.,
(இந்தியா) லி-ட்.

## -அருந்துங்கள் ருசியான
# ஒவல்டின்




...சக்திக்கும்
ஊக்கத்திற்கும்!

ரேடியோ ஸிலோனிலிருந்து ஒவல்டின் அமெச்சூர் நேரங்களை கேளுங்கள்:
(ஹிந்தி-41.72 மீட்டர்கள்), சனிக்கிழமைகள் இரவு 8 முதல் 8-30 மணி.
(இங்கிலீஷ் 9520 கிலோசைகிள்ஸ் 31 மீட்டர்கள்)
ஞாயிறுகள் இரவு 8 முதல் 8-30 வரை

IV.461

# சக்கரவர்த்தித் திருமகன்

ராஜாஜி

## 29. பெற்ற தாயின் துக்கம்

மூவருடைய உருவம் கண்ணுக்குத் தெரிந்து கொண்டிருக்கும் வரையில் சுமந்திரனும் குகனும் அவர்களைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள். கண்ணுக்கு மறைந்து போனதும் அவர்கள் இருவரும் துக்கத்தில் மூழ்கிக் குகனுடைய நகரம் சென்றார்கள். பிறகு அங்கிருந்து சுமந்திரன் குகனிடம் விடை பெற்றுக் கொண்டு அயோத்திக்குத் திரும்பினான்.

அயோத்தியா நகரத்தை அணுக அணுக வழக்கமாக நகரத்திலிருந்து கிளம்பி வரும் சப்தங்களுக்கும் காட்சிகளுக்கும் பதிலாக நகரம் பாழடைந்த ஊர் போல் தென்பட்டது. சுமந்திரனுடைய தேரானது கோட்டை வாயிலைக் கடந்து ஊருக்குள் பிரவேசித்ததும் "ராமன் எங்கே? ராமன் எங்கே?" என்று ஊரார் தேரைச் சுற்றிக் கொண்டார்கள்.

"அருமை ஜனங்களே! ராம லக்ஷ்மணர்கள் கங்கையைத் தாண்டி விட்டார்கள். என்னை ஊருக்குத் திரும்பு என்று சொல்லி விட்டு அவர்கள் வனத்தில் கால் நடையாகச் சென்றார்கள்" என்று கூறினான்.

"ஐயோ!" என்று கதறினார்கள். "இந்த ஜன்மம் எடுத்தோமே, என்ன பாபம் செய்தோம்!" என்று அழுதார்கள். ரதத்தைப் பார்த்து "இந்தத் தேர் பாழடைந்து கிடக்கிறதே! இந்தத் தேரில் ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் உட்கார்ந்து சென்றார்களே!" என்று கடை வீதி, ராஜ வீதி இவைகளின் இரு புறத்தினின்றும் பெண்கள் அழுத சப்தத்தைச் சுமந்திரன் கேட்டுக் கொண்டே தன் முகத்தைத் துணியால் மறைத்துக் கொண்டு சென்றான். தசரதனது அரண்மனைக்கு முன் தேரை நிறுத்தி விட்டு இறங்கினான்.

அங்கேயும் அரண்மனை வாயிலில் ஒரே ஜனக் கூட்டமாயிருந்தது. "ராமனை வனத்தில் விட்டு விட்டு வரும் இவர் கௌசல்யைக்கு என்ன சொல்லப் போகிறார்? அவள் எப்படி உயிரை வைத்துக் கொண்டிருப்பாள்?" என்றெல்லாம் பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். இதைக் கேட்கக் கேட்கச் சுமந்திரன் துக்கம் அதிகரித்தவனாக மெள்ள அந்தப்புரத்துக்குள்ளே சென்றான்.

அங்கே குற்றுயிருடன் கிடந்த அரசனைப் பார்த்தான். ராமன் அரசனிடம் கூறும்படி சொல்லியிருந்ததையெல்லாம் பக்கத்தில் நின்று மெதுவாகச் சொன்னான். தசரதன் ஒன்றும் பேசவில்லை.

அப்போது கௌசல்யாதேவி துக்கம் தாங்காமல் தசரதனைப் பார்த்துக் கடுமையாகப் பேசினாள்:

"மகா பாக்கியவானே! உலகம் வியக்கும்படியான விரதத்தை ஒப்புக் கொண்ட என் குழந்தையைக் காட்டில் விட்டுவிட்டுத் திரும்பி வந்த தங்களுடைய அமாத்தியர் இதோ நிற்கிறார். ஏன் அவரிடம் ஒன்றும் பேசாமல் இருக்கிறீர்? கைகேயிக்கு வரம் தந்தது அப்போது எளிதாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. இப்போது ஏன் வெட்கப்படுகிறீர்? வரத்தின் பயன் இதுவாகும் என்று உமக்குத்

தெரியாதோ? நீர் என்னவோ உம்முடைய சத்தியத்தைக் காப்பாற்றிக் கொண்டீர். உமக்கு என்ன குறை? என் துக்கத்தில் யார் பங்கு எடுத்துக் கொள்ள முடியும்? அதை நான்தான் அனுபவிக்க வேண்டும். நீர் துக்கப்படுவதைப் பார்த்து எனக்குத் திருப்தி ஏற்பட முடியுமா? துக்கப்பட வேண்டியது முறை என்று நீர் துக்கப்பட வேண்டியதில்லை. ஏன் பேசாமல் இருக்கிறீர்? இங்கே கைகேயி இல்லை; பயப்பட வேண்டாம். ராமனைப் பற்றி அவனை வனத்தில் விட்டுத் திரும்பிய சுமந்திரரை விசாரித்துக் கேட்பீராக. பயப்பட வேண்டாம். இயற்கையை ஏன் வழியடைக்கிறீர்? கைகேயி இங்கே இல்லை.''

துக்கத்தைத் தாங்க முடியாமல் புருஷனை இவ்வாறு குறை கூறிப் பேசினாள் கௌசல்யை.

கோபமும் துக்கமும் பதிபக்தியும் எல்லாம் ஒன்று சேர்ந்து அவள் உள்ளத்தை வேதனை செய்தது. அந்த வேகத்தைத் தாங்காமல் மூர்ச்சையடைந்தாள். இதைக் கண்டு உயிர் போய் விட்டதோ என்று அந்தப்புரம் முழுதும் பயந்தார்கள். அலங்கோலமாயிற்று.

புத்திர சோகத்தினால் கௌசல்யா தேவி தன்னுடைய புருஷனின் உடல் நிலையையாவது மனநிலையையாவது சரியாக உணரவில்லை. அவனுடைய துக்கத்தைக் குறைப்பதற்குப் பதில் அதிகமாக்கினாள். தசரதன் மூர்ச்சை தெளிந்த பிறகு, சுமந்திரனை விசாரித்தான். சுமந்திரனும் இராமன் சொல்லி யனுப்பியவாறு எல்லோருக்கும் சொல்ல வேண்டியதைச் சொல்லித் தன் கடமையைச் செய்து முடித்தான்.

* * *

கௌசல்யா தேவியைச் சுமந்திரன் பலவாறாகச் சொல்லிச் சமாதானப்படுத்தப் பார்த்தான். ''ராமன் இருக்குமிடத்தில் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள். சீதையைக் காட்டுக்கு அனுப்பி விட்டோமே! என்னால் துக்கம் பொறுக்க முடியவில்லை. தண்டகாரண்யத்தில் சீதையுடன் நானும் இருப்பேன்'' என்று கௌசல்யை அழுது கொண்டேயிருந்தாள்.

''தேவி, இந்த மனக் குழப்பத்தை அகற்றி விட்டுத் தைரியமாக இருக்க வேண்டும். அயோத்தியையி லிருந்ததைக் காட்டிலும் வனத்தில் ராமன் மிக ஆனந்தமாகக் காலம் கழித்து வருகிறான். துக்கப்படவே இல்லை. லக்ஷ்மணனும் ராமனுக்குப் பணிவிடை செய்து கொண்டு தரும வாழ்க்கையின் பயனை அடைந்து வருகிறான். அவனுக்கு ஒரு குறையுமில்லை. சீதையோ அரண்மனையில் இருந்தது போலவே வனத்திலும் தன் பிராணனை ராமனிடத்தில் நாட்டிப் பயம், விசனம் ஒன்றுமில்லாமல் மிகச் சந்தோஷமாக இருக்கிறாள். பிறந்தது முதல் காட்டில் வளர்ந்தவளைப் போலவே விளையாட்டாகக் காலங் கழிக்கிறாள். அயோத்தியையில் உத்தியான வனத்தில் ராமனுடன் விநோதமாகக் காலம் கழிப்பது போல் வனத்திலும் சந்தோஷமாகவே இருக்கிறாள். உதய சந்திரனைப் போன்ற அவளுடைய முகத்தின் அழகு கொஞ்சமும் குறையவில்லை. குழந்தையைப் போல் கவலையாவது பயமாவது கொஞ்சமும் இல்லாமல் விளையாடிக் கொண்டிருக்கிறாள். ராமன் பக்கத்திலிருப்பதால் அவளுக்கு வருத்தம் என்பது அணுவளவுமில்லை. செல்லும் வழியில் கிராமங்கள், ஊர்கள், ஆறுகள், மரம், செடி, புஷ்பம் இவைகளைப் பற்றியெல்லாம் விசாரித்து லக்ஷ்மணனோடும் ராமனோடும் சம்பாஷித்துக் கொண்டு உல்லாசமாக நடந்து போகிறாள். வனவாசம் அவளுக்கு ஒரு தோட்டத்தில் விளையாடுவது போலிருக்கிறது. அவள் எழில் எள்ளளவும் குன்றவில்லை. நடப்பதினால் அவள் பாதங்கள் மருதாணி இட்டுக் கொள்ளாமலேயே சிவந்து தாமரையைப் போல் பொலிவு அடைந்து வருகின்றன. வனத்தில் ஆனந்த நர்த்தனம் செய்வது போலவே நடக்கிறாள். கால்களில் சலங்கைகள் இல்லையென்பது தான் வித்தியாசம். நான் சொல்லுவது எல்லாம் உண்மை. நீங்கள் விசனப்பட வேண்டாம். அவர்கள் மூவரும் உலகத்துக்கொரு பாடமாகத் தருமத்தை நடத்தி வருகிறார்கள். சக்கரவர்த்தியின் பிரதிக்ஞையை நிறைவேற்றி வருகிறார்கள். பித்ரு வாக்கிய பரிபாலனம் செய்கிறார்கள். அவர்களுடைய தவம் உலகத்தில் பெரும் புகழுடன் என்றென்றும் நிற்கும். துக்கப்படுவதற்குக் காரணமில்லை.''

இவ்வாறெல்லாம் பல சொல்லித் தேற்றிப் பார்த்தான் சுமந்திரன். ஆனாலும் கௌசல்யை கொஞ்ச நேரம் சமாதானப்படுவாள். பிறகு ''ஐயோ, ராமா!'' ''ஐயோ, குழந்தாய்!'' என்று கதறுவாள். காட்டில் ராமனை விட்டு விட்டு வந்த சுமந்திரனைப் பார்த்த பிறகு அவள் துக்கம் அதிகரித்தது.

"ஆஹா! என் எதிர்கால வாழ்க்கையே வாழ்க்கை...இவ்வைந்து வருடங்கள் எனக்கு எவ்வளவு நன்மைகளை அளிக்கப்போகின்றன! அதோ - ஆற்றின் நடுவே எஃகாலும் கான்க்ரீட்டாலும் ஓர் பிரம்மாண்டமான சுவர் எழுப்பப்படுகிறது..., ஆம். அவர்கள் அணை கட்டுகிறார்கள். இனி பரந்து கிடக்கும் எங்கள் வயல்களுக்கெல்லாம் நீர்ப் பாய்ச்சுவதற்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கும். இனி நாம் வானத்தை நோக்கிக் காத்திருக்க வேண்டியதில்லை!"

இவ்வெளிய உழவனின் ஆசை வார்த்தைகள் நம் மக்களின் உயரிய எண்ணத்தை உறுதிப் படுத்துகின்றன. விவசாயத்தின் நிலையை உயர்த்தி, வறுமை மிஞ்சிய இந் நாட்டை வளம்பெறச் செய்ய ஐந்து வருடத்திட்டத்தில் 795 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வரிய தேசீய திட்டத்தில், நம் விவசாயிகளின் ஒத்துழைப்பு இன்றியமையாதது. உண்மையில், இவர்கள் கையில்தான் நம் நாட்டின் எதிர்கால சுபிக்ஷம் இருக்கிறது.

## செழுமை மிக்க அறுவடை

இவ்வைந்து வருட திட்டத்தின் பல்வேறு சாதனங்களில் பல்லாயிரக்கணக்கான டன் எஃகு உபயோகிக்கப்படும். ஆதலால் நம் நாட்டு மக்களின் வருங்கால வாழ்க்கையை செழிப்புறச் செய்வதில் எஃகானது எண்ணற்ற விதங்களில் ஈடுபடும்.

**தி டாடா அயரன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**



TN 3932



# தங்க மாம்பழம்

## 3. அகப்பட்டுக் கொண்டார்கள்!

வீரப்பன் சொன்னதைக் கேட்டு கிழவி சிரித்துக்கொண்டே, "அவர்கள் இறக்கட்டுமே! அந்தத் தங்க மாம்பழமாவது என்னிடம் வந்து சேரும் அல்லவா? அதுதானே எனக்கு வேண்டும்!" என்றாள்.

"பாட்டி, என்ன உளறுகிறாய்? அடடா, தங்க மாம்பழத்தையுமா அவர்கள் கொண்டு போய் விட்டார்கள்? எனக்குத் தெரியவே தெரியாதே! இந்தச் சமாசாரத்தைக் கேட்டால் அரசனுக்குத் தன் தலையில் இடி விழுந்தது போல் அல்லவா இருக்கும்?" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே சொன்னான் வீரப்பதேவன்.

"ஏன் பயப்படுகிறீர்கள்? ஐந்து நிமிஷத்தில் மாம்பழம் கீழே விழப் போகிறது. எடுத்துக் கொண்டால் போகிறது......!" என்றாள் கிழவி.

"ஆனால் அவர்கள் கதி?" என்றான் வீரப்ப தேவன் மனத்தில் திகிலுடன்.

"அவர்கள் இறக்க வேண்டியதுதான். அவர்கள் உயிர் இங்கு யாருக்கு வேண்டும்? மாம்பழம் அவர்களிட மிருந்தால் நம் எல்லோருக்கும் ஆபத்தல்லவா? அந்தத் தங்க மாம்பழத்தின் ரகசியம் அரசனுக்கும் உமக்கும் எனக்கும் அல்லவா தெரியும்?" என்றாள் கிழவி.

"அது கிடக்கட்டும் பாட்டி, பிரபாகரனையும் உமாவையும் உன்னிடம் ஒப்படைக்கும் பொழுது அரசன் என்ன சொன்னார் என்பது ஞாபகம் இருக்கிறதா? 'பிரபாகரனையும், உமாவையும் ஜாக்கிரதையாக வெளியே வராமல் பார்த்துக் கொள். ஆனால் அவர்கள் உயிருக்கு மாத்திரம் எப்பொழுதும் ஒரு தீங்கும் வரக் கூடாது. ஜாக்கிரதை!' என்று அரசன் கூறியதை மறந்து விட்டாயா!"

"வீரப்ப தேவரே, ஆமாம், ஆமாம்! நான் மறந்தல்லவா போனேன்! முன்பின் யோசனை செய்யாமல் அவர்களை மாயக் குதிரையின் மீது ஏற்றி அனுப்பி விட்டேன். அவர்கள் கீழே விழுந்து இறந்து போனார்கள் என்றால் அரசனுடைய கோபத்துக்கு அல்லவா ஆளாக வேண்டும்?" என்று நடுங்கினாள் கிழவி.

"மன்னன் சொன்ன வார்த்தைகளுக்கு நீ மரியாதையே வைக்கவில்லை. அவர்கள் கீழே விழுந்து இறந்தால் மன்னனுடைய கதி என்ன ஆகும் என்பதை நீ அறிவாயா? உன் காலமும் நெருங்கி விட்டது போலும்!" என்று தன் மீசை துடிதுடிக்க ஆவேசத்துடன் பேசினான், வீரப்பதேவன். உடனே அவன் குதிரையின் மீது ஏறிக் கொண்டு அவ்விடத்தைவிட்டு அகன்றான்.

* * *

பறக்கும் குதிரையின் வாலை உமா பற்றிக் கொண்ட உடனே ஒரு யந்திரத்தைப் போலப் படபட வென்று அடித்துக் கொண்டிருந்த இறக்கைகள் அசைவற்று நின்றன. பறந்த குதிரையும் 'விர்' ரென்று அரை நொடியில் எங்கிருந்து முதலில் கிளம்பிற்றோ அங்கேயே திரும்பி வந்து சேர்ந்தது. பிறகு குதிரை இருந்த இடம் தெரியாமல் மாயமாக மறைந்தது. பிரபாகரனும் அவன் தங்கை உமாவும் கீழே விழுந்து கிடந்தார்கள்.

சற்று நேரத்திற் கெல்லாம் மயக்கம் தெளிந்து எழுபவன் போல் எழுந்தான் பிரபாகரன். எழுந்த உடனே தங்க மாம்பழம் இருக்கிறதா என்று தன் சட்டைப் பையைத் தடவிப் பார்த்தான். நல்ல வேளை. ஜாக்கிரதையாக இருக்கிறது என்று சந்தோஷம் கொண்டான். பக்கத்தில் படுத்துக் கொண்டிருந்த உமாவை உற்றுப் பார்த்தான். கடவுள் தான் நம்மைக் காப்பாற்றினார். உமாவும் இறக்கவில்லை, சற்று மயக்கமாகத்தான் இருக்கிறாள் என்று அருகிலுள்ள ஒரு கிணற்றிலிருந்து கைகள் நிரம்பத் தண்ணீர் கொண்டு வந்து அவள் முகத்தில் தெளித்தான். "உமா, உமா!" என்று இரு

ராஜி



முறை கூப்பிட்டான். உமா கொஞ்சம் கண்களைத் திறந்து மூடினாள். புரண்டு படுத்துக் கொண்டாள்.

"உமா, எழுந்திரு, நாம் சௌக்கியமாகக் கீழே வந்து சேர்ந்து விட்டோம். இனிமேல் பயமில்லை, எழுந்திரு!" என்றான் பிரபாகரன்.

"அப்படியா, நமக்கு ஆபத்து ஒன்றுமில்லையா!" என்று சொல்லிக் கொண்டே தூக்கி வாரிப் போட்டது போல எழுந்தாள் உமா. சுற்றுமுற்றும் பார்த்தாள். "நாம் முதலில் குதிரையின் மீது ஏறிய இடத்திற்குத்தானே மறுபடியும் வந்திருக்கிறோம்? எங்கே அந்தக் குதிரை? நாம் இருவரும் வெகு தூரத்திலிருந்து விழுந்தும் உயிருடன் அல்லவா இருக்கிறோம்?" என்றாள் அதிசயத்துடன்.

"எனக்கும் அதிசயமாய்த்தான் இருக்கிறது, உமா. சரி, புறப்படு! பொழுது விடிவதற்குள் இந்த வயல் காட்டை விட்டு வெகு தூரம் போய் விடலாம்" என்றான் பிரபாகரன்.

உமா பிரபாகரனின் கையைப் பற்றிக் கொண்டாள். இரண்டு பேரும் மெதுவாக நடந்து சென்றார்கள். அவர்கள் கொஞ்ச தூரம் சென்றவுடன் குதிரைகள் ஓடி வருவது போல் சத்தம் கேட்டது. பிரபாகரனும் உமாவும் என்னவென்று திரும்பிப் பார்ப்பதற்குள் வேகமாகக் குதிரையை ஓட்டிக் கொண்டு வந்த மூன்று வீரர்கள் பிரபாகரனையும், உமாவையும் சூழ்ந்து கொண்டார்கள். எதிர்பாராமல் மறுபடியும் தங்களுக்குப் புதிய ஆபத்து வந்து விட்டதை அறிந்த உமா திடீர் என்று கீழே உட்கார்ந்து விட்டாள். உடனே பிரபாகரன் "உமா, பயப்படாதே! எழுந்திரு. இந்தக் குதிரை வீரர்களுக்கும் நமக்குமென்ன? நாம் நம் வழியே செல்வோம்" என்று மேலே நடக்க யத்தனித்தான்.

"நில், அங்கே!" என்றான் ஒரு குதிரை வீரன் கடுமையான குரலில்.

"யாரைப் பார்த்து நில் என்கிறாய்?" என்று கேட்டான் பிரபாகரன்.

"உன்னையும் உன்னுடன் கூட இருக்கும் அந்தப் பெண்ணையும் பார்த்துத்தான்" என்றான் மற்றொரு குதிரைச் சேவகன்.

"நீங்கள் யார் எங்களைப் போக வொட்டாமல் தடுப்பதற்கு? உங்களுக்கு நாங்கள் என்ன குற்றம் செய்தோம்?"

"எங்களுக்குக் குற்றம் செய்ய வில்லை. அரசாங்கத்துக்குக் குற்றம் செய்திருக்கிறீர்கள்!" என்றான் மூன்று குதிரைச் சேவகர்களில் ஒருவனான வீரப்ப தேவன்.

"அரசாங்கத்துக்கு நாங்கள் என்ன ஐயா, குற்றம் செய்தோம்?"

"என்னவா? பாதுகாப்புச் சிறையில் வைக்கப்பட்டிருந்த நீங்கள் எப்படி வெளியே தப்பி ஓடி வரலாம்?"

"எங்களை எதற்காகப் பாதுகாப்புச் சிறையில் வைக்க வேண்டும்" என்று ஆத்திரத்துடன் கேட்டான் பிரபாகரன்.

"நீ கேட்கும் கேள்விக்கு எங்களால் பதில் சொல்ல முடியாது. உங்கள் இருவரையும் அரசன் கட்டளைப்படி கைது செய்து கொண்டுவர அனுப்பப்பட்டிருக்கிறோம். பேசாமல் எங்களுடன் இப்பொழுது வரா விட்டால் இதோ இந்தக் கத்திக்கு இரையாவீர்கள்?" என்று தன்னிடமிருந்த பளபளப்பான கத்தியை வீரப்ப தேவன் உருவிக் காட்டினான்.

பாவம், பிரபாகரனும், உமாவும் அந்த வீரர்களைப் பின் தொடர்ந்தார்கள். முதலில் வீரப்பதேவன் குதிரையின் மீது உட்கார்ந்தபடியே மெதுவாகப் போய்க் கொண்

டிருந்தான். அவனுக்குப் பிறகு பிரபாகரனும் உமாவும் தலைகுனிந்த வண்ணமாக நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பிறகு மற்றைய இரண்டு குதிரைச் சேவகர்களும் மெதுவாக ஆடி அசைந்து வந்து கொண்டிருந்தார்கள்.

கொஞ்ச தூரம் சென்றவுடன் வீரப்ப தேவன் மற்றையக் குதிரை வீரர்களை நோக்கி, "தோழர்களே, விடியற்காலை வரையில் இவர்கள் இருவரையும் எங்கேயாவது பத்திரப்படுத்தி விட்டுச் சென்றால் என்ன?" என்று கேட்டான்.

"கிழவியிடம் ஒப்படைத்து விட்டுப் போகலாமா?" என்றான் ஒரு வீரன்.

"போதும், போதும். உமக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது? மறுபடியும் அவர்கள் தப்பித்துக் கொண்டு போவதற்கா? வேண்டாம். எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது" என்று தலையைத் தடவிக் கொண்டான் வீரப்பதேவன்.

"என்ன, என்ன?" என்று ஆவலுடன் கேட்டார்கள், மற்றைய இரண்டு குதிரைச் சேவகர்களும்.

"அதோ தெரிகிறதே, பார்த்தீர்களா, பெரிய இரும்புக் கூண்டு. அந்தக் கூண்டில் தான் முன் காலத்தில் புலிகளையும் சிங்கங்களையும் அடைத்து வைத்திருப்பார்கள். இப்போது நரிகளையும், ஓநாய்களையும் அடைத்து வைத்து எடுத்துச் செல்லுவதற்காக வைக்கப்பட்டிருக்கிறது. இதுவும் அரசாங்கத்தைச் சேர்ந்ததுதான். நாம், இவ்விருவரையும் நாளைக் காலை வரையில் இதில் பூட்டி விட்டுச் செல்லலாம்" என்றான் வீரப்பதேவன்.

உமா தன் அண்ணன் முகத்தைப் பார்த்தான்; அண்ணன் தங்கை முகத்தைப் பார்த்தான். பார்த்து என்ன செய்வது? வீரப்பன், பிரபாகரனையும் உமாவையும் கூண்டில் அடைத்துத் தன்னிடமிருந்த பெரிய பூட்டால் கூண்டின் கதவைப்பூட்டினான். பூட்டு சரியாகப் பூட்டியிருக்கிறதா என்று மூன்று சேவகர்களும் ஆளுக்கு ஒருமுறை இழுத்துப் பார்த்தார்கள். பிறகு தங்கள் குதிரைகளின் மீது ஏறிக் கொண்டு அந்த நள்ளிரவில் வெகு வேகமாகச் சென்றார்கள்.

மாயா மகேந்திரபுர பட்டினத்தில் அந்த நள்ளிரவிலே எங்கும் நிசப்தம் குடி கொண்டிருந்தது. தெருக்களில் பிரகாசமாக விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. பட்டினத்தின் மத்தியில்தான் அரசனின் அரண்மனை இருந்தது. அரண்மனை, பளிங்குக் கற்களினால் கட்டப்பட்ட ஒரு பெரிய கட்டிடம். அதன் நாற்புறமும் விசாலமான தோட்டம். அரண்மனைக்குப் பக்கத்திலே பல அறைகள் கொண்ட ஒரு சிறிய கட்டிடமும் இருந்தது. இந்தச் சிறிய கட்டிடத்தில்தான் பல தேசங்களிலிருந்து அரசனை நாடி வரும் பல மந்திரவாதிகளுக்குத் தங்கும் இடம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அரண்மனைக் குள்ளே அரசனைப் பார்ப்பதற்கு யாரும் எளிதில் செல்ல முடியாது. பகல் நேரங்களிலேயே அப்படி இருந்தால் இரவில் கேட்க வேண்டுமா? காவல்காரர் பிரதான வாசற் கதவுகளை இரவில் திறக்க மாட்டார்கள்.

அந்த நள்ளிரவில் மூன்று குதிரைச் சேவகர்களும் 'டக், டக், டக்' என்று அரண்மனையை நோக்கி வந்தார்கள். அவர்கள் அரண்மனையை நெருங்கியவுடன் காவற்காரர்கள் பிரதான வாசற் கதவுகளின் முன் வந்து, கதவைத் திறந்து வந்த சேவகர்களுக்குத் தலை வணங்கி நின்றார்கள்.

வேகமாக வந்த குதிரைகள் அரண்மனைப் பிரதான வாசற் கதவண்டை சற்று நின்றன. முதலில் குதிரையின் மீது இருந்த வீரப்பதேவன் சிறிது யோசனை செய்தான். பிறகு மற்றைய இரண்டு குதிரைச் சேவகர்களையும் அனுப்பிவிட்டு, அரசனுடைய அந்தரங்க அறைக்குச் சென்றான். (தொடரும்)



# சுபாஷ் ஏன் தோல்வியுற்றான்




# நீங்கள் தேர்வது என்ன?

| நாவிதன் க்ஷவரமா? | செவன் ஓ'க்ளாக் க்ஷவரமா? |
|---|---|
| பணம் வீணாகிறது. | பணம் மிச்சம். |
| காடுமுரடான தோற்றம். | பலே ஜோரான தோற்றம். |
| வெட்டுக்காயங்கள். | சுகத்துக்கு சுகம். |
| தோல்வியின் சின்னங்கள் | வெற்றிக்கு மார்க்கம். |

முன் போக்கு கொள்கையுள்ள மனிதர்கள் தினமும் க்ஷவரம் செய்து கொள்ள உபயோகிப்பது செவன் ஓ'க்ளாக் ஸ்லாடெட் பிளேடுகள்

## 7 o'clock






10 பிளேடுகள் கொண்ட பாக்கெட் விலை ரூ. 1/-

S 6 (I) TAM

# வேண்டாத பெண்

ரா. கோ.

நீலக் கடலையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த கோபாலனின் உள்ளம் ஆத்திரத்தால் கொதித்துக் கொண்டிருந்தது. அடிக்கடி பெருமூச்சு வெளிவந்து கொண்டிருந்தது. அவனுடைய அழகிய முகம் மறையப் போகும் சூரியனைப்போல் செக்கச் செவேலென்று சிவந்திருந்தது!

'கல்யாணம் என்பது ஒரு சாதாரண விஷயம் என்று பெற்றோர்கள் எண்ணி விட்டார்களா! அவர்களுக்கென்ன, ஒரு நிமிஷத்தில் யாராவது ஒருத்தியைக் கழுத்தில் கட்டி விடுகிறார்கள். பிறகு வாழ் நாள் முழுவதும் அவதிப்படப் போவது நானா அவர்களா! கொஞ்சித்தேனும் யோசித்துப் பார்க்கும் பொறுமையே இல்லை! ஏதடா இப்பொழுதுதான் ஒரு வழியாய் முக்கி முனகி பி. ஏ. என்று ஒரு பட்டம் வாங்கப் போகிறான். அது வாங்கினபின், ஒரு வேலையில் அமர வேண்டும். அதன் பின் ஒரு வருஷம் ஒருவித பிக்கல் பிடுங்கலின்றி ஹாய்யாக இருக்க வேண்டுமே என்று இம்மாதிரியெல்லாம் நாம் கட்டிய மனக்கோட்டையை ஒரு நிமிஷத்தில் தவிடு பொடியாய்ச் செய்யத் தீர்மானித்திருக்கிறார்களே! என்ன அநியாயம்!' என்று இம்மாதிரியெல்லாம் கோபாலனின் மனம் கொதித்துக் கொண்டிருந்தது. வாஸ்தவம்தான்!

கோபாலனின் ஆத்திரத்துக்கு முக்கிய காரணம் அன்று காலை நடந்த சம்பவம்தான். அவன் தன்னுடைய பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை. அதனால் அவனை மிகவும் செல்வமாய்த்தான் வளர்த்து வந்தார்கள்.

அன்று காலை கோபாலனின் தாயார் செல்லம்மாள் எழுந்திருக்கும் பொழுதே கடும் தலைவலியுடன்தான் எழுந்திருந்தாள். எப்படியோ காப்பிக்கு அடுப்பை மூட்டித் தண்ணீர் கொதிக்க வைத்து விட்டாள். அதற்கு மேல் அவளால் தாங்க முடியவில்லை! "ஐயோ, அம்மா" என்று முனகியபடியே மறுபடியும் படுக்கைக்குச் சென்று படுத்து விட்டாள்.

கோபாலன் விழுந்தடித்துக் கொண்டு எழுந்து தைலத்தை நெற்றியில் சூடு உண்டாகும்படி தேய்த்தான். பிறகு அவனே காப்பி தயார் செய்து தாயார் கையில் கொண்டு வந்து கொடுத்தான்.

அப்பொழுது அவள், "ஏண்டா, கோபாலா! ஏன் இம்மாதிரி பிடிவாதம் பிடிக்கிறாய்! இதோ பார், எனக்கோ வயசாகிறது. கொஞ்சம் காரியம் செய்தாலும் மூச்சு வாங்குகிறது. நான்தான் எவ்வளவு நாளைக்குச் செய்ய முடியும்! உனக்குக் கல்யாணம் என்று நடந்து விட்டால் பிறகு நான் நிம்மதியாய் உட்கார்ந்து விடுவேன். உன் சம்சாரத்தின் கையில் குடும்ப பாரத்தை ஒப்படைத்து விடலாம், பார்!" என்றாள்.

"அம்மா, 'கல்யாணம், கல்யாணம்' என்று ஏன் பிராணனை வாங்குகிறாய்! இதோ பார், கண்டிப்பாய்க் கூறி விடுகிறேன். முதலில் என் பி. ஏ. ரிசல்ட் வரவேண்டும். பிறகு ஒரு நல்ல உத்தியோகம் ஆகவேண்டும். அதன்பின் ஒரு வருஷம் ஒரு தொந்தரவு மில்லாமல் ஹாய்யாக இருக்கத் தீர்மானித்திருக்கிறேன். அப்புறம்தான் என் கல்யாணம்" என்றான்.

"கோபாலா, இங்கே பார்! உன் ஜாதகத்தை உன் அப்பா ஒரு பெரிய ஜோஸ்யரிடம் காண்பித்தாராம். நீ எவ்வளவு மோசமாய்ப் பரீட்சை எழுதினாலும் பாஸாகி விடுவாயாம். பிறகு கல்யாணமும் நடந்து விடுமாம். உன் மாமனார் தயவில் எண்ணெய் சம்பந்தமான ஆபீஸில் நல்ல உத்தியோகமும் ஆகிவிடுமாம். ஆதலால் நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே" என்றாள்.

இதைக் கேட்டவுடன் கோபாலன் ஒருவித வறட்டுச் சிரிப்புச் சிரித்தான். அவன் தாய் மேலே தொடர்ந்தாள். "நேற்று டாக்டர் கிருஷ்ணன் என்று யாரோ ஒருவர் வந்திருந்தார். அவருக்கு ஒரே பெண்ணாம். உன் ஜாதகமும் அவள் ஜாதகமும் நன்றாய்ப் பொருந்தி வருகிறதாம். நல்ல சீர்செனத்தி செய்வார். அப்பா உன்னைக் கேட்டுச் சொல்லச் சொன்னார்" என்றாள் செல்லம்.

இந்தச் சமயத்தில் அவனுடைய தகப்பனார் அங்கே வந்தார்.

"ஆமாண்டா, அந்த டாக்டர் நேற்று இங்கே வந்திருந்தார். உன்னைப் பார்க்க வேண்டும் என்றார். நீ எங்கேயோ சென்றிருந்தாய். உன் போட்டோ ஒன்றைக் காண்பித்தேன். அவருக்குப் பரம திருப்தி ஏற்பட்டு விட்டது. நீ பரீட்சை தேறி விட்டால் போதுமாம். உன்னை நல்ல இடத்தில் அவரே சிபார்சு செய்து ஒரு வேலை பார்த்துத் தருகிறாராம். நாம் கேட்கிற அளவுக்குச் சீர் செய்கிறாராம். அதோடு இன்னொரு விஷயத்தையும் உன்னிடம் சொல்லி விடுகிறேன். என்னால் இனி உத்தியோகம் பார்க்க முடியாது. அடிக்கடி அங்



கல்கத்தா அமெச்சூர் நாடகக் குழுவினர் செப்டம்பர் 19-ஆ அன்று ஒபேரா தியேட்டரில் "பக்த ராவணா" என்ற நாடகத்தைச் சிறப்பாக நடித்தனர். இந்த வைபவத்துக்குப் பம்பாய் தமிழ்ச் சங்கத் தலைவரும், கல்கத்தா சுங்க அதிகாரியுமான ஸ்ரீ சட்டநாதன் அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.

தப் பழைய வயிற்று வலி உண்டாகி விடுகிறது. இனி எனக்குப் பூரண ஓய்வு வேண்டும். வருகிற 'பென்ஷன்' வரட்டும். அதோடு உன் சம்பளமும் சேர்ந்து நமக்குப்போதும். நானும் ராமா கிருஷ்ணா என்று பகவந் நாமத்தைச் சொல்லிக் கொண்டு மீதி நாட்களைக் கழித்து விடுவேன்" என்று மேலே மேலே அடுக்கிக் கொண்டே போனார்.

இந்தச் சம்பவம் போதாதென்று அன்று பிற்பகலில் மயிலாப்பூரிலிருந்து கோபாலனின் சித்தப்பா பெண் ஒருத்தி வந்திருந்தாள். அவளிடம் தன்னுடைய குறையை ஒருமுறை சொல்லித் தீர்த்தாள் அவன் தாயார்.

அவள் கோபாலனிடம் "ஏண்டா, நீ அவர்களுக்காகக் கல்யாணம் செய்து கொள்ளா விட்டாலும் எனக்காகவாவது செய்து கொள்ளேன்" என்று சொன்னாள்.

"உனக்காக நான் ஏன் செய்து கொள்ள வேண்டும்!" என்று 'வெடுக்' கென்று கேட்டான்.

"ஏனா! உனக்குக் கல்யாணம் நடந்தால் எனக்கு ஒரு புடவை கிடைக்குமல்லவா!" என்றாள் அவள்.

கோபாலனின் மனம் அப்படியே இடிந்து விட்டது. 'சட்! ஒவ்வொருவரும் தம் தம், நன்மைக்கா அந்தப் பந்தத்தில் புகுத்தப் பார்க்கின்றார்கள்! அம்மாவுக்குக் காரியம் செய்வதற்கு ஆளும், அப்பாவுக்குச் சம்பாதித்துப் போடுவதற்குமா, என்னை விவாகம் செய்து கொள் என்கிறார்கள்! சுயநலக்காரர்கள்! ஒருவருக்காவது நம்மீது உண்மையான அன்பு இல்லை' என்று பலப்பல எண்ணமிட்டது அவன் மனம்.

அவன் மனப் புண்ணை ஆற்றிக் கொள்ளத் தான் கடற்கரையை நாடி வந்தான். நேரம் ஆக ஆக அவனுடைய மனக் கொந்தளிப்பு கொஞ்சம் கொஞ்சமாய்த் தணிய ஆரம்பித்தது. குளிர்ந்த காற்று பட்டதும் அப்படியே தூங்கிவிட்டான். அப்பொழுது அவன் ஒரு கனவு கண்டான்.

வளைந்து வளைந்து செல்லும் ஒரு மாடிப்படி. அதில் அவன் ஏறிக்கொண்டே இருக்கிறான். அதற்கு ஒரு முடிவு இருப்பதாகத் தெரியவில்லை! திரும்பிக் கீழே பார்த்தான். அடேயம்மா! இனி அவனால் கீழேயும் இறங்க முடியாது; மேலேயும் ஏற முடியாது. என்ன செய்வான் பாவம்! வாயிலிருந்து நுரை நுரையாக வெளி வருகிறது. பெருமூச்சு 'புஸ் புஸ்' என்று வந்து கொண்டிருந்தது. ஒருமுறை அண்ணாந்து பார்த்தான். என்ன ஆச்சரியம்! ஒரு பெண் அவன் நின்றிருந்த படியிலிருந்து பத்தடிக்கு அப்பால் நின்றிருந்தாள்! அவள் என்ன அழகாய் இருந்தாள்! கோபாலன் தன் வருங்கால மனைவி எப்படி இருக்க வேண்டும் என்று மனத்தில் ஒரு கற்பனை செய்து வைத்திருந்தானோ அந்தக் கற்பனைப்படியே அல்லவா அவள் இருக்கிறாள்! இருந்த சோர்வெல்லாம் ஒரு நிமிஷத்தில் பறந்தேவிட்டது! அவளைப் பிடிக்க ஒரே எட்டில் அவன் பக்கம் தாவினான். ஐயோ பரிதாபம்! இரண்டு படி தடுக்கி, கீழே அப்படியே உருண்டு வரும் அவனை யாரோ தாங்கிப் பிடிப்பது போல் இருந்தது. அதே பெண்தான் இப்பொழுது அவனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறாள். அந்த ஸ்பரிசம்தான் அவனுக்கு இன்பம் தந்தது. மறு நிமிஷம் அவள் தன் மதுர வாயால் "கவலைப் படாதீர்கள். என் அப்பா ஒரு டாக்டர். இப்பொழுதே அவரிடம் சொல்லி உங்கள் உடம்பைப் பார்க்கச் சொல்லுகிறேன்" என்றாள்.

அவன் ஆர்வத்துடன் அவளைத் தன் அருகில் இழுக்கப் போனான். அந்தச் சமயத்தில் அவள் திடீரென்று மறைந்து விடுகிறாள்.

கனவு முடிந்து திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். "சட், என்ன பயங்கரமான கனவு!" என்று முணுமுணுத்த படியே எழுந்து நடக்க ஆரம்பித்தான்.

ஒவ்வொரு மனிதனுக்கும் தன் இருபதாவது வயதில் ஒரு கோளாறு ஏற்படுவது வழக்கம். அது வாழ்க்கையின் திருப்பம் என்றால் மிகை யாகாது! சிலருக்குத் தாம் பார்க்கும் ஒவ்வொரு பெண்ணிடமும் காதல் ஏற்பட்டு விட்டது போல் இருக்கும். அந்த வயதில் அவர்களுக்கு யார் மீதாவது தீவிரமாக அன்பு செலுத்த வேண்டும் போலத் தோன்றும். முன்பின் தெரியாத பெண்களிடம் ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லிப் பேசுவார்கள். அவளும் தப்பித் தவறிப் பேசி விட்டால் அவளுக்குத் தன் மேல் காதல் ஏற்பட்டு விட்டது என்று தவறாக எண்ணி ஏங்க ஆரம்பிப்பார்கள்!

மற்றும் சிலருக்கு எதைக் கண்டாலும் வெறுப்பாகக் காட்சியளிக்கும். ஏதாவது ஒரு காரியத்தில் தோல்வி ஏற்பட்டு விட்டால் வாழ்க்கையின் மீதே ஒரு பெரிய வெறுப்பு ஏற்பட்டு விடும். எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஓடிவிடலாமா என்றுகூடத் தோன்றும். எந்தப் பெண்ணைக் கண்டாலும் காரணமறியாத ஒரு வெறுப்பு உண்டாகும். ஏதோ உலகத்தையே துறந்த சன்னியாசி போல் இருப்பார்கள்.

நம் கோபாலன் இரண்டாம் வகையைச் சேர்ந்தவன். இரண்டு மூன்று முறை பரீட்சையில் தேறாத காரணத்தினால் அவனுக்கு வாழ்க்கையே கசந்து விட்டது போலத் தோன்றியது. அதோடு பரீட்சையில் தேறி உத்தியோகத்தில் அமர்ந்தவுடன் தான் கலியாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தான். அது அவ்வளவு சீக்கிரம் தவிடு பொடியாகும் என்று கனவிலும் கருத வில்லை!

தன்னை மறந்து பாதையில் நடந்து கொண்டிருந்த கோபாலனுக்குத் திடீரென்று அந்தக் கனவின் நினைவு எங்கிருந்தோ வந்தது. அதை நினைத்த மாத்திரத்திலேயே அவனுக்கு ஒருமுறை வியர்த்துக் கொட்டியது. வளைந்து செல்லும் அந்தப் படிகளையும் தன் வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்தது அவன் மனம். அந்தப் படி ஏறுவது போலத்தான் வாழ்க்கையும் கனமாக இருக்குமா! அப்படியானால் வாழ்க்கை என்னும் அந்தப் படியில் தன்னந் தனியாய் ஏற முடியாதா! அதற்கு 'பெண்' என்ற ஊன்றுகோல் அவசியமா! இம்மாதிரி தனக்குத் தானே யோசித்த வண்ணம் போய்க் கொண்டிருந்த கோபாலனின் காதில் பின்னாலிருந்து வந்த காரின் ஹாரன் சத்தம் சிறிதேனும் காதில் படவே யில்லை! அந்தக் காரைச் செலுத்தி வந்தவராலும் எவ்வளவோ முயன்றும் 'சடக்' கென்று பிரேக் போட முடிய வில்லைதான். 'படா'ரென்று தலைகுப்புற விழுந்த கோபாலனின் நெற்றியிலிருந்து இரத்தம் பெருகி ஓட ஆரம்பித்தது. அந்த இடத்திலே அவன் நினைவை இழந்தான்!

மறுபடியும் அவன் கண்ணைத் திறந்த பொழுது அவன் ஒரு மெத்தையில் படுத்திருப்பதை உணர்ந்தான். அவன் நெற்றியை ஒரு மிருதுவான கரம் வருடிக் கொண்டிருந்தது. அவன் மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தான். என்ன ஆச்சரியம்!

போதும்! போதும்!!











ஒரு பெண், அவன் கனவில் கண்ட அந்தப் பெண்ணே அப்படியே தத்ரூபமாய் எதிரே உட்கார்ந்திருந்தாள்.

அவன் எழுந்திருக்க எத்தனித்தான். அவள் அவனை அப்படியே படுக்கச் செய்தாள்.

பிறகு தன் மதுர வாயால், "தயவு செய்து அப்படியே படுத்துக் கொள்ளுங்கள். நல்ல அடி பட்டிருக்கிறது. இன்னும் ஒரு வாரத்துக்கு இடத்தை விட்டு அசையக் கூடாது என்று அப்பா சொல்லி யிருக்கிறார்" என்றாள்.

கோபாலனுக்கு தான் எங்கே இருக்கிறான், தனக்கு என்ன நேர்ந்தது என்று ஒன்றுமே புரியவில்லை. "எனக்கு என்ன நேர்ந்தது! நான் எங்கே இருக்கிறேன்!" என்றான்.

"என் அப்பா காரில் கடற்கரைக்குப் போய்க் கொண்டிருந்த போது நீங்கள் முன்னால் சென்று கொண்டிருந்தீர்களாம். எவ்வளவோ ஹாரன் அடித்தும் நீங்கள் நகரவில்லையாம். அவராலும் திடீரென்று 'பிரேக்' போட முடியாமல் போகவே கார் உங்கள் மீது ஏறி விட்டதாம்" என்று அவள் விளக்கினாள்.

"உங்கள் அப்பா யார்!" என்றான் கோபாலன்.

"என் அப்பா ஒரு டாக்டர். அவர் பெயர் கிருஷ்ணன்."

"என்ன! டாக்டர் கிருஷ்ணனா!" என்றான் அவனையு மறியாமல்.

"ஏன்!" என்றாள் அப்பெண்.

"இல்லை... ஒன்று மில்லை" என்று மழுப்பினான்.

"உங்கள் தந்தையை என் அப்பாவுக்குத் தெரியுமாம். அவரை அழைத்து வரப் போயிருக்கிறார்" என்றாள் மேலும் அவள்.

எதையோ நினைத்துக் கொண்டவன் போல் கோபாலன் அவளை ஒரு முறை கூர்ந்து நோக்கினான். அவள் என்ன அழகாக இருந்தாள்! மேனி சற்று மாநிறமாக இருந்தாலும் அவள் முகத்தில்தான் என்ன தேஜஸ்! அவளுக்குத் தெய்வ பக்தி அதிகம் என்பதற்கு அறிகுறியாக அவள் நெற்றியில் சிறிது விபூதியும் அதன் மேல் குங்குமமும் இட்டிருந்தாள். கோபாலன் உள்ளம் இனம் தெரியாத இன்பத்தில் மிதக்கத் தொடங்கியது.

இதற்குள் இருவரின் தந்தைமார்களும் வந்து விட்டபடியால் அப்பெண் சட்டென்று உள்ளே போய் விட்டாள். கோபாலனின் தந்தை அலறி அடித்துக் கொண்டு அவனிடம் வந்து, "நல்ல வேளை என் வயிற்றில் பாலை வார்த்தாய்" என்ற கூறியபடி அவன் நெற்றியை அன்புடன் தடவிக் கொடுத்தார்.

அந்த க்ஷணத்திலேயே அவனைத் தம்முடன் அழைத்துப் போகத் துடித்தார் கோபாலனின் தந்தை. ஆனால் அதற்கு டாக்டர் கிருஷ்ணன் மறுத்து விட்டார். இன்னும் ஒரு வாரத்துக்கு அவன் அந்த இடத்தை விட்டு அசையக் கூடாதென்றும், அது வரையில் அவன் தம் வீட்டிலேயே தங்கி உடம்பு பூரண குணமான பின்புதான் போக வேண்டும் என்றும் கண்டிப்பாகக் கூறி விட்டார். கோபாலனின் தந்தை மனமில்லாதவராய் அவர் வேண்டுகோளுக்கு இணங்கினார்.

** ** **

ஒரு வாரம் ஒரு நிமிஷத்தில் ஓடிப் போய்விட்டதுபோல் தோன்றியது கோபாலனுக்கு. ஆகா!

அவன் அந்த ஒரு வாரத்தில் அடைந்த இன்பம், இனி இந்த ஜன்மத்தில் அவனுக்குக் கிட்டுமா!

காலை அவன் கண்ணைத் திறக்க வேண்டியது தான் தாமதம். கையிலே காப்பியுடன் காட்சி யளிப்பாள் டாக்டர் கிருஷ்ணனின் அருமைப் புதல்வி கஸ்தூரி! சிறிது நேரம் அவனுடைய தேக நிலைமையைப் பற்றிக் கவலையுடன் விசாரிப்பாள். பிறகு அன்று வந்த தினசரித் தாளை தானே வாசித்துக் காண்பிப்பாள்! சொல்லி வைத்தாற் போல் பத்து மணிக்குச் சாப்பாட்டுத் தட்டுடன் தயாராய் இருப்பாள் கஸ்தூரி! அவளே பரிமாறுவாள் மாலை சிற்றுண்டி. பிற்பகலிலே அவனுடன் உலக விஷயங்களையும் பற்றிச் சர்ச்சை செய்வாள்.

அந்த ஏழு நாட்களில் ஏழு யுகமாக இருக்கக் கூடாதா என்றெண்ணி, ஏங்க ஆரம்பித்தது கோபாலனின் உள்ளம்!

ஒரு மனிதனுக்கு மனைவி எவ்வளவு அத்தியாவசியம் என்பதை அப்போதுதான் அவன் நன்கு உணர ஆரம்பித்தான்.

* * *

கோபாலன் உடம்பு பூரண குணமாகித் தன் வீட்டுக்கு வந்து ஒரு மாதம் சென்றிருக்கும்.

ஒரு நாள் காலை. அவனுடைய அப்பாவும், அம்மாவும் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். அதில் தன் பெயர் அடிபடுவதைக் கேட்டுச் சற்றுத் தொலைவில் மறைந்து நின்று கேட்டான். "நேற்று அந்த டாக்டர் கிருஷ்ணனைப் பார்த்தேன். பையன் கல்யாண விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தார். நம்ம பையனுக்கு முதன் முதலாகக் கல்யாணம் என்ற பேச்சை ஆரம்பிக்கும் பொழுதே அபசகுனம்மாதிரி விபத்து ஏற்பட்டது. அதிலிருந்து எனக்கு அந்தச் சம்பந்தம் செய்து கொள்வதில் இஷ்டமில்லை" என்றார்.

கோபாலனுக்கு வானமே இடிந்து அவன்மேல் விழுந்தாற் போலிருந்தது. அவன் கஸ்தூரியை விவாகம் செய்து கொள்வது என்றல்லவா தீர்மானித்திருந்தான்! அவனுடைய அந்தப் பணிவிடையைப் போல் இனி அவனுக்கு யார் இந்த உலகில் அவ்வளவு அன்புடன் செய்யப் போகிறார்கள்!

மேலும் தந்தை தொடர்ந்தார்: "இன்னொரு முறை அவரைப் பார்த்தால் கண்டிப்பாய்ச் சொல்லி விடலாம் என்று பார்க்கிறேன். தவிர நம்ம பையன் இப்போ கல்யாணம் வேண்டாம் என்கிறான். மெதுவாக அவன் இஷ்டம்போல் ஆகட்டும்" என்றார்.

இந்தச் சமயத்தில் அவன் தாய் செல்லம்மாள் குறுக்கிட்டாள். "இங்கே பாருங்கோ, இது போனால் போகட்டும். வேறு ஒன்று பாருங்கள். எப்படியாவது இந்தத் தை மாதத்தில் அவனுடைய கல்யாணத்தை முடித்துவிட வேண்டும். இனி என்னால் தாளாது" என்றாள்.

கோபாலனுக்கு அதற்குமேல் தாங்க முடியவில்லை. நேராக 'விடு விடு' என்று அவர்கள் முன்னிலையில் போய் நின்றான். "அப்பா, அந்த டாக்டர் பெண்ணையே எனக்குப் பாருங்கள். எனக்குப் பிடித்து விட்டது" என்றான்.

அவ்வளவுதான்! அவர்கள் அப்படியே ஸ்தம்பித்துப் போய் விட்டார்கள்! அவர்கள் வியப்பில் திறந்த வாய் திறந்தபடியே இருந்தது.

இதற்குமேல், வீணாகக் கதையை வளர்ப்பானேன்! ஒரு நல்ல சுபயோக சுப தினத்தில் கஸ்தூரிக்கும் கோபாலனுக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடந்தேறியது.

கோபாலன் அந்த வருடம் பரீட்சையில் தேறாத போதிலும் அவனது மாமனார் தயவில் பிரபல சோப் தொழிற்சாலையில் மானேஜர் உத்தியோகம் கிடைத்தது.

கோபாலனின் தாயாருக்குத் தற்பொழுது பூரண ஓய்வுதான்! ஆம்! கஸ்தூரி புக்ககம் வரும் பொழுதே தன்னுடன் ஒரு சமையற்காரியையும் அழைத்து வந்து விட்டாள்.

இன்னும் கொஞ்ச நாட்களில் அவன் தந்தை வேலையிலிருந்து ஓய்வு பெறப் போகிறார். தன் சித்தப்பா பெண்ணுக்கு, ஒரு புடவைக்கு இரண்டு புடவையாக வாங்கித் தந்தான் கோபாலன்!

# படித்துப் பாருங்கள்!

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்
## ஆரண்யகாண்டம்

பாரத நாட்டின் ஆதிகாவியமான வால்மீகி ராமாயணத்தில் சுவை மிகுந்த கதைப் பகுதியைத் தன்னகத்தே கொண்டது ஆரண்ய காண்டம்.

காட்டில் வாழ்ந்த முனிவர்கள் ஸ்ரீ ராமபிரானிடம், அப் பிரதேசங்களிலுள்ள அரக்கர் பயத்தைச் சொல்லி முறையிட்டது, ஸ்ரீ ராமபிரான் அவர்களுக்கு அபயமளித்தது, சூர்ப்பனகையின் பிரவேசம், கரன், தூஷணன் முதலிய அரக்கர்களுடன் போர்புரிந்து ஸ்ரீ ராமன் வெற்றிபெற்றது, மாய மான் வருகை, சீதாதேவியை ராவணன் தூக்கிச் செல்லுவது, ஜடாயு மோக்ஷம் முதலிய நிகழ்ச்சிகளெல்லாம் ஆரண்ய காண்டத்தில் அடங்கி யிருக்கின்றன.

சிறந்த வர்ணனைகளையும் உயர்ந்து நிற்கும் உருவகங்களையும் கொண்டது இக் காண்டம்.

ஸ்ரீ ராமபிரானது இணையற்ற மனித இயல்புதான் அவரது அவதாரப் பெருமைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக இலங்குகிறது. அந்தப் புருஷோத்தமனின் அவ்வியல்பை ஆரண்ய காண்டத்தில் நன்கு காண முடிகிறது. மனித வாழ்வின் இணையற்ற இன்பம், அவன் துயரத்தில் தோய்ந்து படுந்துன்பம், பிறகு அவன் மனந்தேறி முயற்சியில் முனைந்து நிற்கும் தன்மை முதலிய மண்ணுலகத்து மானிட வாழ்வின் அநுபவமாக விரிகிறது இக்காண்டம்.

ஏற்கெனவே வால்மீகி ராமாயணத்தைத் தமிழில் மொழி பெயர்க்கும் முயற்சியைத் துவங்கி, சுந்தரகாண்டத்தைச் சிறப்பாக மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கும் ஸ்ரீ டி. எஸ். ராகவன் அவர்கள் அடுத்து இக்காண்டத்தைப் பிரசுரித்திருக்கிறார். மொழிபெயர்ப்பு நல்ல கவர்ச்சியான நடையில் அமைந்திருக்கிறது.

உதாரணம் பார்க்கலாம் :—

"அவ்வழியே நடந்து தண்டக வனம் புகுந்தனர் அம் மூன்று அரண்மனை வாசிகளும். புகுந்ததும், மரமடர்ந்த, கம்பீரமான, இருள் சூழ்ந்த, குகை போன்ற தண்டக வனத்தின் இயற்கை வளங்களைக் கண்ணுறுகிறார்கள். காடென்றால் இதன்றோ காடு! இரவியின் கதிர் நுழையாச் செறிந்துயர்ந்த மரக்கிளைகளும் செடி கொடிகளும் கீழே ஓர் அடர்ந்த இருளைப் பரப்பின. ஒற்றை

யடிப் பாதையோ முள்ளும் கல்லும் மேடும் பள்ளமும் நிரம்பிய நெளிவு கொண்ட நீண்டதோர் மாயச் சுழல்; சற்று அமைதி: பின்பு விலங்ினங்களின் உறுமல், மலைப் பாம்புகளின் சீறல், பெரும் பறவைகளின் அலறல், கடுங்காட்டின் சலசலப்பு."

ஆரண்ய காண்ட நிகழ்ச்சிகளின் உட்பொருள்கள் விளங்கும் வண்ணம் இந் நூலில் நக வலைவுக்குள் சிறப்பாக விவரிக்கப்படும் விஷயங்கள் மொழிபெயர்ப்பு ஆசிரியரின் அரிய முயற்சியின் சிறப்பை எடுத்துக் காட்டுகின்றன.

கிடைக்குமிடம்: டி. எஸ். ராகவன், 21, மந்தவெளித் தெரு, சென்னை—4. விலை: ரூ. 3 0-0

## அராபிக் கதை (முதற் பாகம்)

பழைய உலகப் பெருங் கதை இலக்கியத்தில் பிரசித்தி பெற்று விளங்குவது அராபிக் கதை; கற்பனைக் களஞ்சியம் என்று சொல்லுவதற்குரியது; படிக்கப் படிக்கத் தெவிட்டாத இன்பம் தருவது; சுவை ததும்பும் பல கதைகளைத் தன்னகத்தே கொண்டு உலகத்து ரஸிகப் பெருமக்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைப் பெற்றுவிட்ட இவ்விணையற்ற நூலை, பாக்தாது என்னும் நகரில் ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசு செலுத்திய ஆருன் அல் ரஷீத் என்னும் அரசர் காலத்தில் வாழ்ந்திருந்த ஒரு முஸ்லிம் ஆசிரியர் எழுதியதாகக் கூறப்படுகிறது. இப் பெருங் கதை, உலகத்து மொழிகளிலெல்லாம் மொழி பெயர்க்கப்பட்டுச் சீரும் சிறப்புங் கொண்டு நீண்ட காலமாக வாழ்ந்து வருகிறது.

இம் மாபெரும் நூலின் ஆசிரியர் பெயர் இதுகாறும் புலனாகவில்லையெனினும், அவரது நுண்ணிய அறிவும், உலகியல் அறிவில் அவருக்கு இருந்த இணையற்ற அநுபவமும், மனக் கூறுபாடுகளைத் துருவி யறிந்த அவரது திறமையும் இந் நூலின் மூலம் நன்கு புலனாகின்றன.

அராபிக் கதையின் பழைய தமிழ் மொழி பெயர்ப்பு பிழை மலிந்த நிலையில் நீண்ட காளாக நம் நாட்டில் உலாவி வருகிறது. இந்தப் புது வெளியீடு மேற்படி பிழைகளைத் தவிர்த்து, நல்ல திருத்தங்களுடனும் விளக்கப் படங்களுடனும் வெளியாகி யிருப்பது பாராட்டுக்குரியது.

பதிப்பாசிரியர்: வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை; பதிப்பாளர்: எம். ஆர். அப்பாதுரைப் பிள்ளை, 13, மூத்தியாலு செட்டித் தெரு, புரசைப்பாக்கம், சென்னை—7. விலை: ரூ. 5—0—0

## சைவலினி

சிறு வயதில் தோன்றும் அன்பு, காதலாகி முகிழ்த்து மலர்ச்சியடைவ தென்பது பகற் கனவாகவே போய்விடுகிறது. பாலியத்தில் நேசித்தவர்கள், இளம் வயதில் மீண்டும் சந்திக்காமலே போய்விடுகிறார்கள். மலரவேண்டிய காதல் கருகி யே போய்விடுகிறது.

பிரதாபனும் சைவலினியும் சின்னஞ் சிறு வயதிலிருந்தே இணையற்ற அன்பு பூண்டிருந்தார்கள். வயது வந்ததும், தனக்கும் பிரதாபனுக்கும் மணம் நடக்கும் என்று சைவலினி உள்ளூற எண்ணிக் கொண்டிருந்தாள். மணம் நடக்காது என்று பிரதாபனுக்கு நன்றாகத் தெரியும். ஏனெனில், சைவலினி பிரதாபனின் பங்காளி வீட்டுப் பெண். தலைமுறை விட்டுப் போனாலும் பங்காளிதானே! சைவலினி செய்த முதல் தவறு இதுதான். வேறொருவருக்கு மணம் முடித்து வைக்கப்பட்ட பின்பும் சைவலினி பிரதாபனை நினைத்து ஏங்கினாள்.

பிறகு நவாபினிடமும் வெள்ளைக்காரர்களிடமும் சைவலினி சிக்கிக்கொண்டு பல விதத்திலும் அவதியுறுகிறாள். பிரதாபன், அவளை மிகவும் ஆபத்தான நிலையிலிருந்து காப்பாற்றி விடுகிறான்.

"இந்த உலகத்தில், இந்த என் காதலை அறியக்கூடிய மனிதர் யாரும் இல்லை. இந்தப் பதினாறு வருஷங்களாக நான் அவளைக் கெட்ட எண்ணத்துடன் காதலிக்கவில்லை. என் காதல், வாழ்வைத் துறக்கும் ஒரு ஆசையே...... இந்தப் பிறப்பில், இந்தக் காதல் நல்லதல்ல என்றெண்ணி இவ் வாழ்வைத் துறந்தேன்" என்று பிரதாபன் போர்க்களத்தில் இறக்கும் தறுவாயில் கூறியது எவர் மனத்தையும் உருக்கும். அமர காவிய கர்த்தரான பங்கிம் சந்திரரின் இந் நவீனம் அந்த மேதையின் மெருகு பெற்று விளங்குகிறது.

மொழி பெயர்ப்பு: ரங்கநாத ஆத்ரேயன்; பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, தபால் பெட்டி நெ. 617, மயிலாப்பூர், சென்னை–4. விலை: ரூ. 2–8.



தமிழர்கள் எங்கு சென்றாலும் தமிழ்க் கலைகளை மறப்பதில்லை. பயின்று போற்றி வருகிறார்கள் என்பதற்குச் சமீப காலங்களில் எத்தனையோ சான்றுகள் காணக் கிடைத்தன. ஆனால் அவை யாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல் விளங்குகிறது நாகபுரியில் நிகழ்ந்த நடனக் கச்சேரி.

நாகபுரி சரசுவதி வித்தியாலயத்தின் கட்டிட நிதிக்காக, பம்பாய்க் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் படிக்கும் மாணவி குமாரி லக்ஷ்மி, நாகபுரியில் சென்ற செப்டம்பர் மாதம் 4-ம் தேதி பரதநாட்டிய அபிநயக் கச்சேரி செய்தார். மத்தியப் பிரதேச கவர்னர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யா அவர்கள் தலைமையில் நடந்தநடனத்துக்கு ஏராளமான ரஸிகர்கள் கூடியிருந்து குமாரி லக்ஷ்மியின் நாட்டியக் கலைத்திறமையை வெகுவாகப் பாராட்டினர். சுமார் ரூ. 3000 கட்டிட நிதிக்காக வசூலாகி யிருப்பதாகவும் அறிகிறோம்.

# பிரஷால் தேய்ப்பதால்
# கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஈறுகளைப் பலப்படுத்துகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்.....கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது...அது தரும் சுத்தம் மணிக்கணக்காக நீடிக்கும்!

...பலமான ஈறுகள் புதிய, இனிய சுவாசம் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத் தயாரிக்கும் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனாமலை அரிக்கும் தீய அமிலங்களையும்... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் உதவுகிறது.




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது

**புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்**

# 'கோடக்' பிலிம்கள்

## நீங்கள் விரும்பும் ஒவ்வொரு படத்திற்கும் பூர்ண வெற்றி அளிக்கிறது

உங்கள் காமிராவில் 'கோடக்' பிலிமை நிறைப்பதில் உங்களுக்கு எவ்வித அச்சமும் வேண்டியதில்லை. ஏனென்றால், ஜொலிக்கும் அதிப்பிரகாசமான ஒளியிலிருந்து ஆழ்ந்த நிழல்வரை எச்சமயத்திலும், ஒவ்வொரு சிறு பொருளையும் மிகத் தெளிவாக நீங்கள் பதிவு செய்து கொள்வதற்கு அதுவே உத்தமமானது.




**வெரிக்ரோம்**— படம் பிடிப்பதை பிரியமான பொழுது போக்காக கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கானவர்கள் அதிகப் பிரகாசத்துடன் திகழும் வெளிப்புறக் காட்சிகளை (அவுட்-டோர் ஸ்னாப்ஸ்) படம் பிடிப்பதற்கு வெரிக்ரோமையே விரும்புகிறார்கள்.




**சூப்பர்— X X —** மங்கிய ஒளியிலோ, செயற்கை ஒளியிலோ எடுக்கும் படங்களுக்கும், அதே போல் துரிதமான செயல் காட்சிகளை (ஆக்ஷன் பிக்சர்ஸ்) படம் பிடிப்பதற்கும் மிகவும் சிறந்தது.




**ப்ளஸ்— X —** நல்ல தெளிவான உயர்ந்த ரகப்படங்களுக்கு மிகவும் இசைந்தது. அத்துடன், சிறு நெகடிவ்களிலிருந்தும் கூட மிக அழகான பெரிய என்லார்ஜ்மெண்ட்கள் செய்யலாம்.

● அடுத்தாற்போல் படம் பிடிப்பதற்கு வரும் அவசரத்தை ஒருக்காலும் முன்பே தெரிந்துகொள்ள இயலாது. இன்றே இரண்டு ரோல்கள் —ஒன்று உங்கள் காமிராவில் நிறைப்பதற்கு, இன்னொன்று அதிகப்படியாக கையிருப்பிற்கு—வாங்கி வைத்துக்கொள்ளுங்கள்.

கோடக் லிமிடெட்.
(இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய் • கல்கத்தா
டில்லி • மதராஸ்

K 9019



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. ஷ

சித்திரா.

## 22. காரணம் யார்?

மனோஹர் வயதில் சிறியவன்தான். அவனுக்கு அநுபவமும் ஆற்றலும் கொஞ்சம் குறைவுதான். உலகத்தில் அடிபட அடிபடத் தானே அநுபவம் ஏற்படும்? அநுபவம் குறைவாயிருந்தபொழுதிலும் ஆர்வம் மிகக் கொண்டிருந்தான். அதன் பலனாக அவனுடைய இளம் பிராயம் அவனுக்கு இடையூறாக அமையவில்லை; அருங்குணமாகவே அமைந்து விட்டது. அவன் பொதுக் கூட்டங்களில் பிரமாதமாகப் பேசுவான். பணக்காரனாயிருந்தும் ஏழைகளின் கட்சியை எடுத்துப் பேசியதனால் அவன் புகழ் எங்கும் ஓங்கியது. பத்திரிகைக் காரர்களுக்கு அவன் பல விதத்திலும் உதவி செய்து வந்தான். அதனால் பொது மக்கள், பத்திரிகைக் காரர்கள் எல்லோருமே அவனுடைய உதார குணத்தையும் தேசத் தொண்டையும் பற்றி வானளாவப் புகழ்ந்தார்கள்.

அவன் பொதுக் கூட்டங்களைக் கூட்டி, தானே நல்லபடியாக நிர்வகிப்பான். தேசத் தொண்டர்களைத் தன் வீட்டுக்கு அழைத்துத் தேச நலன்களுக்கான காரியங்களைப் பற்றி ஆலோசனை கேட்பான்; அவர்களுக்கு விருந்துகள் வைப்பான். நகரத்தின் ஒவ்வொரு மூலையிலும் சிறு சிறு சங்கங்கள் நிறுவி அந்தச் சங்கங்களில் தன் முக்கியத்துவத்தையும் பெருமையையும் நிலை நாட்டுவான்.

அவன் தன் வாழ்க்கையில் எளிமையைக் கடைப்பிடித்து வந்தான். அந்த எளிமையிலே தெளிவு தொனிக்கும்; பரிசுத்தம் பரிமளிக்கும். அவன் செய்யும் தொண்டிலே தூய்மை தாண்டவமாடும்; மேன்மை மிளிரும். காரணம் வேறு ஒன்றும் இல்லை. உழைத்து ஊழியம் செய்து ஊதியம் பெற்றுத் தான் வயிறு வளர்க்க வேண்டும் என்ற கவலையைக் கடவுள் அவனுக்கு வைக்காததுதான். பணத்தோடு பிறந்த அவன் தேச நலன்களுக்காகப் பணத்தைப் பணம் என்று பாராமல் செலவிட்டு வந்தான். கடவுள் இதற்காகவே தன்னைப் பணத்தோடு படைத்திருக்கிறார் என்பது அவன் நினைப்பு. அவனுடைய அந்த நினைப்பில் தவறு ஒன்றும் இல்லையே! பணத்தின் பலத்தைக் கொண்டுதானே இந்த உலகத்தில் பல காரியங்களும் நடைபெறுகின்றன? அதனால் அவன், தான் செய்யும் காரியங்கள் அனைத்தும் மிக்க மகத்துவம் வாய்ந்தவை என்று கூறவும் தயாராயிருந்தான்.

அவன் உறுதியிட்ட கொள்கைகளில் பொய் கிடையாது. கலாசாரங்களும் சமய சந்தர்ப்பங்களும் சேர்ந்து மனிதனின் கொள்கைகளை எப்படி உருவாக்குகின்றன என்பதற்கு அவனே ஒரு அழகிய சான்றாக விளங்கினான். மணம் செய்து கொள்வதில்லை என்ற முடிவு அவன் கொள்கைகளில் ஒன்றாயிருந்தது. பிரம்மசரிய வாழ்க்கை வாழ்வதனால் உள்ள பயன் என்ன? கல்யாணம் செய்து கொள்வதனால் மனிதனின் சக்தி எப்படி விரயமாகிறது? வரையறைக்கு உட்பட்டதாகிறது? ஏழை நாட்டில் ஜனப் பெருக்கம் அதிகமாகி விட்டால் அதனால் ஏற்படும் ஏழைமை எப்படியெல்லாம் தீமை விளைவிப்பதாக முடிகிறது?

இது போன்ற அநேக காரணங்களைக் காட்டி அவன் யாருமே மணம் புரிந்து கொள்ளக் கூடாது என்று அபிப்பிராயம் கூறி வந்தான். அது மட்டுமா? தேச பக்தர்கள் மணம் செய்து கொள்ளாமல் இருப்பதைத் தங்கள் முழுமுதற் கடமையாகக் கொள்ள வேண்டும் என்றும் பிரசாரம் செய்து வந்தான். அவனால் ஆகக்கூடிய விஷயமாயிருந்தால் பாரத மக்கள் ஒரு நூற்றாண்டு வரையிலாவது கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று தடையுத்தரவு பிறப்பித்திருப்பான். ஆனால் பாவமே உருவெடுத்த இந்த மானிட சாதி பிரளயமே வந்தாலும் கல்யாணம் செய்து கொள்ளாமல் இராது, அதைத் தடுத்து நிறுத்த யாராலும் ஆகாது என்பதை அவன் நாளடைவில் புரிந்து கொண்டு விட்டான். அதனால் கல்யாணம் செய்து கொள்ளாதே என்று பிறருக்கு உபதேசம் செய்வதை நிறுத்திக் கொண்டு என்ன ஆனாலும் தான்மட்டும் கல்யாணம் செய்து கொள்வதில்லை என்று உறுதி பூண்டான்.

உறுதி பூண்டபின் கல்யாணத்தைப் பற்றி யோசிக்காமலே இருப்பதல்லவா நல்லது? ஆனால் மனத்தினால் ஸ்மரிக்கவே கூடாது என்று எண்ணும் அளவுக்கு அவன் வீர வைராக்கியம் பிடித்தவனாக இல்லை. அப்

படியே இருக்க நினைத்தாலும் அவனால் இருக்க முடியவில்லை. காரணம் குஸுமாவே.

குஸுமாவைப் பார்த்ததிலிருந்து அவனுடைய அந்த உறுதி கொஞ்சம் கொஞ்சமாக ஆட்டம் கண்டது; தளர்ந்து கொடுத்தது. அதன் காரணமாகக் கல்யாணம் செய்து கொள்வது என்பது எல்லோருக்குமே கெடுதலாகமுடியும் என்று எண்ணுவது மிகவும் தவறு என்ற எண்ணம் அவன் உள்ளத்திலே இடம் பெற்றது.

அதனால் 'சொத்து இல்லாதவர்கள், சம்பாதிக்கும் திறமையற்றவர்கள், தங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்குக் கல்வி யறிவு புகட்ட முடியாதவர்கள் இவர்களெல்லோரும் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது. ஆனால் இதுபோன்ற சிரமங்கள் இல்லாதவர்கள் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினால் தாராளமாகக் கல்யாணம் செய்து கொள்ளலாம். அதன் முடிவு ஒன்றும் தவறாக முடியாது. நல்லதாகவே முடியும்' என்ற தீர்மானத்துக்கு அவன் வந்தான்.

எண்ணும் எண்ணத்தில் இனிமைதோன்றினால் மனிதன் பொறுமைசாலியாகிறான். மனத்தில் குடிகொள்ளும் பொறுமை காரணமாக, எண்ணும் எண்ணங்கள் தாராள நோக்கம் படைத்தவையாகின்றன. தாராள நோக்கம் சமத்துவ உணர்ச்சியை உண்டாக்குகிறது. அந்தச் சமத்துவ நோக்கம் நிலைபெற்றுவிட்டால், நாம் வேண்டாம் என்று விலக்கும் பொருளும் நமக்கு வேண்டியதாகி விடுகிறது. இது அநுபவ பூர்வமான உண்மை. இதை யாரும் மறுக்க முடியாது. வருங் காலத்தில் இதன் நிலையாமையை யாராவது நிலைநாட்டி விட்டால் நாட்டி விட்டுப் போகட்டும். தற்போதைக்கு நாம் இதை ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும். ஏனெனில் கல்யாணம் வேண்டாம் என்று கராடியாகக் கத்திக் கொண்டிருந்த மனோஹரின் மனமே குஸுமாவின் நினைவில் நிலைதடுமாறத் தொடங்கி விட்டதென்றால் அப்புறம் வெளியில் சென்று சான்று வேறு தேட வேண்டுமா?

சுதேசிக் காலுறைகள் அணிந்திருந்த மனோஹர் தன் சிவந்த கால்களை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டான். அடுத்த கணமே அவனுக்குச் சிவந்த மேனி படைத்த குஸுமா நினைவு வந்தாள்.

வேலை நிறுத்தம் செய்தவர்களுக்குத் தான்யம் வழங்கி வழங்கிக் களைத்துப் போன மனோஹர் அப்பொழுது இளைப்பாறிக் கொண்டிருந்தான். ஆலை மானேஜர் பிராணலால் ஒப்பந்தம் செய்து கொள்வதற்காக அவனை அதே நேரத்தில்தான் ஆலைக்கு வருமாறு அழைத்திருந்தார். ஆனால் அப்பொழுதிருந்த களைப்பில் அவனுக்குத் தன்னால் போக முடியும் என்று தோன்றவில்லை.

நாட்டுக்கு உழைப்பவர்களும் மனிதர்கள் தானே? மனிதர்களாகப் பிறந்தவர்களுக்குக் களைப்பு ஏற்படுவது சகஜந்தானே? களைப்புத் தீர இளைப்பாற யாருக்குமே உரிமை உண்டு. அதுவும் பிரபல தேச பக்தரா யிருந்து விட்டால் கேட்கவேண்டுமா? அவர்கள் செய்யும் காரியங்கள் சிறியதாக இருந்தாலும், அவர்களுக்கு இளைப்பாற அதிக நேரம் தேவை. அவர்களை வேண்டும் அளவு இளைப்பாற விட வேண்டியது தேச மக்களாகிய நமது ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும். இளைப்பாறும்பொழுது யாருமே அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது. ஏனெனில் அப்பொழுது அவர்கள் உடல் மட்டுமேதான் இளைப்பாறுகிறதே ஒழிய மனம் செயல் பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. அதே போலத்தான் மனோஹர் உடலுக்கு இளைப்பாற இடம் கொடுத்துக் கொண்டிருந்தான். ஆனால் அவன் மனம் செயல்பட்டுக் கொண்டு தான் இருந்தது. 'இந்த வேலை நிறுத்தம் குஸுமாவின் மனத்தில் எந்த முறையில் இடம் பெற்றுப் பிரதிபலிக்குமோ?' என்ற கேள்வி அவன் மூளைக்கு அப்பொழுது வேலை கொடுத்துக் கொண்டிருந்தது.

பெண்ணுக்கும் வீரனுக்கும் உள்ள தொடர்பு மிகவும் மென்மை வாய்ந்தது. பெண்ணின் பிரேமைக்குப் பெருமை கொடுக்காதவன் வீரனாக மதிக்கப் படுவதில்லை. வெற்றி வீரன் பெண்களை வதைப்பதில்லை; அவர்கள் மீது கை ஓங்குவதில்லை. வீரத்தைப் பற்றிய இந்தச் சட்டம் எங்குமே ஒரேமாதிரியானது. வீரன் எந்த வீரனாயிருந்தால் என்ன? வீரன் வீரன்தானே? யுத்தம் புரிவதில் வீரனாயிருந்தால் என்ன? எண்ணக் கோட்டைகள் கட்டுவதில் வீரனா யிருந்தால் என்ன? அல்லது திட்டங்கள் வகுப்பதில் தான் வீரனா யிருந்தால் என்ன?

'என் தரப்பு ஆசாமிகள் குஸுமாவுக்குப் பிடிக்காத காரியத்தைச் செய்திருக்க மாட்டார்களே?'—மனோஹர் யோசனையில் ஆழ்ந்தான். குஸுமாவின் காரில் யாரோ கல் எறிந்தார்கள் என்னும் செய்தி அவன் செவி வரை எட்டி யிருந்தது. அதற்காக அவன் மிகவும் மனம் வருந்தினான். அந்தச் செயலுக்காக நேரில் சென்று குஸுமாவிடம் அநுதாபம் தெரிவித்து மன்னிப்பும் கோர வேண்டும் என்று அவன் எண்ணமிட்டுக் கொண்டிருந்த பொழுது ஜுகல்கிஷோர் அவன் எதிரே வந்து உட்கார்ந்தான். யோசனையில் மெய் மறந்து ஆழ்ந்திருந்த மனோஹருக்கு ஜுகல்கிஷோர் தன்னருகே வந்து உட்கார்ந்தது தெரியவே தெரியாது.

"அட! என்னவோ பிரமாதமான யோசனையில் ஆழ்ந்திருக்கிறாற் போலிருக்கிறதே!" என்று ஜுகல்கிஷோர் கேட்ட பின்தான் மனோஹருக்குத் தன் ஸ்மரணை வந்தது.

"ஓகோ! நீங்களா? ஒன்றுமில்லை. சும்மாத்தான் உட்கார்ந்திருக்கிறேன். ஆமாம், இப்பொழுது நீங்கள் எங்கே யிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டான் மனோஹர்.

"நீ எந்த இடத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறாயோ, அதே இடத்திலிருந்துதான் வந்து கொண்டிருக்கிறேன்!" என்று ஜுகல்கிஷோர் ஒரு குருட்டாம் போக்கில் ஊகமாகப் பதில் சொல்லி வைத்தான்.

"என்ன? நீங்கள் குஸுமாவின் வீட்டிலிருந்து வந்து கொண்டிருக்கிறீர்களா?"

மனோஹர் தன் மனத்தில் உள்ளதை அநாயாசமாகக் கூறி விட்டான். முன் பின் யோசியாமல் நாம் நமது இருதயத்தைத் திறந்து ஜுகல்கிஷோருக்கு முன் வைத்து விட்டோமே என்பது அவனுக்கு அப்பொழுது விளங்க வில்லை.



"ஆமாம், ஆமாம்!"

"அப்படியா? இத்தனை நேரம் வரை நீங்கள் அங்கேதான் தங்கி யிருந்தீர்களா? அங்கு நடந்ததை ஒன்று விடாமல் எனக்குச் சொல்லுங்கள்!" என்று குரலில் ஆவல் ததும்பக் கேட்டான் மனோஹர்.

"சமயம் வரும்பொழுது எல்லாவற்றையும் சொல்கிறேன். ஆனால் உன் ஆசாமிகளே குஸுமாவின் தந்தைக்கு எதிராகப் பொய்ப் பிரசாரங்கள் செய்கிறார்களே! அது அவர்களுக்கு எவ்வளவு தவறாகப்படும், தெரியுமா?" என்று கேட்டான் ஜுகல்கிஷோர்.

"உண்மைதான். சாந்திப் பிரியன் எந்த விஷயத்தையும் உள்ளது உள்ளபடியே உண்மையாக வெளியிடுவ தில்லை. எதற்கும் ஒரு காது மூக்கு வைத்துப் புது உருவம் கொடுத்துத்தான் வெளியிடுகிறான். இவ்விஷயம் எனக்குத் தெரிந்ததுதான்!"

பெண்களின் ஒத்துழைப்பு தேசிய வாழ்வின் சூழ்நிலையைப் புனிதமாக்குகிறது என்று எத்தனையோ சிந்தனையாளர்கள் கூறுகிறார்கள் அல்லவா? அவர்களது முடிவு சரியான, தப்பா என்பதை ஆராய முற்பட்டிருப்பவனைப் போல் சாந்திப் பிரியனின் குறைவு நிறைவுகளைச் சுட்டிக் காட்டிப் பேச்சைத் தொடர முயன்றான் மனோஹர்.

"ஆமாம், அவன் இப்படி எழுதுவதற்குக் காரணம் என்ன? உனக்குத் தெரியுமா?"

"தெரியாது!"

"தெரியாமலே இருக்கட்டும். அதன் காரணத்தைக் கூறி எவருக்கும் எதிராக உன் மனத்தைக் கலக்க நான் விரும்ப வில்லை. அதனால் அந்தப் பேச்சை விடு!" என்றான் ஜுகல்கிஷோர். ஒரு விஷயத்தைக் கேட்கும் ஆவலைப் பிறரிடம் கிளறி விடுவதற்கு ஜுகல்கிஷோர் கையாளும் முறையே அலாதி. இந்த விஷயத்தில் அவனை யாருமே மிஞ்ச முடியாது. அவன் கையாண்ட யுக்தி மனோஹரின் விஷயத்தில் உடனடியாகப் பலன் அளித்தது. அவன் ஆவலை அடக்க முடியாமல், "அதெல்லாம் உங்களை விட முடியாது. என்ன ஆனாலும் நீங்கள் காரணத்தை எனக்குக் கூறித்தான் ஆக வேண்டும்!" என்று பிடிவாதமாகக் கூறினான்.

"எதற்கு அப்பா எனக்கு இந்த வீண் வம்பும், தும்பும்? காரணம் தெரிய வேண்டுமென்றால் நீயாகவே தேடித் தெரிந்து கொள்ளேன்! நான் எதற்காகப் பிறரைக் குறை கூறவோ தூற்றவோ வேண்டும்? அப்படிச் செய்வதனால் எனக்குத்தான் என்ன பலன்?" என்றான் ஜுகல்கிஷோர்.

"உங்கள் சுபாவம் எனக்குத் தெரியாதா? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்! எத்தனையோ பேர் ஏக காலத்தில் எதிர்த்தும் நான் பிடிவாதமாக உங்களை எங்கள் சங்கத்தில் சேர்த்துக் கொள்ள வில்லையா? அது மட்டுமா? லால்ஜி ஸேட்டுக்கு வாக்குகள் சேகரிப்பதற்காக நான் எத்தனை முயற்சிகள் எடுத்துக் கொண்டேன்? அப்படி யிருக்கும் பொழுது என்னிடமே தாங்கள் இப்படி விட்டேற்றியாகப் பேசலாமா? அதுவும் உண்மையை ஒளிக்காமல் ஒருவரிடம் கூறுவது ஒருவரைக் குறை கூறுவதாகவோ தூற்றுவதாகவோ எப்படி முடியும்?"

"இதோ பார்! நீ வற்புறுத்திக் கேட்கிறாயே என்பதற்காகச் சொல்லுகிறேன். என் பெயரை நீ எங்கேயும் சந்திக்கு இழுத்து விடக் கூடாது. உன்னைப் போலவே சாந்திப் பிரியனும் எனக்கு வேண்டியவன்; உற்ற நண்பன். உண்மையை ஒளிக்காமல் கூறி மக்களைத் தவறான பாதையில் போக வொட்டாமல் தடுக்கிறேன் என்பதற்காக நான் எத்தனையோ பேர்களின் விஷயத்தில் கெட்டவனாகி விட்டேன். என் பிறவிக் குணமே அதுவாக இருக்கும் பொழுது நான்

எப்படி என்னை மாற்றிக் கொள்ள முடியும், நீயே சொல்! இருந்தாலும்......"

"என் மீது உங்களுக்கு நம்பிக்கை உண்டாக வில்லையா?"

"அதெப்படிச் சொல்ல முடியும்? இருந்தாலும் நீ ரொம்ப சாது; வெள்ளையுள்ளம் படைத்தவன்; வெளுத்ததெல்லாம் பால் என்று நினைப்பவன். வெண்ணெய்க்கும் சுண்ணாம்புக்கும் உள்ள வேறுபாட்டைக் கூட அறியாதவன். அதனால் எத்தனையோ பேர் உன் அறியாமையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தங்கள் காரியங்களைச் சாதித்துக் கொண்டு விடுகிறார்கள். இதை நான் பல தடவைகள் என் கண்களாலேயே கண்டிருக்கிறேன்!" என்றான் ஜுகல்கிஷோர். அவனும் அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவன் தான். இருந்தாலும் தன்னையும் சேர்த்துக் கொண்டு பேசினால் சாமர்த்தியசாலி என்று பெயர் பெற முடியுமா?

"போனால் போகிறார்கள், மடையர்கள்! அதற்கு நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம்!" என்றான் மனோஹர்.

"இதோ பார்! நான் சொல்கிறேனே என்று எண்ணி வருத்தப்படாதே! குஸுமாவுக்கு உன்னிடம் கொஞ்சங்கூட நல்ல அபிப்பிராயம் கிடையாது. அதனால் நம் பத்திரிகைக்கு எதிராகத் தன் தகப்பனாரிடம் சொல்லி ஒரு புதிய பத்திரிகை ஆரம்பிக்க உத்தேசித்திருக்கிறாளாம்!"

"இது நானும் கேள்விப் பட்ட விஷயம் தான். தன் பேனாவைக் கொஞ்சம் அடக்கி ஓட்டும்படியாகச் சாந்திப் பிரியனிடம் சொல்லி விட்டால் போயிற்று!"

"நீ சொல்லலாம். ஆனால் அதற்குச் சாந்திப் பிரியன் செவி சாய்க்க வேண்டுமே! ஆமாம், இது வரை நீ இம்மாதிரி ஒரு தடவை கூடச் சொன்னதில்லையா?"

"சொல்லாமல் என்ன?"

"சொல்லி அவன் கேட்டானா? இந்த இடத்தில் தான் நீ விஷயத்தைச் சரியாய்ப் புரிந்து கொள்ளவில்லை!"

"நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் சரியாக விளங்க வில்லையே!"

"விளங்காது தான்! விளங்க வேண்டும் என்றால் கண்ணில் எண்ணெயை விட்டுக் கொண்டு கவனிக்க வேண்டும்; கொஞ்சம் மூளையைச் செலவிட்டும் பார்க்க வேண்டும். ...ஆமாம், சாந்திப்பிரியன் இவ்வளவு உக்ரமாகவும் உஷ்ணமாகவும் எழுதுகிறானே, ஏன் என்று கவனித்தாயா?"

"இது கூடத் தெரியாதா? நம் கட்சியைப் பலப் படுத்தும் நோக்கத்தோடுதான். காரணம் வேறு எதுவாக இருக்க முடியும்?"

"உன் மூளை உலக்கைக்கொழுந்து என்று நான் சொன்னால் உனக்குப் பிரமாதமாகக் கோபம் வந்து விடும். காரணம் நீ நினைப்பதல்ல. குஸுமா உன்னை மட்டரகமானவன், தாழ்ந்தவன் என்று மதிக்க வேண்டும் என்பதற்காகத்தான் அவன் அப்படி எழுதுகிறான்!"

"தென்னை மரத்தில் தேள் கொட்டிற்று; பனைமரத்தில் நெறி கட்டிற்று என்ற கதையாகப் பேசுகிறீர்களே! நீங்கள் சொல்வது மிகவும் வேடிக்கையாக அல்லவா இருக்கிறது! குஸுமா என்னைப் பற்றித் தாழ்ந்த அபிப்பிராயம் ஏன் கொள்ளப் போகிறாள்? ஆசிரியன் என்ற ஹோதாவில் சாந்திப் பிரியனின் பெயர்தானே அடிபடுகிறது!"

"ஆமாம். இருந்தாலும் உன் உதவியின்றிப் பத்திரிகை நடக்க வில்லை என்பது உலகம் அறிந்த உண்மை. நீ தான் பத்திரிகைக்குப் பொருளுதவி செய்கிறாய், ஜீவநாடியாக விளங்குகிறாய் என்பதை அறியாதவர் எனக்குத் தெரிந்தவரை யாருமே கிடையாது."

"இருக்கட்டும், அதனால் என்ன?"

"அதனால் என்னவா? என் எசமானர் சொற்படி எழுதுகிறேன் என்று சொல்லிப் பத்திரிகைக்கு ஆசிரியனாக உள்ளவன் தப்பி விடலாம் அல்லவா?"

"ஆமாம், சாந்திப் பிரியன் அப்படிச் சொல்லிக் கொண்டு திரிகிறானா?"

"அப்படிச் சொல்லிக் கொள்வதனால் அவன் தன்னலம் நிறைவேற வசதி யிருக்கிறதே!"

"என்ன? தன்னலமா?"

"ஆமாம், ஸர் பிஹாரிலால் ஆரம்பிக்க விருக்கும் பத்திரிகையில் அவனுக்கு ஆசிரியர் பதவி கிடைக்குமே!"

"அப்படியா?"

"அது மட்டுமா? அதோடு அதைக் காட்டிலும் பெரிய காரியம் ஒன்றும் அவனுக்கு நிறைவேற இருக்கிறது!"

"இம்மாதிரி யெல்லாம் பேசி எனக்குக் கடுக்காய் கொடுக்கலாம் என்று பார்க்கிறீர்களா? அவனுக்கு அப்படி என்ன பெரிய காரியம் நிறைவேற விருக்கிறதாம்?" என்று ஆத்திரத்துடன் கேட்டான் மனோஹர்.

"நான் சொன்னால் ஒரு வேளை உனக்கு நம்பிக்கை ஏற்படாது!"

"நான் நம்புவது நம்பாதது ஒருபுற மிருக்கட்டும். விஷயம் என்னவென்று முதலில் சொல்லுங்கள். அதையாவது கேட்டுத் தெரிந்து வைத்துக் கொள்ளுகிறேன்."

"ஸர் பிஹாரிலாலின் பெண் இன்னும் கல்யாணம் செய்து கொள்ளாமல் கன்னியாகவே இருக்கிறாளே, ஏன் தெரியுமா?" என்று கேட்டான் ஜுகல்கிஷோர்.

'இதென்ன இது? புற்றிலிருந்து ஈசல் புறப்படும் கதையாக இருக்கிறதே! ஒரு வேளை குஸுமாவுக்கு என்னைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லையோ?'

கல்யாண விஷயத்தில் கடுமையைக் கடைப்பிடித்து வந்த மனோஹர் குஸுமாவைப் பார்த்த பின் மனத்தைத் தளர விட்டிருந்தான் அல்லவா? அதனால் அவன் மனத்தில் மேற்கூறிய சந்தேகம் எழுந்தது. எனவே, அவனுடைய இருதயத்தை இனந் தெரியாத

வேதனை வாட்டியது. இருந்தாலும் மனத்தில் உள்ள துயரத்தை முகத்தில் படர விடாமல், "அவரவர்கள் இஷ்டம். அதற்கு வேறு காரணம் என்ன இருக்க முடியும் என்பது எனக்குப் புலனாக வில்லை!" என்று பதில் அளித்தான்.

"நீ இதை யெல்லாம் எங்கே விசாரித்துக் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கப் போகிறாய்? நீதான் கல்யாணமே வேண்டாம் என்று சொல்பவனாயிற்றே! உனக்குக் கல்யாணத்தைப் பற்றிக் கவலை எதற்காக எழப் போகிறது? ஆனால் என்னைக் கேட்டால் கல்யாண விஷயத்தில் உனக்கு உள்ள அசிரத்தை சாந்திப்பிரியனுக்குச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள வழி வகுத்துக் கொடுக்கிறது என்றுதான் கூறுவேன்!" என்றான் ஜுகல் கிஷோர்.

அப்பொழுதும் மனோஹரின் மனத்தில் ஜுகல் கிஷோர் என்ன சொல்கிறான் என்பது உறைக்கவில்லை. எனவே, தன் அறியாமையை வெளிப்படுத்தும் தோரணையில், "அப்படியா சமாசாரம்? ஸர் பிஹாரிலாலின் பத்திரிகைக்கு ஆசிரியனாகப் போகலாம் என்பதற்காகவா அவர் பெண் விஷயத்தில் சாந்திப்பிரியன் இவ்வளவு சலுகைகள் காட்டிக் கொண்டிருக்கிறான்? இது விஷயம் இன்று வரை எனக்குத் தெரியாமற் போய் விட்டதே!" என்றான்.

"அப்பப்பா! இன்னும் உனக்கு விஷயம் விளங்க வில்லையே! நீ சொல்வது போல் இருந்தால் கூடப் பரவாயில்லையே! தொலைகிறது என்று விட்டு விடலாமே! விஷயம் ரொம்ப முற்றி விட்டது. குஸுமா தானாக விரும்பி இணங்கா விட்டால் பலவந்தப் படுத்துவது என்று கூட...!" என்று ஆரம்பித்த ஜுகல்கிஷோர் சொல்லக் கூடாததைச் சொல்லி விட்டவன் போல உதடுகளைக் கடித்துக் கொண்டான். பிறகு சொன்னவற்றை மறைக்க முயல்பவனைப் போல், "ஊஹூம், ஊஹூம். அதெல்லாம் ஒன்றும் இல்லை. இந்த விஷயத்தில் நான் ஒன்றும் அதிகமாகத் தலையிட விரும்பவில்லை!" என்று கூறி முடிக்கப் பார்த்தான். முடிக்கப் பார்த்தானா? இல்லை, இல்லை! மனோஹரின் ஆவலை மேலும் கிளறி விடத்தான் பார்த்தான்!

"ஓகோ! விஷயம் இத்தனை தூரத்துக்கு வந்து விட்டதா? நான் இப்பொழுதே சாந்திப் பிரியன், அவன் பத்திரிகை எல்லாவற்றிலிருந்தும் என் தொடர்பை அறுத்துக் கொண்டு விடுகிறேன்! பத்திரிகைக்குக் கொடுக்கும் பொருளுதவியையும் உடனே நிறுத்தி விடுகிறேன்!"

"அது உன் சொந்த விஷயம். உனக்கு ஆயிற்று, அவனுக்கு ஆயிற்று. இதை யெல்லாம் என் காதில் போடாதே! ஆனால் ஒன்று; ஆரம்பத்தில் நாலைந்து நாட்கள் இரவு எட்டு மணி சுமாருக்கு ஆற்றங்கரைப் பக்கம் உலாவப் போய் வருவது என்று வைத்துக் கொள். அப்புறம்தான் நான் சொல்வதெல்லாம் உண்மை என்கிற விஷயம் உனக்கு விளங்கும்; என் வார்த்தையிலும் நம்பிக்கை ஏற்படும்!" என்றான் ஜுகல்கிஷோர்.

"போய்ப் பார்க்க வேறு வேண்டுமா? நீங்கள் சொன்னாலே எனக்குப் போதாதா? இந்தக் காரியத்துக்கு ஒரு நாளும் நான் இடம் கொடுக்க மாட்டேன். ஒரு பெண்ணைப் பலவந்தப் படுத்துவதா? ச்சீ! நினைக்கவே மனம் கூசுகிறதே! என் நண்பர்கள் இவ்வளவு கயவர்களா? இத்தகைய நீழ்த்தரமான காரியத்தில் இறங்குவார்களா? நம்பிக்கை ஏற்பட மாட்டேன் என்கிறதே!"

"மனிதன் பணங் காசுக்காக எது வேண்டுமானாலும் செய்வான். ஆனால் பெண் விஷயம் குறுக்கிட்டால் பணம் காசு விஷயமெல்லாம் பறந்து விடும்; மறந்து விடும்!"

"ஆனால் ஜுகல்கிஷோர், உங்களிடம் ஒரு விஷயம் கேட்கணும் என்கிறது. குஸுமா என்னைத்தான் காதலிக்கிறாள் என்பதற்கு என்ன அத்தாட்சி இருக்கிறது?" என்று கேட்டான் மனோஹர்.

அத்தனை தூரம் பேசியபின் அவனுக்கு அத்தாட்சி தேவையில்லைதான்; அதைப் பற்றிக் கேட்க வேண்டியதும் அவசியம் இல்லைதான். இருந்தாலும் குஸுமாவைப் பற்றி மேலும் மேலும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் அவனை அப்படி உந்தித் தள்ளியது. காதலையும் காதலியையும் பற்றிப் பேசுவதென்றால் சுவாரஸ்யமாக இராமல் வேறு எப்படி யிருக்கும்?

"நான் கவனித்தவரையில் அவள் உன்னைத் தான் காதலிக்கிறாள் என்பதைக் கண்டேன். இவ்விஷயத்தில் எனக்குத் துளிக்கூட அவநம்பிக்கை எழவில்லை. உனக்கு நம்பிக்கை ஏற்படா விட்டால் உன் அம்மாவையே வேண்டுமானாலும் கேட்டுப் பார்!" என்றான் ஜுகல் கிஷோர்.

தாயாரிடம் பக்தி பூண்ட மனோஹருக்கு ஜுகல்கிஷோர் சொன்ன சொற்கள் உண்மையானவை என்றே பட்டன. ஸர் பிஹாரிலாலின் பெண்ணைப் பற்றிப் பல சந்தர்ப்பங்களில் அவன் தாயாரே சொல்லி யிருக்கிறாள். அவ் விஷயங்களும் அவனுக்கு அப்பொழுது நினைவுக்கு வந்தன. அவற்றை யெல்லாம் ஆதாரமாகக் கொண்டு அவன் குஸுமா தன்னைக் காதலிக்கிறாள் என்றே நம்பினான்; முடிவும் கட்டினான். அதன் காரணமாக அவன் மாலை நேரங்களில் ஆற்றங்கரைப் பக்கம் உலாவப் போவதைத் தன் தினசரிக் கடமைகளில் ஒன்றாக்கிக் கொண்டான். குஸுமாவுக்குத் தீங்கு இழைக்க முற்பட்டிருக்கும் கும்பலை ஒழித்துக் கட்டுவதற்கென்றே வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட்டிருக்கும் வீரனாகவே தன்னைக் கருதலானான்.

கற்பனை, வாழ்க்கையில் விதம் விதமான விசித்திர வர்ணக் கலவைகளைச் சிருஷ்டித்து வேடிக்கை காட்டுகிறது என்பது எவ்வளவு உண்மை! மனோஹரின் வாழ்க்கையே அதற்கு எடுத்துக் காட்டாக விளங்கியது. ஆகா! கற்பனைக்குத்தான் எத்தகைய விசித்திரமான திறன் கிட்டியிருக்கிறது! (தொடரும்)

# மிக மலிவானது...

## 600 சதுர அங்குலத் தாளின் விலை 1½ அணுவுக்கும் குறைவு!

மிகவும் எளிய வஸ்து...ஆயினும் விற்பனை செய்வதற்கு இன்றியமையாதது. ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதத்தால் பாக் செய்யப்பட்ட உங்களுடைய பொருள்கள் வாடிக்கைக்காரர்களின் கண்ணைக்கவருகின்றன. மிகவும் உறுதி வாய்ந்த இக் காகிதம் உங்கள் பொருள்களை சுத்தமாகவும் புத்தம்புதியதாகவும் வைத்திருக்கும். ஆயினும் அது விலை குறைவானது: 20"X30" அளவுள்ள 1 தாளின் விலை 1½ அணுவுக்கும் குறைவு. உங்களுக்குத் தேவைப்படும் காகிதம் கிடைக்காவிட்டால் எங்களுக்கு நேராக எழுதுங்கள்.

வாசனைத் திரவியங்கள், சோப், மளிகை, பொம்மைகள், ஆபரணங்கள்.. இவைகளை பாக் செய்ய ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் உகந்தது.

இந்த அனுகூலங்களை கவனியுங்கள்.




ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் மிகவும் உறுதிவாய்ந்தது. ஒரு அங்குல அகலமுள்ள துண்டுக் காகிதம் கிழியாமல், அறுகாமல் 20 ராத்தலைத் தாங்குகிறது.



அது கண்ணாடியை விடத் தெளிவானது. அதன்மூலம் 95% வெளிச்சம் ஊடுருவிச் செல்லுகிறது. ஆகையால் அது உங்களுடைய பொருள்களை தெளிவாகக்காட்டுகிறது

**விலை:**

நிறமற்றது:- 500 தாள்கள் கொண்ட 1 ரீம் ரூ 44/-
ஆம்பர்:- 500 தாள்கள் கொண்ட 1 ரீம்- ரூ 51/8
உள்ளூர் விற்பனைவரி தவிர பாக்கிங் சார்ஜ்—ரூ 1/4 கூடுதலாக

## TRAYONS ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம்

### தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்

பாக்டரி; ரேயான்புரம் போஸ்ட், (வடக்கு திருவாங்கூர்)
ஸேல்ஸ் ஆபீஸ்; யுனைடெட் இந்தியா பில்டிங் மதராஸ்-1
இந்தியாவில் முதன் முதலாக ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் தயாரிக்கும் ஸ்தாபனம்.

மதராஸ் ஸ்டாக்கிஸ்டுகள்: ரேயான் ட்ரேடர்ஸ் லிமிடெட், 27 கோரல் மர்ச்சென்ட் தெரு, மதராஸ்-1 (பிராஞ்சுகள்: மதுரை, சேலம் & கோயம்புத்தூர்)
பெங்களூர் ஸ்டாகிஸ்டுகள்: Mr. H, சுப்பண்ணா, டாட்பேட், பெங்களூர் TR 4067



# உடைந்த பொம்மை

ஜடாதரன்

கொலுவுக்குப் படிகளெல்லாம்கூட இறக்கியாகிவிட்டது. நான்தான் மசமச வென்று பிரமை பிடித்தவனாக உட்கார்ந்திருந்தேன். மங்களம் பக்கத்து வீட்டுச் சிறுவன் ராஜுவின் உதவியால் படிகளை இறக்கி விட்டுப் பொம்மைகளை எடுத்துக் கொடுக்குமாறு என்னை நச்சரித்துக் கொண்டிருந்தாள்.

வெளியே சல சலத்துக் கொண்டிருந்த அரச மரத்தின் குளுமையான நிழலில் வெய்யில் தன் உக்கிரத்தை யெல்லாம் இழந்து கொண்டிருந்தது! வீட்டை யொட்டி அமைந்திருந்த அம்மன் கோவில் கர்ப்பக்கிருஹ விதானத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு ஒரு காக்கை கீழே துணியும் வைக்கோலும் சுற்றிப் பிரிக்கப்படாமலிருந்த பொம்மைகளை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தது.

மங்களம் எனது மனைவியாகி என் வீட்டில் வைக்கும் முதல் கொலு இதுதான்.

புது மனைவி ஆசையுடன் வைக்கும் கொலுவுக்குப் புதிய பொம்மைகள் இல்லை. எல்லாம் பழைய பொம்மைகள். நடுவில் ஒன்பது வருஷங்களாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கொலு மீண்டும் துவக்கப்படுவதிலும், மங்களத்தின் ஆர்வத்திலும் புதுமை மிளிர்ந்து ஒளிரும்போது பொம்மைகள் பழமையானவைகளாக இருந்தால்தான் என்ன!

ஒன்பது வருஷங்களாக இந்தப் பொம்மைகளெல்லாம் ஊரில் கிராமத்திலுள்ள என் நண்பன் சந்துருவினிடம் அடைபட்டுக் கிடந்தன. அவன் வீட்டில் கொலு வைக்கும் வழக்கம் இல்லை. படிப்பை முடித்துக் கொண்டு சென்னைதான் நமக்குச் சாசுவதம் என்று வயிற்றுப் பிழைப்பை ஆதாரமாகக் கொண்டு ஊரை விட்டுக் கிளம்பிய பிறகு எங்கள் வீட்டில் கொலு வைப்பது நின்று போயிற்று.

மங்களம் மீண்டும் நினைவுறுத்தினாள். பொம்மைகளைப் பிரித்துத் தூசியைத் தட்ட ஆரம்பித்தேன். புல்லாங்குழல் கிருஷ்ணன், பூக்கடை லேடி, ராம லக்ஷ்மணர்கள் செட், அம்பிகாபதி பொம்மை, நாயனக்காரர் கோஷ்டி முதலிய பொம்மை வரிசைகள் ஒன்பது வருஷங்களுக்குப் பிறகு, சாப விமோசனம் பெற்ற கந்தர்வர்கள் போல விடுதலை பெற்றுக் கொலுவுக்கு ஆயத்தமாயின. மங்களம் வரிசையிலிருந்து குறிப்பாக ஒரு பொம்மையைக் கவனமாக எடுத்து உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான். என் பார்வையும் அதன்மீது லயித்தது. அதே பொம்மைதான்!

அழகிய முகம்; பாவாடையும், மேலே தாவணியும் அணிந்து லாகவமாக இடுப்பில் ஒரு குடத்தைத் தாங்கி ஒய்யாரமாக நின்றுகொண்டிருக்கும் அந்தப் பொம்மைச் சிறுமியை நான் எப்படி மறக்க முடியும்!

"அட பாவமே, இந்தப் பொம்மைக்குக் கால் ஒடிஞ்சு போயிருக்கு" என்று திடீரென்று அவள் பரிதவித்ததும், என் நெஞ்சில் யாரோ ஊசியைச் செருகுவது போலிருந்தது. வாஸ்தவம்தான். அந்தப் பொம்மையின் வலது கால், முழங்காலுக்குக் கீழே உடைந்து ஒட்டிக் கொண்டிருந்தது.

"ஆகா, எவ்வளவு லட்சணமான பொம்மை! காலை ஒட்ட வைத்தாவது கொலுவின் நடுவில் இதை வைத்தாக வேண்டும்" என்று மங்களம் ஒடிந்த காலை ஒட்டுவதில் முனைந்தாள்.

ஒரே கணத்தில் அந்தப் பொம்மை அவளுடைய திருஷ்டியைக் கவர்ந்து விட்டதில் எனக்கு வியப்பு ஏற்படவில்லை. கால் ஒடிந்து விட்டதால் அதன் அழகு குன்றிவிடுமா!

அது ராதையின் பொம்மை. அதுவேதான் 'ராதைப் பெண்' என்று கூடச் சொல்லலாம். அம்மாவிடம் மல்லுக்கு நின்று அந்தப் பொம்மையை வாங்கினாள் ராதை. அப்போது அவளுக்குப் பத்து வயது இருக்கும். பொம்மையைப் போலவே அவளும் குறுகுறுப்பும், குடிமையும் உள்ள அழகிய சிறுமிதான்! ராதைக்கு அழகில்லை என்று சொன்னால் யார்தான் நம்புவார்கள்!

ஒரு பழைய காட்சி என் மனத்துள் விரிந்தது!

வாசலில், கொளுத்துகிற வெய்யிலில் வேர்வை வழியப் பொம்மைக்காரன் போய்க் கொண்டிருக்கிறான். ராதைக்குக் குதூகலம். தன் தாயாரைக் கூப்பிட்டு, "அம்மா, ஒரே ஒரு பொம்மை வாங்கிக் கொடேன்!" என்று நச்சரிக்கிறாள்.

ராதையின் தாயாருக்கு அந்தக் குடும்பத்தில் சுவாதீனமாக எந்தக் காரியத்தையும் செய்ய உரிமை கிடையாது. இன்னொரு ஸ்திரீயின் ஆக்ஞைகளுக்குக் கட்டுப் பட்டவள் அவள்.

"பர்வதம், குழந்தை கேட்கிறாளே, அந்தப் பொம்மைக்காரனைத்தான் கூப்பிடேன்!" என்று இறைஞ்சுகிறாள் ராதையின் அம்மா.

"வீடு நிறையப் பொம்மை இருக்கிறபோது, இந்தப் பெண்ணுக்கு இன்னொரு பொம்மை எதற்காம்!" என்று தோள் பட்டையில் முகவாயை இடித்துக் கொண்டு அங்கலாய்க்கிறாள் பர்வதத்தம்மாள்.

ராதை மீண்டும் சிணுங்கித் தொந்தரவு செய்கிறாள். சின்னப் பெண்ணின் சிங்காரக் கெஞ்சுதலுக்குத்தான் கடைசியில் வெற்றி கிடைக்கிறது.

பொம்மைக்காரனின் கூடையிலிருந்த ராதைப் பொம்மை சிறுமியின் கைக்கு மாறுகிறது. அந்த முகத்தில்தான் என்ன பிரகாசம்!

"ஜோடியில்லாமல், இந்த ஒற்றைப் பொம்மையை வாங்க என்ன அவசரமோ!" என்று பர்வதம் அலுத்துக் கொண்டு, ராதையைச் சுட்டெரித்து விடுவது போலப் பார்த்தபடி உள்ளே செல்கிறாள். அலுத்துக் கொண்டவள் என் தாயார். ராதை என் அத்தையின் பெண். அப்போது நான் விவரம் தெரியாத சின்னப் பையன்.

★

முடிவில்லாத காலத்தைக்கூட சமத்காரமாக மனம் பின்னோக்கி அளந்து கணக்குப் போட்டுச் சரிபார்த்து விட்டது! பன்னிரண்டு வருஷங்கள் ஓடி மறைந்து விட்ட பின்னரும் அந்த நாட்களின் நினைவு நெஞ்சில் பசுமையாகத்தான் இருக்கிறது.

நினைவு அவிழ்த்துவிடப்பட்ட மேய்ச்சல் கன்று போலத் துள்ளி ஓடியது! அதை இழுத்துப் பிடிக்க எனக்குச் சக்தியில்லை!

அப்பாவுடன் கூடப்பிறந்த ஒரே சகோதரியான என் அத்தை இளம் வயதிலேயே கைம்மை அடைந்து, கணவன் விட்டுச் சென்ற இரண்டாயிரம் ரூபாய்ப் பணத்தையும், ஒரே பெண்ணையும் அழைத்துக் கொண்டு எங்கள் வீட்டில் அடைக்கலம் புகுந்து விட்டாள். அத்தையின் மைத்துனர் மிகவும் நல்லவர். செகந்திராபாத்தில் தங்கள் வீட்டுடன் வந்து இருக்கும்படி அத்தையை மிகவும் கேட்டுக் கொண்டார். அத்தைக்கு மனம் இல்லை. அண்ணாவை விட்டு விட்டுக் கணவன் வீட்டு மனிதர்களோடு அவள் வசிக்க விரும்பவில்லை.

வீட்டில் அம்மாவுக்கும், அத்தைக்கும் எப்போதுமே ஒத்து வருவதில்லை. அத்தை வந்த புதிதில் அம்மா அவ்வளவாகச் சிணுங்க வில்லை. நாளாக நாளாக அத்தையைத் தன் குடும்பத்துக்கு அனுவசியமாக ஏற்பட்ட பாரம் என்று நினைக்கத் தொடங்கி விட்டாள்.

அத்தையின் பாடுதான் மிகவும் கஷ்டமாக இருந்தது. பெரியவர்களின் மனத்தில் நிழலாடும் கூட எண்ணங்களின் போக்கை அறிந்துகொள்ள முடியாத, குடிகையான ராதாவை வளர்த்து ஆளாக்குவதில் அவளுக்குச் சிரமமாக இருந்தது. ராதை செல்லப் பெண்; கொஞ்சம் பிடிவாதக் காரியும் கூட.

வீட்டில் அந்தக் காலத்தில் கொலு 'ஜே, ஜே' என்று கோலாகலமாய் இருக்கும். ஒரு நவராத்திரியின் போதுதான் ராதை அந்தப் பொம்மையைப் பிடிவாதமாக வாங்கித் தரும்படி கேட்டாள்.

"ஏண்டா, ராஜாமணி! இந்தப் பொம்மை ரொம்ப நன்றாக இல்லை! எத்தனை அழகு பார்! அடுத்த வருஷம் கொலு வருவதற்குள் இதற்கு ஜோடியாக ஒரு கிருஷ்ணன் பொம்மையும் வாங்கி விடவேணும்!" என்று குதியாய்க் குதித்தாள்.

அடுத்த வருஷம் ...!

நவராத்திரிக்கு மூன்று மாதங்கள் இருந்தன. ராதை ஒரு நாள் ஜுரம் என்று படுத்தாள். இரண்டு மாதத்துக்கு அவள் அந்த விநோதமான ஜுரத்துடன் படாத பாடு பட்டாள். பாரிச நோய் சம்பந்தப்பட்ட அந்தக் கடும் ஜுரத்துக்காகப் பல வைத்திய நிபுணர்கள் வந்து ராதையைக் கவனித்தனர். அப்பா தவியாய்த் தவித்தார். அத்தையின் மனம் துடித்துப் போயிற்று. பணத்தைப் பணம் என்று பாராமல் செலவழித்த பிறகு, ராதையை அந்தக் கடும் நோய்ப் போராட்டத்திலிருந்து மீட்க முடிந்தது.

ஆயினும் விதி செய்த கொடுமை மிகவும் பயங்கரமாக இருந்தது. அவளுடைய வலது கால் அந்த நோயின் மீட்சிக்குப் பிறகு ஊனமடைந்து விட்டது. அன்னம் போல நடைபோட்டுக்கொண்டிருந்த சிறுமியின் கால் இப்படியாகி விட்டதே என்று அத்தையும் அப்பாவும் மனமிடிந்து போயினர்.

ராதையிடம் எனக்கு இயல்பாகவே வாஞ்சையுண்டு. என்னுடைய பரிவையெல்லாம் அவளுக்குக் காட்டி, அம்மாவிடம்கூட உதை வாங்கிக் கொண்டிருக்கிறேன்.

அந்த வருஷம் நவராத்திரி சோபிதமாகவே இருக்கவில்லை. ஊனமடைந்த காலுடன் ராதை பரிதாபமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டு சோகச் சித்திரமாகத் திகழ்ந்தாள்.

அத்தையும் பிறகு ரொம்ப நாட்கள் எங்களுடன் இருக்கவில்லை. ராதைக்கு ஏற்பட்ட அந்தக் கதிக்குப் பிறகு அம்மாவின் சுடு சொற்கள் அவளை வெகுவாகப் பாதித்து விட்டன. அதனால் ஆதரவுடனும் அன்புடனும், தன்னையும் தன் பெண்ணையும் ரட்சிக்கத் தயாராய் இருந்த செகந்தராபாத் மைத்துனர் வீட்டுக்குச் சென்று விட்டாள்.

நான் வளர்ந்து பெரியவனாகித் தலையெடுக்க ஆரம்பித்தபோது, அத்தையின் உறவும், ராதையின் நட்பும் என் மனத்தில் அவ்வளவாக உறைக்கவில்லை. அப்பாவின் மனத்தில் அந்தரங்கமாகக் குடிகொண்டிருந்த ஆசையை, ராதையின் கணவனாக நான் திகழ வேண்டுமென்ற விருப்பத்தை நிறைவேற்றி வைக்கக்கூட நான் சிரத்தை காட்டவில்லை. நான் கடமையில் தவறிவிட்டேன். மீண்டும் அவர்களுடைய உறவைப் புதுப்பித்துப் பெருமையளிக்க நான் பின் வாங்கிவிட்டேன்.

என் நெஞ்சு வலித்தது.

ராதை...பாவம்...இந்த நொண்டிப் பொம்மையைப் போல, ஜோடிக் கிருஷ்ணனுக்காக எங்கு தவம் செய்கிறாளோ, யார் கண்டார்கள்!

★

கொலு வைத்து நான்கு தினங்கள் ஆகிவிட்டன. மங்களத்துக்குப் பெருமையும், குதூகலமும் பிடிபடவில்லை. பலவித வர்ணப் புடவைகளில், மாலை நேரங்களில், அவள் பட்டாம் பூச்சியாகப் பறந்து திரிந்தாள். என்னையும் அவள் சும்மா இருக்க விடுவதில்லை. அந்த ஒற்றைப் பொம்மைக்கு ஜோடியாக ஒரு கிருஷ்ணனை வாங்கிவர வேண்டுமென்று விடாப்பிடியாகத் தொந்தரவு செய்து கொண்டிருந்தாள்.

கொலு நடுவில், ஒட்டப்பட்டிருக்கும் உடைந்த காலுடன் பரிதாபமாக நின்று காட்சியளிக்கும் அந்தச் சிங்காரப் பொம்மையைப் பார்க்கும்போதெல்லாம் என் குற்றமுள்ள நெஞ்சத்தில் தாங்கொணாத வேதனை உண்டாயிற்று.

மங்களத்தின் கோரிக்கையை நிறைவேற்றி வைப்பதில் ஒரு பவித்திரமான கடமை இருப்பதாக எனக்குத் தோன்றியது. ராதையின் நிஜ வாழ்க்கையில் நிச்சயமாக மலர்ச்சி ஏற்பட்டிருக்க முடியாது. பல இடங்களில் எவ்வித ஊனமும் இல்லாமல், ஐசுவரியமும் அழகும் உள்ள பெண்களின் மண வாழ்க்கையே துன்பம் நிறைந்த முட்படுக்கையாக இருக்கையில், ராதையைப் போன்ற ஒருத்தியின் வாழ்க்கையை விகசிக்கச் செய்ய எந்த மகாபுருஷன் முன் வந்திருக்கக் கூடும்! பாத்தியதைப் பட்டவர்களே கடமையை மறந்து சுயநலமிகளாய் மாறி விடும்போது சம்பந்தம் இல்லாத பிற மனிதர்களிடம் நாம் பிரமாதமாக என்ன எதிர் பார்த்துவிட முடியும்!

மிகவும் நன்றாக
சுத்தம் செய்யும்
பலகாலம்
நீடித்து வரும்

Aryan
Regd

பற்களுக்கு இடை யே உள்ள எல்லா மூலைகளிலும், இடு க்குகளிலும் நுழை வதற்கு ஏற்றதாக ஆரியன் டூத் பிரஷ் உருவாக்கப் பட்டுள்ளது.



பிளாஸ்டிக் உறையிலும்
கிடைக்கிறது




எங்கும் விரும்பப்படுவது

ரஸகுல்லா




# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினுல் ஸ்னானம்செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாக வும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேக முழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.

## மைசூர்
## சந்தன
## சோப்




## கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்



**·SANFORIZED·**
SHRUNK REGD TO MK

**'சான்பொரைஸ்ட்' துணியில்**

**தைக்கப்படும் உடைகள்**

**உடம்புக்குப்**

**பொருந்தாதபடி**

**சுருங்கவே செய்யாது**

**-எத்தனை முறை**

**சலவை செய்தாலும்**

முக்கிய கவனிப்பு

உங்கள் தையல்காரரிடம் சொல்லுங்கள் :

**"இது 'சான்பொரைஸ்ட்' துணி**
**—உடை தைப்பதற்குமுன்**
**நனைக்க வேண்டாம்"**

கடைத்தெருவின் பொம்மைக் கடைகளில் ஜோடிக் கிருஷ்ணனுக்காக அலையும் பொழுது இந்தச் சிந்தனைகள் என் மனத்தை நிறைத்துவிடும்.

அன்றும் நான் வெறுங்கையுடன் வீடு திரும்பினேன். மங்களம் முகம் மலர என்னெதிரே பிரசன்னமானாள். "உங்களுக்குப் புதிதாக ஒரு ஆச்சரியமான காட்சியைக் காட்டப் போகிறேன் !" என்று அவள் கூறி கூட்டினாள்.

அவள் காட்ட விருக்கும் ஆச்சரியம் எனக்குத் தெரியாதா ! அந்த ராதைப் பொம்மைக்கு ஒரு ஜோடிக் கிருஷ்ணனை அவள் வாங்கி யிருக்கக் கூடும். அந்த நினைப்பில் கொலுவைப் பார்த்தேன். அந்த கொண்டிப் பொம்மை எப்பொழுதும் போல் அப்பொழுதும் தனியாக நின்று தவமியற்றிக் கொண்டிருந்தது. அதைப் பார்க்க என் நெஞ்சத்தில் இரக்கம் கசிந்தது.

"அந்த பொம்மையைப் பார்க்கிறது அப்புறம் இருக்கட்டும்......இப்போது இன்னொரு வேடிக்கையைப் பாருங்கள்" என்று மந்திரவாதி போல மங்களம் எச்சரித்தாள்.

நான் ஒன்றும் புரியாமல் திகைத்துக் கொண்டிருக்கையில் மங்களம், "ராதை, ராதை! இங்கே வாயேன். உங்க அத்தான் வந்தாச்சு" என்று உட்புறம் கூவினாள்.

வார்த்தைகளில் விவரிக்க இயலாத பிரமிப்பு உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. ஆம்; நிஜ ராதைதான் சமையல் அறைப் பக்கமிருந்து, விந்தி, விந்தி நடந்து கூடத்துப் பக்கம் வந்துகொண்டிருந்தாள்.

"ஹா! ராதையா! நிஜமாகவா! என்னால் நம்பவே முடியவில்லையே!" என்று என்னை மறந்து வாய்விட்டு அரற்றினேன் நான்.

மங்களம் பிறகு விளக்கமாகக் கூறினாள்.

"சாயங்காலம் நான்கு மணி இருக்கும். நம் வீட்டு வாசலிலே ஏதோ ஒரு டாக்ஸி வந்து நின்றது. உங்கள் பேரைச் சொல்லி ஒருவர் விசாரித்துக் கொண்டிருந்தார். நான் வெளியே வந்து பார்த்தேன். எனக்கு முன்பின் பரிச்சயமில்லாத ராதையும் அவள் புருஷனும்தான் தென்பட்டனர். நம் வீட்டைத் தேடி வழுவில் குசலம் விசாரிக்க வந்திருக்கும் தம்பதிகளை நானே வரவேற்று, பிற்பாடு முழு விவரங்களையும் தெரிந்து கொண்டேன். அவள் அகத்துக்காரர் கொஞ்ச நேரம் வெளியே சென்று வருவதாகச் சொல்லிப் போயிருக்கிறார்."

மங்களம் சொல்லி முடித்ததும், ராதை புன்னகை பூத்தாள். அந்த முகம் புது மலர்ச்சி பெற்றுப் பொலிவுடன் புன்னகை புரியும்போது தனி அழகுடன் விளங்கியது.

வெளியே சென்றிருந்த ராதையின் கணவன் சிறிது நேரத்துக்கெல்லாம் வந்தான்.

"கட்டுறுதியுள்ள உடல். கண்ணிலே நல்ல குணம்" என்ற மகா கவியின் வாக்குப் பிரத்யட்சமாக விளங்கும் உருவத்துடன் அவன் எனக்குக் காட்சியளித்தான். மிகவும் கலகலப்பான சுபாவம். நேரம் போவது தெரியாமல் பேச்சில் லயிக்கும்படி செய்துவிட்டான் அவன்.

அவனுக்கு வட இந்தியாவில் வேலை. சொந்த ஊர் திருநெல்வேலிப் பக்கம். கலியாணமாகி இப்போதுதான் முதன் முறையாகச் சொந்த ஊருக்குச் சென்று விட்டுத் திரும்புகையில், ராதையின் ஆசையால் என் உறவை ஞாபகமாகத் தெரிந்து கொண்டு முகமன் கூற வந்திருக்கிறான்.

பழைய கதைகளையெல்லாம் மணிக் கணக்கில் பேசிக் கொண்டிருந்தோம். என் அத்தை, ராதைக்குக் கலியாணமான பின் இறந்து விட்டாளாம். அந்த மட்டிலும் அவள் பாக்கியசாலிதான். பெண்ணைக் கண்ணின் இமையாகப் போற்றி வைத்துக் கொள்ளக் கூடியஇலட்சியக் கணவன் கிடைத்ததில் அவளுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கும்!

ராதையின் வாழ்க்கை வீணையைச் சுருதி சுத்தமாக மீட்டக்கூடிய ஒரு மகா புருஷன் நிஜமாகவே








வேலூர் திரு வே. மூ. கோபால பிள்ளை அவர்களின் மூத்த குமாரரும் கல்கி அச்சக பிராஸஸ் இலாகாவைச் சேர்ந்தவருமான ஸ்ரீ வே. கோ. வெங்கடாசலத்துக்கும் பெரிய காஞ்சீபுரம் ஷராப் வியாபாரி திரு. மூ. ரங்கசாமிப் பிள்ளை அவர்களின் குமாரி செல்வி காமகோடிக்கும் செப்டம்பர் 16-ல் பெரிய காஞ்சீபுரத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு உறவினர்களும் நண்பர்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க, மணமக்கள்!

கிடைத்து விட்டதைப் பார்க்கையில் பள்ளம் விழுந்திருந்த என் நெஞ்சில் அமைதி பிறந்தது!

ராதைக்கும் அவள் கணவனுக்கும் உபசாரம் செய்து மகிழ்விப்பதில் ஒரு மகத்தான இன்பம் இருப்பதாக நானும் மங்களமும் உணர்ந்தோம்.

இரண்டு நாட்கள்தான் அவர்களை விருந்தினராக உபசரிக்கும் பாக்கியம் எங்களுக்குக் கிட்டியது. அவர்கள் ஊருக்குக் கிளம்புகிற அன்று எனக்கு நிலை கொள்ளவில்லை. ராதையின் கணவனிடம் என் உள்ளத்தைத் திறந்து "ஸார்! உங்களுக்கு நான் எப்படி நன்றி செலுத்துவதென்றே தெரியவில்லை! ராதையின் வாழ்க்கையை மலரச் செய்த நீங்கள் தெய்வம்தான்!" என்று என் நன்றியைத் தெரியப்படுத்தினேன்.

"அப்படியெல்லாம் என்னைச் சொல்லாதீர்கள், ராஜாமணி! இதிலே என்ன பெரிய தெய்வத் தன்மை இருக்கிறது! ராதையை எனக்குப் பிடித்திருக்கிறது. அவள் என் மண வாழ்க்கையில் பங்கு கொள்வாளானால், அவளால் ஒரு உன்னத மனைவியின் ஸ்தானத்தை வகிக்க முடியும் என்று அவளுடைய கபடமில்லாத முகத்தைப் பார்த்ததும் எனக்கு ஒரு தீவிர நம்பிக்கை பிறந்தது. பிறகு அவள் மணாளனாக ஆவதற்கு நான் வேறு ஆட்சேபமே சொல்லவில்லை! கலியாணத்துக்குப் பிறகும் என் நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்பவளாக விளங்குகிறாள் உங்கள் அத்தை பெண்!" என்றான் அவன்.

ராதையின் கணவன் வெகு சுலபமாகச் சொல்லி விட்டான்! நினைப்பதைச் சொல்லிலும், சொல்வதைச் செயலிலும் நடத்திக் காட்டுவதில் உள்ள மகத்தான வேறுபாடுகளை உணராத வகையில், மற்ற பலவீனமான மனிதர்களின் கோஷ்டியினின்று தனித்து நிற்கும் மகா புருஷனாக அவன் விளங்கினான். நாடகங்களிலும், கதைகளிலும் வரும் ஊனமடைந்த கதா பாத்திரங்களின் மீது வெறும் உதட்டளவில் பரிதாபப் பட்டுக் கண்களைத் துடைத்துக் கொள்ளும் அளவுக்குப் பழக்கப் பட்டிருக்கும் என்னைப் போன்ற எண்ணற்ற மனிதர்களிடையே ராதையின் கணவன் எவ்வளவு உயர்ந்த புருஷனாக விளங்குகிறான் என்பதை என் மனச்சாட்சி எடுத்துரைத்தது!

★

ரயில் கிளம்ப மணி அடித்தாகிவிட்டது. சரியாகக் காலை பத்து மணிக்குக் கிளம்புகிற ரயில் அது. ராதையும், அவள் கணவனும் ஜன்னல் வழியே தலையை நீட்டிப் பேசிக் கொண்டிருந்தனர்.

"ராதை, பத்திரமாகப் போய் விட்டு வா, அம்மா! மறக்காமல் கடிதாசி போடு" மங்களத்தின் பிரிவுக் குரல் தழுதழுக்க ஒலித்தது.

"அத்தான், மன்னி, போய் விட்டு வருகிறோம்" என்று ராதையின் பாசக் குரல் எங்கள் உள்ளத்தைத் தொட்டது.

"ராஜாமணி, ரொம்ப நன்றி! உங்கள் உபசாரத்தை நாங்கள் மறக்கவே மாட்டோம்" என்று அந்த உத்தம புருஷன் உரிமைக் குரலுடன் விடை பெற்றுக் கொண்டான். என் கண்களில் நீர் வழிந்தது; பேச நா எழவில்லை. வெறுமே தலையை மாத்திரம் ஆட்டி விடை கொடுத்தேன்.

ரயில் 'கூ' என்று கூவியது! எங்கள் பார்வையிலிருந்து அந்த ஆதர்ச தம்பதிகள் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்தனர்.

★

வீடு திரும்பிப் பூட்டிய கதவைத் திறக்கையில் வாசலில் குரல் கேட்டது.

"சாமீ......பொம்மை கொண்டாந்திருக்கேன், பொம்மை! அம்மா அன்னிக்கே கேட்டாங்க" என்று பெருங் கூடையுடன் பொம்மைக்காரன் நின்று கொண்டிருந்தான்.

மங்களம் பரபரப்புடன் கூடையைத் துழாவுவதற்குள், கூடைக்காரனே பளபளவென்று புத்தம் புதிய வர்ணங்களில் மிளிரும் அழகான கிருஷ்ணன் பொம்மையை எடுத்துக் கொடுத்தான்.

"நம்ப ராதைப் பொம்மைக்குச் சரியான ஜோடி! எப்படி அமைஞ்சிருக்கு, பாருங்கோ!" என்று மங்களம் புளகமடைந்தாள். பேரம் பேசாமல் கேட்ட விலையைக் கொடுத்துப் பொம்மைக்காரனை அனுப்பினோம்.

ராதைக்குப் பக்கத்தில் புதுக் கிருஷ்ணன் பொம்மை மிக எடுப்பாய், கொலுவில் நின்றது. அந்தக் கிருஷ்ணனுக்குப் பக்கத்தில், ராதைப் பொம்மையை வைத்துப் பார்க்கும்போது அதற்கு கால் உடைந்து போயிருக்கும் நினைவே கொஞ்சம் கூட எழவில்லை. அந்தக் காட்சியில் நானும் மங்களமும் மெய்மறந்து நின்றோம்!

நவராத்திரி முடிந்ததும் பொம்மைகளைப் பத்திரமாக எடுத்து மீண்டும் பெட்டிக்குள் வைத்தேன். ராதையையும் கிருஷ்ணனையும் கூடத்தான். ஆனால் என் மனக் கொலுவில், ஒயிலான ராதையும், அவளுடைய ஜோடிக் கிருஷ்ணனும் கொலுவின் படியை விட்டு இறங்காமல் என்றென்றும் நிரந்தரமாகவே நின்று கொண்டிருந்தனர்!

# பிரிவும் பரிவும்







## அநுத்தமா

"இதோ பார், உன் மைத்துனன் கடிதம் போட்டிருக்கிறான்!" என்று ஆத்திரத்துடன் மொழிந்து கொண்டே, பிரித்த கடிதம் ஒன்றைத் தரையில் வீசினார் செல்லையப்பன்.

"காந்தி, என்ன போட்டிருக்கிறது, பார்" என்றாள் செக்கியம்மா, சோற்றுக் கஞ்சியை வடித்துக் கொண்டே.

அவர்களுடைய பெண் காந்தி உடனே ஓடி, கீழே எறியப்பட்டிருந்த கடிதத்தை எடுத்துக் கொண்டு அடுப்படிக்குச் சென்றாள்.

"மதிப்புக்குரிய அண்ணாச்சி அவர்களுக்கு, தம்பி சிறுவன் எல்லப்பன் வணக்கத்துடன் எழுதிக்கொண்டது. என் தாழ்மையான வணக்கங்களை என்னுடைய மதனியார் அவர்களுக்கும் தெரிவிக்கவும். என் அருமை மகள் காந்திக்கு என் அன்பும் ஆசியும்.

"கால வித்தியாசத்தால் நேர்ந்தவைகளை நாம் எண்ணிப் பார்த்துப் புண்படுவதில் பயனில்லை. கடவுள் என்னிடத்தில் எவ்வாறு கருணையின்றி இருந்து விட்டாரோ, அதற்குமேல் தங்களையும் சோதித்து விட்டார் என்று அறிகிறேன். நான் தோளில் போட்டு வளர்த்த குமாரன் குருநாதன் ராணுவப் படையில் சேர்ந்து விட்டதாகக் கேள்விப் பட்டேன். இதன் காரணமாகத் தாங்களும் மதனியாரும் மிகவும் வருந்துவதாகத் தெரிந்து புழுங்கினேன். தங்களை நெருங்கப் பல சந்தர்ப்பங்கள் எதிர்ப்பட்டும், துணிவின்மையும் அச்சமுமே என்னைப் பின்னுக்கு இழுத்திருக்க வேண்டும். வருஷங்கள் பல கடப்பினும் நம் அன்பு இன்னமும் அதே ஆழ்ந்த நிலையில் இருக்கிறது என்பது திண்ணம். உடல்கள் எப்படி இருப்பின் என்ன, உள்ளங்கள் என்றும் ஒட்டியே இருக்குமல்லவா! கடவுளே அவ்வாறு நிர்ணயித்து நம்மை ஒரே நாளில் பிறப்பித்தானே! அந்தப் பாசம் என்றும் மாயாது. இது திண்ணம் என்று என் உள்ளம் உறுதி கூறுகிறது. நம் செல்வி காந்திக்கு இன்னும் மாப்பிள்ளை தகையவில்லை என்று அறிந்தேன். அவளுடைய அடக்கமான குணமும், அறிவும், அழகும், ஆற்றலும் கிடைப்பதற்கு அரியவை. ஆயின், இம் மூட உலகம் அதை அறியாமல் பணத்தையே பெரிதாக எண்ணி வருவது அதற்கு ஒரு பிடிவாதமாக நிலைத்து விட்டது.

"என் மகன் பக்தவத்சலனுக்குப் பிறகு எனக்கு இரண்டு பையன்களே பிறந்தார்கள். மற்ற கஷ்டங்கள் பல வந்தும், மக்கள் மூவரும் ஆரோக்கியத்துடனும் அறிவுடனும் இருப்பது நான் செய்த பாக்கியம்மட்டுமல்ல, தங்களுடைய அன்பும் ஆசியுமே ஆகும். என்மனைவி மாத்திரம் நீராரோகயுடன் படுக்கையாகி விட்டாள். வறுமையோடு போராடிப் போராடி அவளுக்கு வலுவெல்லாம் போய் விட்டது. அவள் இனி எத்தனை நாட்கள் இருப்பாளோ தெரியாது. இந்நிலையில் அவள் இறப்பதற்கும் அஞ்சுகிறாள்! அதற்கும்தான் பணம் வேண்டுமே என்பது அவள் பயம். கடவுள் ஒருவன் இருக்கிறான்: அடித்தாலும் அந்தக் கைதானே அணைக்கவும் வர வேண்டும்! முதுகு கொண்ட மட்டும் நன்றாக அடித்தாகி விட்டது. இனிமேல் அணைக்க வருவான் என்று நான் தைரியம் கூறுகிறேன்.

"சந்தோஷமாகத் தங்களுக்குக் கடிதம் எழுத வேண்டும் என்று ஆரம்பித்துக் கடைசியில் அழுகையில் — என் அழுகையில் — வந்து இறங்கி விட்டேன். அழுகை கூடத்தான் சொல்கிறேன், ஆஸ்த்மாவைப் போல விடாத நோயாக, ஒரு கெட்ட பழக்கமாக, ஆகி விடுகிறது. நிற்க.

"தங்களுக்குப் பெருந் தொகையான பரிசு ஒன்று கிடைத்ததாகப் பத்திரிகையில் பார்த்தேன். தாங்கள் குடும்பத்தோடு இருக்கும் புகைப்படமொன்றையும் கண்டேன். எனக்குச் சந்தோஷம் சொல்லி முடியாது. என் பையன்கள்

மூவரும் அந்தப் படத்தை எடுத்துச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு திரிகிறார்கள்.

"இனியும் மேலும் மேலும் தங்களுக்கு ஐசுவரியமும் அதைத் தொடர்ந்து ஆனந்தமும் கிட்ட வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டிக் கொள்கிறேன். என்றும் தங்கள்,

எல்லப்பன்."

"பின் குறிப்பு :—இதை எழுத எனக்கு மிகவும் வருத்தமாகவும் வெட்கமாகவும் இருக்கிறது. ஆயினும் காலத்தை ஒட்டி எழுதுகிறேன். என் மனைவிக்கு இரவு முதல் நோய் அதிகமாகிவிட்டது. இனியும் இரண்டு நாட்கள்தான் கெடு வைத்திருக்கிறார்கள். முன்பு ஒரு சமயம் நான் தங்களுக்குக் கொடுத்த ஆயிரம் ரூபாயை இந்தச் சமயம் கொடுக்க முடியுமாயின் எனக்கு உதவியாக இருக்கும். மன்னிக்கக் கோருகிறேன். தற்சமயம் கைவசம் இல்லாவிட்டால் கவலைப்பட வேண்டாம்!"

காந்தி கடிதத்தைப் படித்துவிட்டு, இரண்டாக நான்காக எட்டாக மடித்துக் கொண்டே தன் தாயின் முகத்தை நோக்கினாள். "நம் சின்னய்யாவைப் பார்த்து எத்தனை காலமாகி விட்டது!" என்றாள் அவள்.

"அவர் கிடக்கிறார், ஒரு மனுஷனாட்டமா!" என்றுரைத்து ஒதுக்கிவிட்டாள் செக்கியம்மா.

"பயலைப் பார்த்தாயா, எனக்குப் பெருந் தொகை வந்திருக்கிறதாம், அதற்கு ஒரு பெரிய கடிதத்தை எழுதிப் போட்டுவிட்டு, கடைசியில் பணம் கேட்கிறான்! பிச்சைக்காரப் பயல்!" என்று இரைந்தார் செல்லையப்பன்.

"கடன் கொடுத்தார், கேட்கிறார்" என்று ஒரு தினுசாகப் பேசினாள் மனைவி.

"ஹூம்..." என்று ஏதோ உறுமினார் கணவர்.

"ஓர் அண்ணனுக்கு நாலு காசு வந்தது என்றால் அதற்கு இப்படி வயிற்றெரிச்சல் படுகிறவர்களைக் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. ஆனால், அப்படியும் சொல்லி விடுவதற்கில்லை. மனுஷர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று தெரியக் கோவிலுக்கா போக வேண்டும்!"

"'நான் கடன் கொடுத்த ஆயிரம் ரூபாய்' என்று கட்டிக் காட்டுகிறான். பார்த்தாயா! இத்தனை நாளாகத்தான் பணமில்லை என்று சொல்லுவாய், இப்பொழுது அப்படி யெல்லாம் தப்பிக்க முடியாது என்று அர்த்தமாகிறதே பேச்சிலே—பொடி வைத்த பேச்சு!"

"அத்தோடு விட்டாரா! 'கையிலே இல்லை என்றால் விட்டு விடு' என்று எழுதிப் போடுகிறாரே, என்ன பொருளென்று கேட்கிறேன்!"

"அட, கிடக்கிறான். போ. அற்பப் பயல்!" என்று கூறிவிட்டு, செல்லையப்பன் தன் அறைக்குச் சென்று ரேடியோவைத் திருப்பினார். திரும்ப மூடி விட்டார். அவர் மனம் மிக்க பாடுபட்டது. என்றைக்கோ கொடுத்த ஆயிரம் ரூபாயைத் திருப்பிக் கேட்க எத்தனை விதரணையாகக் கடிதம் எழுதி விட்டான் தம்பி என்று எண்ணி எண்ணிப் பொருமினார் அவர். அவரும் எல்லப்பனும் இரட்டையர். பிறந்தது முதல் கல்யாணம் முடிந்து ஓரிரண்டு குழந்தைகள் பிறக்கும் வரை ஒன்றாகவே உள்ளம் ஒத்து வாழ்ந்தவர்களிடையே, பல அற்ப விஷயங்களின் காரணமாக மனம் கொஞ்சம் கொஞ்சமாகக் கசந்து அவர்கள் பிரிந்து விட்டனர்.

இன்று, பத்து வருஷங்கள் கழித்து, எல்லப்பன் குறிப்பிட்டதுபோல, இருவரும் பல இன்னல்கள் பட்ட பிறகு, தனலக்ஷ்மியின் கடாட்சம் செல்லையப்பன் மீது விழுந்தது. இருபதாயிரம் ரூபாய் பரிசு கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் எல்லப்பன் தன் தமையன் செல்லையப்பனுக்குக் கடிதம் எழுத முற்பட்டார்.

'அதில்தான் எவ்வளவு வக்கணை! தன் நிலைமையைச் சொல்லாமல் சொல்லி, என்மீது ஆசையைச் சொரிந்து......எமகாதகப் பேர்வழியாக வல்லவா இருக்கிறான்!' என்று நினைத்தார் செல்லையப்பன்.

"ஸார்!" என்ற குரலைக் கேட்டுச் சிந்தனை கலைந்து அவர் முன் பக்கம் வந்தார்.

அடுத்த வீட்டு வாலிபன் கௌரி சங்கரன் அங்கு நின்று கொண்டிருந்தான். நேர் வகிட்டிலிருந்து அலை அலையாகப் பிரியும் கரும் கேசம் தான் முதலில் அவர் கண்ணில் பட்டது. பிறகு அவர் அவன் முகத்தைக் கவனித்தார். எடுப்பான நாசி, நீண்ட முகத்தில் குவிந்து தடித்த அதரங்கள், அடர்த்தியான புருவங்கள், நாசியின் மேல் பாகத்தில் கூடுவது போன்ற ஒரு சாயல், அகன்ற நெற்றியில் சந்தனக் கோடிட்டது போன்ற இரு மெல்லிய மடிப்புக்கள். செல்லையப்பன் ஒவ்வொரு அம்சமாகக் கவனித்தார்.

சங்கோசத்தோடு நிமிர்ந்த தலையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான் வாலிபன். பிறகு செல்லையப்பனைப் பார்த்துச் சிரித்து விட்டுப் பேச ஆரம்பித்தான். "சார், உங்கள் ரேடியோவில் கொஞ்சம் கேட்கலாமா! என் நண்பன் ஒருவன் பாடுகிறான்" என்று கேட்டான்.

செல்லையப்பன் கனத்த யோசனையில் இருந்தார். அவன் இன்ன விஷயம் கேட்டான் என்றுகூட அவர் அறிந்து கொள்ள வில்லை. மௌனமாக அவனையே பார்த்துக் கொண்டு நின்றார்.

"ஏன், சார், ரேடியோ சரியாக இல்லையா! அப்படியானால் பரவாயில்லை. நான் வேறு எங்கேயாவது போய் விட்டு வருகிறேன்" என்றுரைத்துக் கொண்டே அவன் சட்டென்று திரும்பியதும் தான் அவர் சுயப் பிரக்ஞை பெற்றார்.

"இல்லை. அப்பா, உள்ளே வா. தாராளமாகக் கேள். உன் நண்பன் பெயர் என்ன! எங்கே பாடுகிறான்!" என்று அவர் கேட்டார்.

கௌரி சங்கரனின் முகம் சட்டென்று தெளிந்தது. அவன் மறுபடியும் சிரித்துக் கொண்டே உள்ளே வந்தான். செல்லையப்பன் ரேடியோவை அவனிடம் காட்டி விட்டு அருகே இருந்த ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

கௌரிசங்கரன் ரேடியோவின் முன் நாற்காலியில் உட்கார்ந்தான். முதுகை வளைத்துக் குனிந்து கொண்டு அவன் முள்ளைத் திருப்புவதில் முனைந்தான். செல்லையப்பன் அவனையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

'பல் வரிசை கூட அவனைப் போலவே இருக்கிறது. முதுகு வளைவு, கிராப்புத் தலை, சிவந்த மேனி, கையின் திரண்ட அழகு...' என்று அவர் சிந்தனை ஓடிற்று.

ரேடியோவில் பாட்டு ஆரம்பித்தது. கௌரி சங்கரன் நிமிர்ந்தான். மறுபடி அவன் தலை குனிந்தது, கண் ரேடியோவைப் பார்த்தது, வலக் கை கட்டை விரல் தாளம் போட்டது.

பாட்டு முடிந்ததும் தான் செல்லையப்பனும் பேசினார். "நன்றாகப் பாடுகிறானே! யார் சிட்சை அவனுக்கு!" என்று அவர் வினவினார்.

"அவர்கள் வீட்டில் பரம்பரையாகச் சங்கீதம் இரத்தத்தில் ஓடுகிறது, ஸார். நல்ல பையன்" என்று கௌரிசங்கரன் கூறினான். அவனே பாடி முடித்துப் பாராட்டுப் பெற்றது போல் ஒரு வித சங்கோசமும் சந்தோஷமும் கலந்த பார்வையுடன் அவரிடம் பேசினான்.

# மிடுக்கான தோற்றம் பெறுங்கள் பணமும் மிச்சம்

கையிருப்புக்கு ஏற்ப கார்கால உடைகள் வாங்கத் திட்ட மிடும்போது இது உங்களுக்கு நினைவிருக்கட்டும்: ரேமாண்ட்ஸ் ஜேகே கம்பள உடைகள் இறக்குமதித் துணிகளுக்கு ஈடானவை, அதோடு மலிவானவை. ரேமாண்ட்ஸ் செக் ட்வீட்ஸில் ஜாக்கெட்டும், ரேமாண்ட்ஸ் கிரே பிளானல்ஸில் டிரவுஸரும்—உல்லாச நாட்களுக்கு ஏற்ற உடைகள்—அழகானவை, இதமானவை, சௌகரியமானவை.

எல்லா ரக நெசவுகளிலும் கிடைக்கும்

ரேமாண்ட்ஸ் **Jaykay**




ஜேகே கம்பள உடைகள்

**சிறந்த உழைப்புக்காக உறுதியான நெசவு**

தி ரேமாண்ட்ஸ் உல்லன் மில்ஸ் லிட்., பம்பாய்

# நீங்கள் மலேரியாவிலிருந்து நிவர்த்தி அடையலாம்

## நிச்சயமாக—ஆபத்தில்லாமல்—குறைந்த சிலவில்

## 'பாலுட்ரின்'

### மலேரியாவை வீழ்த்துகிறது

**மலேரியாவின் சின்னங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கமுண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். பிறகு உடம்பு முழுவதும் வியர்த்து வலி உண்டாகும். இந்த அறிகுறிகள் ஏற்பட்டால் உடனேயே டாக்டரைப் பாருங்கள்.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு டம்ளர் தண்ணீருடன் உட்கொள்ளுங்கள்.

*வயதுவந்தவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும்: ஒரு மாத்திரை. (0.3 Gm.)*
*6 லிருந்து 12 வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு: அரை மாத்திரை*
*6 வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு: கால் மாத்திரை*

தினந்தோறும் ஜுரம் குணம் அடையும் வரை கொடுக்கவும்.




ICP 288



"நீயே பாடினால்கூட இவ்வளவு சந்தோஷம் உனக்கு இருக்குமோ என்பது சந்தேகந்தான்;" என்றார் நெல்லையப்பன்.

அவன் மீண்டும் பல் தெரியச் சிரித்தான்.

"என் தம்பி உன் வயசில் உன்னைப் போலவே இருப்பான்" என்றார் நெல்லையப்பன் திடீரென்று. தன்னைவிட அரை மணி கழித்துப் பிறந்தவன் ஏதோ மிகச் சிறியவன் என்பது அவர் எண்ணம்.

கௌரி சங்கரன் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு அவருடைய பேச்சை மேலும் கேட்பதற்கு ஆயத்தமானான்.

"ஒன்றுமில்லை. உன்னை அப்பொழுது முதல் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். உன் முகம் பேச்சு, நடை, உடை, பாவனை எல்லாம் அவனைப் போலவே இருக்கிறது. அதைக் கண்டதும் நான் பிரமித்தேன். உன்னைப் போலவே இருப்பான். இரட்டையர்களாக இருந்து, எங்களுக்கு இருக்கும் முகச் சாயையின் ஒற்றுமை சகஜம். ஆனால் முன்பின் அறியாத ஓரிடத்தில் பல வருஷங்கள் கழித்து நாம் முன்பு இருந்தது போலவே இன்று ஒருவன் இருந்தால் அது பிரமிப்பாகத் தானே இருக்கும்! என்னையே பல வருஷங்களுக்கு முன் கண்ணாடியில் பார்ப்பது போல் இருந்தது. அதுகூட அவ்வளவு சரியில்லை. என்னுடைய தம்பிதான் உன்னைப் போலவே இருப்பான்" என்றார் நெல்லையப்பன்.

"இந்த முகச் சாயலைப் பற்றி நீங்கள் இதற்கு முன் கேள்விப்படவில்லையா? என்னைப் பலமுறை பலர் கேட்டிருக்கிறார்கள். தாங்கள் என் தந்தையா என்று!" என்றான் கௌரி சங்கரன்.

"அப்படியா! நான் கவனிக்காதது என் கவனக் குறைவுதான்" என்றார் நெல்லையப்பன்.

கௌரிசங்கரன் விடை பெற்றுக் கொண்டான். அவன் செல்வதற்குத் திரும்புகையில் நெல்லையப்பனின் கண்கள் அவன் முதுகுப் புறத்தில் லயித்தன. "கௌரிசங்கரா, இரேன். என்ன அவசரம் சற்று பேசிக் கொண்டிருந்து விட்டுப் போகலாமே!" என்றார் அவர்.

கௌரி சங்கரன் மறுபடியும் வெள்ளை வெளேரென்று அழகாகத் தெரியும் பல் வரிசையைக் காட்டிக் கொண்டு முறுவலித்துக் கொண்டே திரும்பினான். அவனைத் தன் அறைக்கு அழைத்துச் சென்று உட்கார வைத்துக் கொண்டார் நெல்லையப்பன்.

"நீ மேலே என்ன செய்யப் போகிறாய்!" என்று அவனைப் பரிவுடன் கேட்டார்.

"பி. எஸ். ஸி. முடித்து விட்டேன். எம்.எஸ்.ஸி, இங்கேயே படிக்கலாம் என்கிறார் அப்பா. எனக்கு மேல் நாடு போக வேண்டும் என்று ஆசை..." என்றான் அவன், அழகாக விளக்கி.

"அப்பொழுது மேல் நாடு போகப் போகிறாய், அப்படித்தானே!"

"அதுதான் சொன்னேனே! அப்பா, அம்மாவுக்குப் பிரியமில்லை. அம்மா என்னை விட்டுப் பிரிய மாட்டார்களாம்" என்று பதிலளித்தான் அவன் இலேசாகச் சிரித்தபடியே.

"அத்துடன், நிறையப் பணம் வேண்டுமே!" என்று கூறினார் அவர்.

"அதைப் பற்றிப் பரவாயில்லை, ஸார். எப்படியாவது சமாளித்து விடுவார்கள். என் தங்கை புருஷன் எனக்கு நண்பன். அவனுக்குக் கொடுத்த வரதட்சணையையே எனக்குக் கொடுத்து உதவுகிறேன் என்கிறான். அது இல்லை, பிரச்னை..."

"பெற்றோர் சம்மதம் தானா பெரிது இந்தக் காலத்தில்! சொல்லாமல் ஓடிப் போயாவது மேல் நாட்டிலிருந்து கடிதம் போடுவாய். அப்பொழுது என்னை நினைத்துக் கொள்" என்று வேடிக்கையாகப் பேசினார் நெல்லையப்பன்.

கௌரி சங்கரனின் முகத்தில் வேடிக்கை மாறிற்று. கம்பீரம் குடி கொண்டது. "அப்படியெல்லாம் நான் போக மாட்டேன், ஸார். என் அம்மா, அப்பா, தங்கை — இம்மூவர் கண் கலங்க நான் பார்க்க மாட்டேன். என்னுடைய ஆசை தானா பெரிது! பணமிருந்தால் படிப்பு நாளைக்குக் கிடைக்கும், ஸார். அவர்கள் அன்பு கிடைக்குமா! அதைப் பணம் கொடுத்துத்தான் வாங்க முடியுமா! நீங்களே சொல்லுங்கள். மேலும் என் தாயாருக்கு இதயக் கோளாறு. நான் எதற்குச் சொல்ல வந்தேன் என்றால், நம் பெண் பிள்ளைகள் எவ்வளவு படித்தாலும், பார்த்தாலும், தங்கள் பாசத்தை விட மாட்டேன் என்கிறார்களே என்பதை வியந்தேன், அவ்வளவுதான். தன் கணவன் எனக்குக் காசு கொடுத்தாலும் என் தங்கை அவனிடம் கோபம் கொண்டு விடுவாள்."

கௌரி சங்கரன் எழுந்தான். அவனுடைய மோகனமான சிரிப்பை இனி ஒரு முறையும் அவருக்கு அளித்துவிட்டு அவன் போய் விட்டான்.

நெல்லையப்பன் அப்படியே உட்கார்ந்திருந்தார். அவர் சிந்தனைகள் தம் இளம் பிராயத்தை அலசிக் கொண்டிருந்தன.

"இப்படி இருந்தவன்தானே! இதே சிரிப்பு, இதே கம்பீரம்! இதே ஆழ்ந்த அன்பு! என் எண்ணத்துக்கு எதிராக எண்ணக்கூட மாட்டானே! இப்பொழுது நான் காசுக்காகப் பஞ்சப் பயலைப் போல்..." அவருடைய நெஞ்சில் கைப்பு தட்டியது. "சட் கிடக்கிறான், அற்பம்!" என்று ஒரு முறை தன் மனதுக்குள் சொல்லி விட்டு, அவர் கைத் தடியை எடுத்துக் கொண்டு வெளியே உலாவப் போய் விட்டார்.

கால் சலிக்கும் மட்டும் விடுவிடென்று நடந்து விட்டு, வெகு நேரம் கழித்து அவர் வீடு திரும்பினார். அப்பொழுது நன்றாக இருட்டி














விட்டது. அடுத்த வீட்டில் எல்லா விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. அவர்கள் வீட்டு வாசலில் இரண்டு, மூன்று வண்டிகள் நின்றன. வீட்டைத் தாண்டிப் போகும்போது நெல்லையப்பன் தன் பார்வையை உட்புறம் செலுத்தினார். ஒன்றும் புலப்படவில்லை. கூட்டமாக இருந்தது. அழுகுரல்கள் கேட்டன. நெல்லையப்பன் பரபரப்புடன் தன் வீடு சென்றார்.

சாந்தி வாசற்படியிலேயே நின்று கொண்டிருந்தாள். "அப்பா, அவர்கள் வீட்டு மகன், இங்கே வந்து ரேடியோ கேட்டாரே—அவர் இறந்து போய் விட்டாராம்."

"என்ன!" என்று திடுக்கிட்டுக் கேட்டார் நெல்லையப்பன்.

"ஆமாம், அப்பா. அம்மாகூட அங்கேதான் போயிருக்கிறாள்."

"இப்பொழுது சற்று முன்னே என்னோடு பேசினான்......" அயர்ந்து உட்கார்ந்து விட்டார் நெல்லையப்பன். அவர் கால்கள் வெடவெடத்தன. பிறகு தானும் அடுத்த வீட்டுக்குச் சென்றார்.

சற்று முன் தன்னோடு பேசிய அந்தப் பையன்—சிரஞ்சீவி வரம் பெற்றவனைப் போல் இருந்தவன்—அவர் எதிரே கட்டையாகக் கிடந்தான். கண் கலங்கப் பார்க்க மாட்டேன் என்று அவன் யாரைப் பற்றிப் பேசினானோ, அவர்கள் கண்கள் வெடிக்கக் கதறிக் கொண்டிருந்தனர். அவன் ஆசைகள், அவன் ஆழ்ந்த அன்பு, உயிர் துடிக்கும் கண்கள் எல்லாம் மறைந்து கட்டை மட்டும் கிடந்தது. சற்று சமிந்து அதுவும் மண்ணுக்கோ, தீய்க்கோ இரையாகி விடும். அவனது கேசமும், சங்கோசப் பார்வையும், அழகான பல்வரிசையும் இனி யாரைப் பிரமிக்க வைக்கப் போகின்றன!

நெல்லையப்பன் வசமிழந்து குலுங்கிக் குலுங்கி அழுது விட்டார்.

எங்கோ மூலையில் கிடந்த பழைய புத்தகப் பெட்டியைத் தேடப் போனானும். அவனை ஏதோ தீண்டி விட்டது. சிலர் பாம்பு என்றனர், சிலர் ஜலமண்டலி என்றார்கள், சிலர் பூரான் என்றார்கள். ஆனால் புலன் கிடைக்கவில்லை. அதன் பலனைத்தான் அவர்கள் அநுபவித்தார்கள்.

நெல்லையப்பன் தன் வீடு வந்து வெகு நேரமாகியும் அப்படியே செயலற்று உட்கார்ந்து கிடந்தார். அவருக்கு உறக்கமே வரவில்லை. ஏதேதோ தெளிவற்ற எண்ணங்கள், பயங்கரச் சிந்தனைகள் அவர் மூளையைக் குழப்பின. இதயக் கோளாறினால் தவிக்கும் தாயைக் காப்பாற்றப் போகிறவனைக் பேசிய பச்சை மண் அந்த இதயத்தை வெடி வைத்து உடைத்து விட்டுச் சென்று விட்டது. அந்தத் தாயின் கதறல் இரவெல்லாம் கேட்டது.

நெல்லையப்பன் விடிவதற்குச் சற்று முன்தான் கண்ணயர்ந்தார். ஆயினும் உடனே விழித்துக் கொண்டார். குளித்து விட்டுத் திருநீறிட்டு வெகு நேரம் கடவுள் தியானத்தில் மூழ்கி யிருந்தார். பிறகு தன் அறைக்குச் சென்று கடிதமொன்று எழுத ஆரம்பித்தார்.

"சே, இப்பொழுது இருக்கும் உயிர் இன்னும் அரை வினாடியில் இல்லை என்று தெரிந்திருக்கையிலேயே, கடவுள் நம்மைக் குட்டிக் குட்டிக் காட்டுகையிலேயே, என்ன மமதையடா வந்து விடுகிறது இந்த மனித ஜன்மத்துக்கு! அற்பமே! அருமையான குழந்தை ஆர்வமாகப் பேசிவிட்டு, அடுத்த வினாடி அலங்கோலமாகக் கிடந்து விட்டான். இப்படி இருக்கும் போதே என்ன பகைமை,

"என்ன விஷமம், என்ன ஆசை, என்ன........" என்று ஓடியது அவர் மனம்.

தன் தம்பியைப் போலவே இருந்த அந்தப் பையனைக் கண் கொட்டாமல் பார்க்கத் தோன்றியதற்குக் காரணம் தன் அடிமனத்தில் தம்பியிடம் ஒட்டிக் கொண்டிருந்த பாசமே என்று அறிந்தார் நெல்லையப்பன்.

"இன்று கடிதம் எழுதினான் அவன். இன்னும் சற்று நேரத்தில் நீயே இருக்கிறாயோ, அவனே இருக்கிறானோ! அதற்குள்ளே பிச்சைக் காசு ஆயிரம்! அந்தச் சின்னஞ்சிறு பிள்ளை கூறினானே! 'பணம் கிடைக்கும். பாசத்தைப் பணம் கொடுத்து வாங்க முடியாது' என்று அவன் சொன்னானே! அப்பொழுதும் தோன்றவில்லை உன் களிமண் மூளைக்கு! ஓர் உயிர் போக வேண்டியிருந்தது..." என்று அவர் தன்னையே வைது கொண்டார்.

"என் அருமைத் தம்பி எல்லப்பனுக்கு, உன் கடிதம் கிடைக்கப் பெற்றேன். நீ கூறுவது போல் காலத்தின் கொடுமையினால் எவ்வளவோ கடந்தன என்றே நினைப்போம். இன்று நாம் அதை உணர்ந்த பிறகு எட்டி இருப்பதில் பொருளில்லை. நாம் என்றுமே எதையும் சமமாகப் பிரித்துக் கொள்வோம். அந்நாட்களில் தாயின் வயிற்றில் ஒருவருக்கொருவர் இடம் கொடுத்தோமல்லவா! இனி, பூமித் தாயின் மடியிலும் அவ்வாறே வாழ்வது முறைமை. உன் கடன் ஆயிரம் ரூபாய் தவிர, பத்தாயிரம் ரூபாய் என் பங்கு, அதையும் அனுப்பியுள்ளேன். பெற்றுக் கொள்ளவும். உனக்கு என்றும் நிறைவைக் கொடுக்கும்படி இறைவனை வேண்டிக் கொள்கிறேன். நெல்லையப்பன்."

என்று அவர் எழுதிப் போட்டார்.

"குடும்பத்தைப் பற்றியெல்லாம் கரிசனத்தோடு விசாரித்தால்கூட அழகாக இல்லை" என்று அவர் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

பிறகு பாங்கிக்குச் சென்று தக்க ஏற்பாடுகள் செய்து தம்பிக்குப் பணத்தை அனுப்பிய பிறகே அவருக்கு நிம்மதி ஏற்பட்டது. அதுவரை அவர் யாருடனும் பேசவே இல்லை.

"யாருக்குக் கடிதம் எழுதுகிறார், உன் அப்பா!" என்று கேட்டாள் செக்கியம்மா.

"சின்னப்பா பெயர் போட்டு விலாசம் இருந்தது" என்று பதிலளித்தாள் காந்தி.

செக்கியம்மா முதலில் இஷ்டப்படவில்லையெனினும், பிறகு மெல்ல மெல்ல அவருடைய அபிப்பிராயத்தை ஒத்துக் கொண்டாள்.

நெல்லையப்பன் மட்டும் அதன் பிறகு நிம்மதியின்றி அலைந்தார். ஒரு நாள் எல்லப்பனின் கைப்படக் கடிதம் வந்ததுமே அவர் அதை ஆவலுடன் பிரித்துப் படித்தார்.

"அண்ணாச்சி அவர்களுக்கு, எல்லப்பன் எல்லையற்ற மகிழ்ச்சியோடும், தாழ்ந்த வணக்கங்களுடனும் எழுதுவது:

"தாங்கள் அனுப்பிய பணம் கிடைக்கப் பெற்றேன். அது சமயம் என் மனைவி மிகவும் கேவலமான நிலையில் இருந்தபடியால் உடனே பதில் எழுத முடியவில்லை. பரிசாகக் கிடைத்த ரூபாயை முதன் முதல் சாவுக்கு உபயோகப் படுத்தப்பிரியப் படவில்லை மனம். அதனால் முன்னெச்சரிக்கையாக, என் மனைவியின் மீதிருந்த நகையையே எடுத்து அடகு வைத்துக் கையில் பணம் சேமித்து வைத்திருந்தேன். அத்துடன் கடைசிச் சிகிச்சை என்று கூறிய ஊசி மருந்து வாங்கிப் போட்டதில், ஆச்சரியகரமாக அவள் பிழைத்துக் கொண்டாள். அதற்குக் காரணம் தங்கள் அன்பும், மனமுவந்த ஆசியுமே என்று என் மனம் கூறுகிறது. மறுநாளே ஆயிரம் ரூபாயைத் திருப்பிக் கொடுத்து நகையை மீட்டு அவளுக்கே பூட்டி விட்டேன். எனக்கு இருப்பது மூன்று ஆண் பிள்ளைகள். மூத்தவன் இரண்டு மாதமாக வேலை பார்க்கிறான். இளையவனுக்கு இந்த வருஷத்தோடு கல்லூரிப் படிப்பு முடிந்து விடும். எனக்கு இனிக் கவலையில்லை. இனியும் எனக்கு வயசும் இருக்கிறது, வலுவும் இருக்கிறது.

"தங்களுக்கு இன்னமும் காந்தியின் விவாகச் செலவு வேறு காத்துக் கொண்டிருக்கிறது. நிற்க ஒரு நிழல் வேண்டாமா! எனக்கு அனுப்பிய பத்தாயிரத்துக்குத் தங்கள் பேரில் ஒரு வீடு வாங்கி விட்டேன். பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு அனுப்பவும். எனக்குத் தங்கள் ஆசிதான் முக்கியம்—அது கிடைத்து விட்டது. பத்திரம் பதிவு செய்யத் தாங்கள் நேரில் வந்தால் நலமாக இருக்கும். இக்கண்கள் தங்களைக் காணும் பேற்றைத் தனலக்ஷ்மி அளித்ததாக இருக்கட்டும்.

எல்லப்பன்."

கடிதத்தை வாங்கித் தன் அம்மாவுக்குப் படித்துக் காட்டினாள் காந்திமதி. செக்கியம்மா ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"சின்னையாவுக்குத்தான் எவ்வளவு பெரிய மனசு!" என்றாள் காந்தி.

நெல்லையப்பன் அவளுக்குப் பதில் சொல்லாமல் நெடு மூச்செறிந்தார். "வயது ஐம்பதாகி விட்டாலே எல்லாம் தெரிந்து விட்டது என்று அர்த்தமில்லை. வாழ்க்கையில் இப்பொழுதுதான் நான் பாடம் கற்றுக் கொள்கிறேன்.

"சலுகையோடு ஜேபியில் கை போட்டுப் பொருளை எடுத்துக் கொள்வதும், ஒரே குறிப்பிட்ட வஸ்துவுக்கு உரிமையோடு போட்டி போடுவதும், கெஞ்சிக் கேட்பதும், மிரட்டி வாங்குவதும்–எல்லாம் அந்தந்த வயசில்தான். மனிதன் வயது ஏற ஏற அவனுக்குப் பற்றும் குறைகிறது, கம்பீரமும் வந்து விடுகிறது. மரியாதை தோன்றி விடுகிறது. ஹூம்...ஐம்பது வயதாகி விட்ட தம்பி பழையபடி கொடுத்ததையெல்லாம் வாங்கிக்கொண்டு விடுவான் என்று எப்படி நினைக்கலாம் நான்! அளவோடு தான் பெறுவான், பெற்றதைத் திருப்ப முயல்வான். அது இந்த முதிர்ச்சியின் சின்னம். சங்கோசமின்றிக் கொடுத்து வாங்கிக் கொள்ளக்கூடியது அன்பு, ஆதரவு, தோழமை. நான் ஒரு அடிமுட்டாள்!" என்று நெல்லையப்பன் கூறுவதைக் கேட்டாள் காந்தி. அவளுக்குத் தந்தையின் மனம் தெள்ளெனப் புரிந்தது.

"அப்பா, நான் எழுதட்டுமா சின்னையாவுக்கு!" என்று ஆவலோடு கேட்டாள் இவள்.

"செய்து, பாரம்மா. அவன் அதற்கிணங்கி என்னுடன் வந்து இருப்பானாகில் என் பிறவிப் பயனை அடைந்ததாக எண்ணுவேன். கடவுள் என்ன நினைக்கிறாரோ!" நெல்லையப்பன் குரல் தழ தழத்தது.

"வருவார், அப்பா. நான் அழைத்தால் வருவார்" என்றாள் காந்தி, இளமையின் உறுதியுடன்.

அப்பொழுது விளக்கு சற்றுப் பிரகாசமாக எரிந்தது. நெல்லையப்பன் அதைப் பார்த்துக் கை கூப்பி வணங்கினார்.

# கன்னியா குமரியிலிருந்து காஷ்மீர்!

பம்பாய் நகருக்கு அருகிலுள்ள டிராம்பேயில் ஸ்தாபிக்கப்படும் பர்மா-ஷெல்லாரின் ரிபைனரி இந்தியாவிலேயே மிகப் பெரியது. இங்கு வருஷா வருஷம் 10 லக்ஷம் பஸ்கள் கன்னியா குமரியிலிருந்து காஷ்மீருக்கு கடந்து செல்வதற்குப் போதுமான பெட்ரோல் தயாரிக்கப்படும்.

பர்மா-ஷெல் ... பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது.






அட்வகேட் சத்தியமூர்த்தியின் கையிலிருந்த பிராமசரி நோட்டுக் கட்டுகள் கைமாறின.

"ஒன்றும் பிரயோசனமில்லை, பழனியப்பன். வேலனிடம் பணமும் இல்லை; காசும் இல்லை. பாவம், ஏழை. அவனுடைய ஆஸ்தி பாஸ்தியெல்லாம் ஓர் ஓலைக் குடிசைதான். அவன் உழவு மாடுகள் வாங்குவதற்காக நீங்கள் எப்போதோ இருநூறு ரூபாய் கொடுத்தீர்கள். அவனால் அந்தத் தொகையைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை என்பதற்காக, அவன் குடிசையை வசப்படுத்திக் கொள்வதால் என்ன லாபம் ஏற்பட்டு விடப் போகிறது, உங்களுக்கு?..."

"அப்படியில்லீங்க. அவன் கிட்டே இப்போ கொஞ்சம் பணம் நடமாடுவதாகக் கேள்வி..."

"இருக்கலாம். ஆனால், சற்று முன்பு நீங்கள் தானே சொன்னீர்கள், அவன் மனைவி வயிறும் பிள்ளையுமாக நிற்கிறாள் என்று. பிரசவம் என்று வந்து விட்டால், எவ்வளவு தான் ஏழையாக இருந்தாலும் கையில் பணமில்லாமல் நடக்கக் கூடிய காரியமா?..."

"அதனாலே, இப்போ வழக்குத் தொடர்ந்தால் நமக்கு ஜெயம் கிடைக்காது என்கிறீங்க..."

"நான் அப்படிச் சொல்லவில்லையே! சட்டம் உங்களுக்குத் தான் நுணை புரியும். கஷ்டங்களோடு கஷ்டமாக அவனை நெருக்கினால் கொஞ்சமாவது பணம் கிடைக்கும் என்கிறீர்கள். அப்படிச் செய்வது அவ்வளவு நேர்மையானது அல்ல என்கிறேன் நான். மேலும், அவனுடைய பணம் உடனடியாக வந்து ஆகவேண்டிய காரியம் எதுவுமில்லையே, உங்களுக்கு?..."

"வக்கீலய்யா, அனாவசியமா பேசிக் கிட்டே இருந்தால் முடிவு தான் என்ன! உங்களால் இந்த வழக்கை நடத்த முடியுமா, முடியாதா?"

"மன்னிக்க வேண்டும். நான் இவ்வளவு தூரம் எடுத்துக் காட்டிய பின்பும் இந்த வழக்கைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென்றால், நீங்கள் வேறு வக்கீலைப் பார்த்துக் கொள்ளுங்கள்."

சத்தியமூர்த்திக்குக் கடைசி முறையாக ஒரு கும்பிடு போட்டு விட்டு, வேலாதேவி பழனியப்பன் ஆத்திரத்துடன் வெளியேறினார்.

சத்தியமூர்த்திக்குக் கோபம் தாங்கவில்லை. பழனியப்பனின் நீண்ட நாளைய வக்கீல் அவர். அவருடைய எல்லா வழக்குகளிலும் வெற்றி வாங்கிக் கொடுத்தது அட்வகேட் சத்தியமூர்த்தி தான். அவர்களிடையே நிலவிய அன்னியோன்யம் பரஸ்பர நன்மையை அடிப்படையாகக் கொண்டது தான். என்றாலும், வக்கீல் – கட்சிக்காரர் என்ற பேதம் நீங்கிச் சற்று நட்பு முறையில் கூட பழக ஆரம்பித்திருந்தார்கள். தன் சொல்லைத் தட்டாத பழனியப்பன் தன்னிடம் கோபித்துக் கொண்டு சென்று விட்டாரே என்ற வருத்தமும், தன் உபதேசத்தை அவர் ஏற்கவில்லையே என்ற கோபமும் சத்தியமூர்த்தியைத் தகித்தன.

சே, பழனியப்பன் ஏன் இன்றைய தினம் இவ்வளவு குரூரமாக நடந்து கொண்டு விட்டார்! பல தடவைகளில், சத்தியமூர்த்தியின் வார்த்தைகளில் நம்பிக்கை வைத்து, அவரிடம் கடன்பட்டவர்களிடம் இரக்கம் காட்டியிருக்கிறாரே!

சத்தியமூர்த்திக்கு வேலை ஓட வில்லை. மேஜையின் மேல், அன்றைய தினம் நீதிமன்றத்தில் வழக்காடிய கட்டுக்களும், மறுநாள் வழக்காடப் பட வேண்டிய கட்டுக்களும் குவிந்திருந்தன.

அவர் மனம் பொங்கி எழுந்ததே தவிர வழக்குக் கட்டுகளில் பதிய வில்லை. அந்த அசாதாரணமான நிலையை எப்படிச் சமாளிப்பது என்று அவர் தடுமாறிக் கொண்டிருக்கும் போது, கூடத்திலிருந்து 'அம்மோவ்...' என்ற அலறல் கேட்டது.

சத்தியமூர்த்தி ஒருகணம் நிதானித்தார். எந்தக் குழந்தை இப்படி உயிர் போவதைப் போல தொண்டையைக் கிழித்துக் கொண்டு கத்துகிறது! அவருடைய மூன்று வயதுப் பெண் மீனுவா! இருக்காது; மீனு அழுதால் கூட அவள் குரலிலுள்ள தேனின் இனிமை மறையாதே!

"பங்கஜம், பங்கஜம்..."

மனைவியிடமிருந்து மறுமொழி ஒன்றும் வரவில்லை. அடுக்களையில் வேலை செய்து கொண்டிருக்கும் அவள் செவிடாகவா போய் விட்டாள்!

சத்தியமூர்த்தியின் மனத்தைக் குடைந்தெடுத்தது. நாற்காலியிலிருந்து எழுந்து அலுவல் அறையிலிருந்து பரபரவென்று வெளியே வந்தார்.

''கஷ்டம், கஷ்டம். இந்த வீட்டில் ஒரு நிமிஷங் கூட நிம்மதியாக வேலை செய்ய முடிவதில்லை...'' என்று கோபத்தை வார்த்தைக் கனல்களாக்கி உதிர்த்தபடியே கூடத்துக்கு வந்தார். அங்கே அவர் கண்ட காட்சி...!

கூடத்தின் மூலையில் அழகான முக்காலியின் மீது ஆரோகணித்திருந்த புத்தர் பிரான் தரையில் சின்னாபின்னமாகக் கிடந்தார்! சிலை கீழே விழும் போது தன் காலில் விழுந்து விட்டதாலோ என்னவோ, அவர் வீட்டு வேலைக்காரி செங்கமலத்தின் இரண்டு வயதுக் குழந்தை வலி தாங்காமல் 'லபோ, லபோ' என்று அலறிக் கொண்டிருந்தான்.

'புத்தர் சிலை உடைந்து விட்டது' என்ற உணர்வு மறுபடியும் வந்ததும் சத்தியமூர்த்தி ஸ்தம்பித்து விட்டார். எவ்வளவு ஆர்வத்துடன் அந்தச் சிலையை அவர் வாங்கினார்! எவனோ ஒருவன். ஒரு நாள், சாலையிலே அதை விற்றுக் கொண்டு போனான். சத்தியமூர்த்தி சிலையைப் பார்த்தார். 'வாங்கினால் என்ன!' என்ற எண்ணம் தோன்றியது. அடுத்த சில நிமிஷத்துக்குள் ஐந்து ரூபாய் நோட்டும் புத்தர் சிலையும் இடம் மாறின!

சிலையை வாங்கியதுடன் சத்தியமூர்த்தியின் ஆர்வம் சூன்யமாகி விடவில்லை. சிலை எல்லோர் கண்களிலும் படும்படியாக, வீட்டின் முக்கியமான பகுதியில் அதை அலங்காரமாக வைக்க விரும்பினார். சத்தியமூர்த்தி விரும்பி அது நடக்காமல் போய்விட்டது என்பது அவருடைய சரித்திரத்திலேயே இல்லை.

சிலை வாங்கிய அன்றே, மரச் சாமான் விற்கும் இடத்துக்கு டெலிபோன் செய்து, மெல்லிய கால்களையுடைய உயரமான முக்காலிகள் இருக்கின்றனவா என்று விசாரித்தார். ஆனால் அன்றையதினம் அவருக்கு ஓய்வு இல்லை. மறுதினம் பதினைந்து ரூபாய் கொடுத்து, உயர் ரக மரத்தில் செய்யப்பட்ட ஒரு நாகரிகமான முக்காலியை வாங்கி வந்து, அதன்மேல் சிறிய விரிப்பையும் போட்டு, புத்தர் சிலையை ஸ்தாபித்த பின்பு தான் அவருக்கு நிம்மதி பிறந்தது!

ஐந்தே ரூபாய் பெறுமானமுள்ள அந்தச் சிலையைக் கண்டு, அவர் வீட்டுக்கு வந்தவர்கள் எல்லோருமே மயங்கி யிருக்கிறார்கள். ''என்ன இருந்தாலும் சத்தியமூர்த்தியின் சமர்த்துக்கு ஈடு ஏது! ஒரு பொருளை வாங்கினான் என்றால் அதை ஒழுங்காகப் பாதுகாக்கத் தெரிகிறது, அவனுக்கு'' என்று, சென்ற மாதத்தில் அவர் வீட்டுக்கு வந்த அவருடைய மாமா கூறியபோது, சத்தியமூர்த்திக்கு உண்டான ஆனந்தத்துக்கு அளவே யில்லை!

அந்த புத்தரின் சிலையை, வேலைக்காரியின் குழந்தை தள்ளி உடைத்து விட்டான்...

விடுவிடென்று குழந்தையின் அருகே சென்றார், சத்தியமூர்த்தி. எஜமானர் அருகே வந்து நிற்கிறார் என்பதைக் கூட லட்சியம் செய்யாது குழந்தை அழுது கொண்டிருந்தான்.

''துக்கிரிப் பயலே, பொம்மையைக் கீழே தள்ளி உடைத்ததுமல்லாமல் அழுகை வேறு!... தரித்திரம், சீ...'' என்று மங்கல வார்த்தைகளை உதிர்த்தவாறே குழந்தையின் முதுகில் பளார், பளாரென்று நாலு அறைகள் வைத்தார் அவர்.

கொல்லைப்புறத்தில் பாத்திரங்களைத் துலக்கிக் கொண்டிருந்த செங்கமலம், பிள்ளையின் குரலைக் கேட்டு ஓடோடியும் வந்தாள். எஜமானரின் கையில், தன் குழந்தை புழுப்போல துடிப்பதைக் கண்டு அவள் கண்களில் நீர் சுரந்தது.

''அடிக்காதீங்க, சாமி...'' என்று கெஞ்சினாள். சத்தியமூர்த்தி தலை நிமிர்ந்தார்.

''அடிக்காதேயா! உன் பிள்ளை செய்திருக்கிற காரியத்தைப் பார்த்தியா! சனியன். பீடை பொம்மையைக் கீழே தள்ளி உடைத்தது மல்லாமல், உள்ளே உட்கார்ந்து வேலைசெய்ய முடியாதபடி அலறுகிறான். இது என்ன வீடா, மாட்டுச் சந்தையா!...உம்... அவனை இங்கே அழைத்துக் கொண்டு வராதே என்று எவ்வளவு முறை உனக்குக் கூறியிருக்கிறேன்!...''

எஜமானரின் உதட்டில் வார்த்தைகள் துடிப்பதைக் கண்டு பயந்து விட்டாள், செங்கமலம். அந்த வீட்டில், அந்த புத்தர் சிலைக்குக் கொடுக்கப்பட்டுள்ள மதிப்பு அவளுக்குத் தெரியும். அது உடைந்து போய் விட்டது என்றதும் அவளுக்குக் கூட சற்று வருத்தம் ஏற்படத்தான் செய்தது.

சத்தியமூர்த்தி கோபம் அடங்கி, குழந்தையின் மேலிருந்த பிடியைத் தளர்த்தியதும் செங்கமலம் அவனருகே வந்தாள். 'அம்மோவ்...' என்றபடியே கைகளை நீட்டினான் அவன்.

''அம்மாவாம், அம்மா! நீ கெட்ட கேட்டுக்கு அதுதான் குறைச்சல்!...மூதேவிப் பயலே...''

அர்ச்சனையைத் தொடர்ந்து அடிகள் விழுந்தன. அழுகைக் குரல் சகிக்காது போகவே அறைக்குச் செல்லத் திரும்பினார் சத்தியமூர்த்தி. அப்போது தான் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்த பங்கஜமும் மீனுவும் அவர் கண்களில் பட்டனர்.

''பங்கஜம், எங்கே போயிருந்தே? வீட்டில் ஒரு கணம் கூடத் தங்காமல் எப்போது பார்த்தாலும் சிநேகிதிகள் வீடுதான் கதியா!''

கணவர் கோபமாயிருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டாள் பங்கஜம்.

''நான் எங்கும் அரட்டையடிக்கப் போகவில்லை. அடுத்த வீட்டு அம்மாள் வந்து கூப்பிட்டாள். உங்களிடம் சொல்லி விட்டுப் போகலாமென்றால் அந்தக் கட்சிக்காரருடன் நீங்கள் பேசிக் கொண்டிருந்தீர்கள்...''

''சரி, சரி. ஏதாவது சாக்குச் சொல்லு......''

மீனுவை அணைத்துக் கொண்டே செங்கமலத்தை நோக்கினாள் பங்கஜம். அவள் இடுப்பில் சிறுவன் கதறிக் கொண்டிருந்தான்.

''ஏன் செங்கமலம், அவனைப் போட்டு இப்படி அடிச்சே! பச்சைக் குழந்தை உடம்புக்கு ஆகுமா? உம்...அவனைக் கதற விடறது உனக்குச் சந்தோஷமாகவா இருக்கு!'' பங்கஜத்தின் பேச்சில் எஜமானியின் அதிகாரமும் தாய்மையின் பரிவும் பெண்மையின் பண்பும் மிளிர்ந்தன.

''பின்னே என்னம்மா! பொம்மையைத் தள்ளி உடைச்சிட்டான்.''

''அதற்காக இப்படியா அடிப்பது! அவனும் குழந்தைதானே! பொம்மையை எடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டிருப்பான். பொம்மை கைக்கு எட்டாததால், முக்காலியின் காலைப் பிடித்து ஆட்டியிருக்கிறான். முக்காலி லேசானது தானே! பொம்மை கீழே விழுந்து விட்டிருக்கும்.''

எஜமானியின் சமாதானத்தைக் காதில் வாங்கியபடியே குழந்தையுடன் கொல்லைப்புறம் சென்று விட்டாள் செங்கமலம்.

*

அலுவல் அறையில் வந்தமர்ந்தார் சத்தியமூர்த்தி. அவர் மனத்தில் கோபம் அடங்கி, வலி பிறக்க ஆரம்பித்திருந்தது. தன் அறியாமையால் ஒரு பொம்மையைக் கீழே தள்ளி உடைத்து விட்டதற்காக ஒரு குழந்தையைத் தாறுமாறாக

# லிப்டன்

## டீ கேர்ல் டஸ்ட் டீ




சிறந்த
ஸ்டிராங்
டீ
தருகிறது

LTGX 27 TM



அடிப்பது நீதியா என்று யாரோ அவருள்ளே அவரைக்கேட்பதுபோலிருந்தது.

சத்தியமூர்த்தி ஒரு வழக்கறிஞர். நீதி மன்றத்தில் நீதிக்காகப் போராடும் வக்கீல். நியாயமான வழக்குகளையன்றி வேறு எந்தத் தில்லு முல்லு வழக்குகளையும் ஏற்றுக் கொள்ளாதவர் என்று பெயர் பெற்றவர். அதனால் தானே, பழனியப்பனுக்குக்கூட சில நிமிஷங்களுக்கு முன் உபதேசம் செய்து அனுப்பி வைத்தார்!

நீதிக்காக இவ்வளவு தூரம் பரிந்து பேசும் அவர் மனிதப் பண்பாட்டிலிருந்து தவறி விட்டார்! கேவலம், ஐந்து ரூபாய் மதிப்புள்ள ஒரு சிலையை உடைத்து விட்டதற்காக வேலைக்காரியின் குழந்தையை நையப் புடைத்து விட்டார்.

இது தான் பண்புள்ள மனிதர்களின் செயலா! சத்தியமூர்த்தியின் பெண்ணான மீனா, அந்தப் புத்தர் சிலையை உடைத்திருந்தால் அவர் அவளை இப்படி அடித்திருப்பாரா!

'சந்தேகம் தான்' என்று அவருடைய மனமே பதில் கொடுத்துக் கொண்டது.

அது கிடக்கட்டும். சிலை கீழே விழும்போது, செங்கமலத்தின் குழந்தையின் மேல் பட்டிருக்குமே! அதனால் அவனுக்குக் காயம் ஏதேனும் ஏற்பட்டதா என்பதை அவர் கவனித்தாரா!

"ஏன், விளக்கைப் போடவில்லையா!" என்று கேட்டவாறே அறையுள் நுழைந்து ஸ்விச்சைப் போட்டாள், பங்கஜம். மின் விளக்கின் ஒளியில் அறையிலிருந்த இருள் மறைந்தது. ஆனால், சத்தியமூர்த்தியின் மனத்திலிருந்த சிந்தனை இருள்......

"ஏன் இப்படி உட்கார்ந்து விட்டீர்கள்!"

"...நானா!...ஆமாம், ஆமாம்...வந்து, பாரு ஒரு வழக்கு!...அதைப் பற்றி யோசித்துக் கொண்டேயிருந்தேன். நேரம் போனதே தெரியவில்லை."

கணவரின் பேச்சிலிருந்த குளறுபடிகளைப் பங்கஜம் கவனிக்கத் தவறவில்லை. அவர் மனத்தில் என்ன சிந்தனைகளோ!

"சாயங்காலம் உங்களிடம் சொல்லாமல் அடுத்த வீட்டுக்குப் போய் விட்டேன் என்று கோபமா!"

"இல்லையே. வந்து...அந்தப் பையன் புத்தர் பொம்மையைத் தள்ளிவிட்டு 'ஓ'வென்று அழுதான். எனக்குத் தலைவேதனையாக இருந்தது. உன்னைக் கூப்பிட்டேன், நீ இல்லை."

"பாவம், பொம்மையை உடைத்து விட்டதற்காகக் குழந்தையை இப்படியா அடிப்பாள், ஒரு தாய்! அடிப்பதையும் அடித்துவிட்டுப் பின்னால் அவள் கண்ணீர் விடுகிறாள்!"

"அப்படியா!"

"ஆமாம். வீட்டுக்குத் திரும்பிப் போகும் போது பையனைப் பார்த்தேன். முதுகு முழுவதும் விரல்மயம் தான்! உடம்பே வெந்து விட்டது, அவனுக்கு. விசித்துக் கொண்டே போனான்..."

அன்று இரவு அட்வகேட் சத்தியமூர்த்திக்குச் சரியான உணவும் உறக்கமும் இல்லை!

*

மறுநாள் காலை எட்டு மணி. வழக்கமாக அந்த நேரத்துக்குத் தான் செங்கமலம் வருவாள். ஆனால், அன்று வரவில்லை. செங்கமலத்தையும் அவள் குழந்தையையும் காணவேண்டும் என்று ஏதோ எண்ணத்தால் உந்தப்பட்டிருந்த சத்தியமூர்த்திக்கு இது பெரும் அதிர்ச்சியாக இருந்தது.

செங்கமலம் ஏன் வரவில்லை! குரூர மனப்பான்மை யுடையவரின் வீட்டிலிருந்து விலகிக் கொள்வதே மேல் என்று தீர்மானித்து விட்டாளா! அல்லது,......

சத்தியமூர்த்திக்கு வேலையே ஓடவில்லை. அவருடைய குமாஸ்தா, அன்றையதினம் நடைபெற வேண்டிய வழக்குகளைப் பற்றி அவரிடம் விவாதிக்க வந்தார்.

"இந்த வழக்குகளையெல்லாம் 'ஒத்தி' வாங்கி விடுங்களேன். நான் இன்னும் கேஸ் கட்டுகளையே சரியாகப் பார்க்கவில்லை" என்று கூறி அவரை அனுப்பி வைத்தார் சத்தியமூர்த்தி.

பத்து மணிக்கு வீட்டிற்குள் நுழைந்தாள், செங்கமலம். கூடத்தை அவள் தாண்டிச் செல்வதைப் பார்த்த பங்கஜம், "செங்கமலம், ஏன் உன் முகம் இப்படி வாட்டமாயிருக்கு! ரொம்ப நேரம் கழித்து வந்திருக்கே!" என்று கேட்பது சத்தியமூர்த்தியின் செவிகளில் தெளிவாக விழுந்தது.

"குழந்தைக்கு உடம்பு சரியில்லீங்க."

அலுவல் அறையிலிருந்த சத்தியமூர்த்தியின் இதயத்தில் வலி பிறந்து மறைந்தது.

"உடம்பு சரியில்லையா! எப்போதிலிருந்து!"

"நேற்று ராத்திரியிலேருந்துங்க. என்ன மாய ஜுரமோ, தெரியல்லீங்க. இரவு முழுதும் குழந்தை கண்ணைத் திறக்கவில்லை. உடம்பு நெருப்பாக் காயுது. காலையிலே சர்க்காரு ஆசுபத்திரிக்குப் போய் மருந்துத் தண்ணி வாங்கியாந்தேன். டாக்டரு ஊசி போடணும்கிறாரு. நான் பணத்துக்கு எங்கே போறது!"

"குழந்தைக்கு உடம்பு சரியில்லேன்னா நீ ஏன் வந்தே! நான் சமாளித்துக்கொள்ள மாட்டேனா!"

சத்தியமூர்த்தி வெளியே வந்தார்.

"ஏன் பங்கஜம், அவள் குழந்தைக்கு உடம்பு ரொம்ப மோசமாக இருந்தால், நம் வீட்டு டாக்டரிடம் காட்டச் சொல்லலாமே!"

"எனக்குக்கூட அப்படித்தான் தோன்றிற்று."

"சரி, அப்போ டாக்டர் கோபுவுக்குக் கடிதம் எழுதித் தருகிறேன். அவர் குழந்தையை நேரில் பார்த்து மருந்து கொடுத்து ஊசியும் போடுவார்."

"பணம் கேட்பாங்களே!"

## கம்பராமாயண சாரம்

(மூன்றும் பாகம் யுத்த காண்டம்)

தமிழ் இலக்கியத்தின் தனிப்பெரும் செல்வமான கம்பராமாயணத்தைப் படித்து, அந்த ஒப்புயர்வற்ற தமிழ்க் காவியத்தில் நீண்ட நாள் திளைத்து, ஆராய்ச்சி செய்து, காவிய சாரத்தைக் கூற முற்பட்டிருக்கிறார் இந்நூலாசிரியர். கம்பர் கவியின்பமும், காவிய நயமும், சொல்லழகும், பொருளழகும் எல்லோருக்கும் சுலபமாக விளங்கும் வண்ணம் தாம் தேர்ந்தெடுத்துள்ள கவிதைகளுக்குப் பொழிப்புரையும், கருத்துரையும் விசேஷ உரையும் இந்நூலாசிரியர் எழுதியிருக்கிறார். இத் தொகுதியில் யுத்தகாண்டப் பகுதிகள் சில ஆராயப்படுகின்றன.

இந்நூலாசிரியர், காலஞ் சென்ற முதுபெரும் புலவர் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், தமிழ்ப் பேரறிஞர், விமரிசகர், ஆராய்ச்சியாளர்; ஆகவே அத்தகையவர் எழுதியிருக்கும் நூல் சிறப்பாக விளங்குவதில் வியப்பு என்ன இருக்கிறது!

பிரசுரம்: வெ. ப. சு. நூல் நிலையம், மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரி, திருநெல்வேலி; விலை: ரூ. 7–8–0.

---

"பணத்தைப் பற்றிக் கவலைப்படாதே, செங்கமலம். அவர் ரொம்பக் கைராசியுள்ள டாக்டர். முதலில் குழந்தையின் உடம்பைக் கவனி. மற்றவைகளைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்..."

"உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டுங்க."

சத்தியமூர்த்தி எழுதிக் கொடுத்த கடிதத்தைப் பெற்றுக் கொண்டாள் செங்கமலம்.

"குழந்தைக்கு உடம்பு சரியாகுமட்டும் நீ வீட்டு வேலைக்கு வர வேண்டியதில்லை. தினமும் வந்து குழந்தைக்கு எப்படி இருக்கிறது என்று சொல்லி விட்டுப் போ" என்றார் வக்கீல்.

கணவரின் அதீதமான அன்பைக் கண்டு பங்கஜம் அதிசய மடைந்தாள். இவ்வளவு அன்பு, இரக்கம் அவருக்குத் திடீரென்று எப்படி வந்தது!

"பாவம், நேற்றைய தினம் குழந்தையை அநியாயமாக அடித்து விட்டான். இன்றைய தினம் பலனை அனுபவிக்கும்போது மனம் வருந்துகிறது. மீனு இப்படிச் செய்திருந்தால் நாம் அவளை அப்படியா அடித்திருப்போம்!" வெகுவாக சமாளித்துக் கொண்டுதான் பேசினார், சத்தியமூர்த்தி.

'மாட்டோம்' என்று தலையை ஆட்டிய பங்கஜத்தின் மனத்திலும் இந்தக் கேள்வி தெளிவை வரவழைத்தது.

★

தினந்தோறும் தன் குழந்தையின் உடல் நிலை தகவலைத் தன் எஜமானியிடம் சமர்ப்பித்துக் கொண்டிருந்தாள் செங்கமலம்.

ஏழு நாட்கள் நகர்ந்தன.

"அம்மா......"

"குழந்தைக்கு எப்படி இருக்கு, செங்கமலம்!"

"இன்று தான் வயிற்றில் பாலை வார்த்தான்."

"நல்ல காலம்தான்."

"உங்க நல்ல மனசுதாம்மா காரணம். நீங்களும் ஐயாவும் செய்த உதவிக்கு......"

"சேச்சே, அப்படி யெல்லாம் சொல்லாதே. அப்போ, நாளையிலிருந்து வேலைக்கு வருகிறாயா!"

"சரிங்க."

எட்டு நாட்களுக்குப் பின்பு அன்றைய தினம் தன் கணவர் மிகவும் குதூகலமா யிருப்பதைக் கண்டு பங்கஜமே அதிசயமடைந்தாள். மிகச் சிக்கலான வழக்கில் வெற்றி யடைந்தால் கூட இவ்வளவு மகிழ்ச்சி ஏற்படாதே அவருக்கு!

சத்தியமூர்த்தியின் சுபாவம் அவள் அறிந்தது தான். சற்று உணர்ச்சி வசப்பட்டவர் அவர். கோபம், தாபம், மகிழ்ச்சி, அன்பு எல்லாம் கண நேரத்தில் பிறந்து அழியும் அவரிடம்!

★

"குழந்தை எழுந்து நடக்க ஆரம்பித்து விட்டானுங்க. நாளையிலிருந்து சோறு போடச்சொல்லியிருக்கார் டாக்டர். மருந்து ஒரு சீசா கொடுத்து தினமும் கொஞ்சம் கொஞ்சமா தண்ணீரில் கலந்து கொடுக்கச் சொல்லி யிருக்காருங்க."

பங்கஜம் சிரித்தாள். "அது மருந்து இல்லை, செங்கமலம். டானிக்! உடம்புக்குப் பலம் வருவதற்காகக் கொடுத்திருக்கிறார்!"

சத்தியமூர்த்தி அப்போதுதான் கச்சேரியிலிருந்து திரும்பி வந்தார்.

"செங்கமலத்தின் குழந்தைக்கு முற்றிலும் உடம்பு குணமாகி விட்டதாம். உங்களுக்கு நிம்மதிதானே!" என்று கேட்டாள் பங்கஜம்.

"நிம்மதி தான்! நாளைய தினம் குழந்தையை அழைத்து வரச் சொல்லேன். பார்க்கலாம்."

எஜமானரின் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொண்ட செங்கமலம், "நாளைக் காலையிலே அழைத்து வர்றேனுங்க" என்று பதிலளித்தாள்.

★

மறுநாள் காலை. செங்கமலம் வேலை செய்யச் சத்தியமூர்த்தியின் வீட்டிற்குள் நுழைந்தாள்.

"குழந்தையைக் கொண்டு வரவில்லையா, செங்கமலம்!" என்றார் சத்தியமூர்த்தி.

"இதோ அழைத்து வந்திருக்கேனுங்க."

அடுக்களையிலிருந்து பங்கஜமும் அலுவல் அறையிலிருந்து சத்தியமூர்த்தியும் வந்தனர்.

"இவனுக்கா உடம்பு சரியில்லாமல் இருந்தது!"

செங்கமலத்தின் அருகே அடக்க ஒடுக்கமாக நின்று கொண்டிருந்த ஐந்து வயதுப் பையனின் மேல் இருவர் கண்களும் பதிந்தன.

"ஆமாங்க. மூத்த குழந்தைங்க, இவன் நீங்க கூட பார்த்திருப்பீங்களே!" என்று எஜமானியை நோக்கியவாறே கேட்டாள் செங்கமலம்.

"பார்த்திருக்கிறேன், பார்த்திருக்கிறேன்...... ஆமாம், முன்பெல்லாம் சின்னக் குழந்தையையும் கையோடு அழைத்து வருவாயே!"

"அன்றைய தினம் அந்தப் பொம்மையைத் தள்ளி உடைத்ததிலிருந்து பக்கத்து வீட்டுப் பொண்ணு கிட்டேயே விட்டு விட்டு வந்துவிடுகிறேனுங்க. இங்கே வந்தால் ரொம்பத் தொந்தரவு பண்ணுகிறான்."

"ஓஹோ!"

செங்கமலம் தன் மூத்த மகனை நோக்கி, "ஏய், ஐயா காலிலே விழுடா. அவங்கதான் உன் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்தவங்க" என்றாள்.

"வேண்டாம் செங்கமலம், வேண்டாம். மனித யத்தனத்தில் என்ன இருக்கிறது! உன் குழந்தையைக் கடவுள்தான் காப்பாற்றினார்! நான் ஒன்றும் பிரமாதமாகச் செய்துவிட வில்லை" என்று உணர்ச்சி பூர்வமாகக் கூறிவிட்டுத் தன் அறையை நோக்கிச் செல்லத் தொடங்கிய சத்தியமூர்த்தியை, நன்றி பொங்கும் கண்களுடன் செங்கமலம் பார்த்துக் கொண்டு நின்றாள்.

பங்கஜத்தின் கைகள் அவளை அணைத்தவாறே நின்று கொண்டிருந்த மீனுவின் தலையை அன்புடன் வருடிக் கொண்டிருந்தன.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10.

# ஸன்லைட் சோப்பின் விலை குறைக்கப் பட்டுள்ளது!

லிவர் பிரதர்ஸ் (இந்தியா) லிட்., தங்கள் தயாரிப்புகளான பிரசித்திபெற்ற ஸன்லைட் சோப்; லக்ஸ் பிளேக்ஸ், இதர சோப்புகள் இவைகளின் விலைகள் கீழே தரப்பட்டுள்ளது போல் குறைக்கப்பட்டுள்ள செய்தியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறார்கள்.

| | பழைய விலை | | | புதிய விலை | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை | ரூ. | அ. | பை. |
| ஸன்லைட் சோப் | 0 | 5 | 3 | 0 | 5 | 0 |
| லக்ஸ் ப்ளேக்ஸ் — | | | | | | |
| ,, பெரிய பேக் | 1 | 9 | 0 | 1 | 8 | 0 |
| ,, நடுத்தர பேக் | 0 | 12 | 0 | 0 | 11 | 6 |
| வீல் பார் சோப் | 1 | 2 | 6 | 1 | 2 | 0 |
| எம்பிரெஸ் பார் சோப் | 0 | 14 | 6 | 0 | 13 | 6 |

சுங்க வரி தனி

**லைப்பாய் சோப், லக்ஸ் டாய்லட் சோப், விம் இவைகளின் விலைகளில் மாற்றமில்லை.**

சரியான விலையையே கொடுத்து வாங்குங்கள்

**போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்!**

L. Com. 80-X30 TM

Registered No. M 4392

*Registered as a news paper in Ceylon*










# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான அழுக்கிலிருக்கும் கிருமி களிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 246-50 TM